Regd. No. 2975

ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் - 343-344

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.

# SRI RAMANUJAN

Editor:
*Mahamahimopadhyaya*
P. B. ANNANGARACHARYA, KANCHIPURAM-631503.

வருஷச் சந்தா 10 ரு. ஜீவியச் சந்தா ரூ. 25



பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.



ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி*
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி*
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.



நாள் 1-2-1977

# சென்னையில் திருப்பாவை ஸதஸ்ஸு

(A. ராமானுஜாசாரி, B.A., 60 பெருமாள் கோயில் தெரு, சைதை, சென்னை-15)

பக்திப் பாடல்களில் ஆண்டாளின் திருப்பாவை ஒரு உயர்ந்த ஸ்தானம் வகிக்கிறது. அதன் அரிய ஆழ்பொருளின் பெருமை பண்டைக் காலத்திலிருந்து தோன்றியிருக்கும் பலபல வியாக்யானங்களிலிருந்து நன்கு விளங்கும். நமது பாஷ்யகாரர் வீதிகளில் பிக்ஷைக்கு எழுந்தருளும்போது திருப்பாவையே அநுசந்திப்பராம். வைதிகத்துறையில் அதற்குள்ள கௌரவத்தினால் விதிகளுக்கு விலக்காகவே அவ்வ மய[illegible] பாதுகை அணிவதில்லையாம்; திருப்பாவையில் அவருக்குள்ள ஈடுபாட்டின[illegible]ப்பாவைஜீயர் என்றே அவர் அழைக்கப்பட்டார். நம் ஆசாரியர்கள் திருப்பாவையை 'வேதம் அனைத்துக்கும் வித்து' என்று உத்கோஷித்தனர்; இதை அறியாத மானிடரின் சன்மம் வியர்த்தம் என்பதே அவர்களின் துணிபு.

இப்படித் தனிப்பெருமை வாய்ந்த திருப்பாவையை சுமார் 50 வருஷங்களுக்கு முன்பே நம் காஞ்சி ஸ்வாமி ஸ்ரீமான் உ. வே. ப்ர. ப. அண்ணங்கராச்சாரியார் மார்கழி மாதம் ப்ரதிதினம் ஒரு பாசுரம் வீதம் அதன் (நம் பூர்வாசார்யர்கள் அனுபவித்த) ஸ்வாபதேசார்த்தங்களை "பாருலகில் ஆசையுடையோர்க்கெல்லாம கூறும்" என்றரீதியில் உபந்யாஸம் செய்ய ஆரம்பித்தார். இந்த புதிய பத்ததி, காலக்ரமேண, எங்கும் பரவி இன்று சென்னையில் மாத்திரமல்ல, பாண்டிச்சேரி, சேலம் கோயம்புத்தூர் ஈரோட் பம்பாய், டில்லி முத[illegible] இடங்களில் திருப்பாவை உபந்யாஸம் தக்க வித்வான்களின் மூலம் நட[illegible] சென்னையில் ஒரு விசேஷம் என்ன வென்றால், மார்கழி கடைசி வ[illegible]ல இடங்களில் திருப்பாவை ஸதஸ்ஸும் நடப்பது வழக்கமாயிரு[illegible] உபந்யாஸம் செய்யும் வித்வான்கள் 10-20 ஸ்வாமிகள் ஒரே இடத்தில் கூடி ஒவ்வொருவர் ஓரிரண்டு பாசுரங்களைப்பற்றி சொற்பொழிவாற்றுவர். இப்படிப்பட்ட ஒரு சதஸ்ஸு கடந்த 17 வருஷங்களாக ஸ்ரீமான் கபிஸ்தலம் A. ஸ்ரீனிவாசய்யங்காரின் பெருமுயற்சியால் மேற்கு மாம்பலம் சாரதா பள்ளியில் நடந்து வருகிறது. இதில் பல ஜீயர் ஸ்வாமிகளும், ஸ்ரீமுதலியாண்டான் ஸ்வாமி திருமாளிகை (வைகுண்டவாசி) ஸ்ரீமான் உ. வே. ஸ்ரீசைலாச்சார்ய ஸ்வாமி போன்ற பரமவிலக்ஷணமான ஆசாரிய புருஷர்களும் தலைமை வகித்துள்ளனர். ஸ்ரீமான் உ. வே. அண்ணங்கராச்சாரியர் ஸ்வாமி அநேகமாக எல்லா வருஷங்களிலும் இந்த ஸதஸ்ஸுக்கு எழுந்தருளி அவருக்கே உரித்தான தனி சைலியில் உபந்யஸித்துள்ளார்.

இவ்வருஷம் இந்த ஸதஸ்ஸு 9-1-77 ஞாயிறன்று ஸ்ரீமான் உ. வே R V. சேஷாத்திரி அய்யங்கார் (அட்வகேட்) அவர்களின் தலைமையில் நடந்தது. ஸதஸ்ஸு காலை 10 30 மணிக்கு ஆரம்பித்து பிற்பகல் 4-மணிவரை தொடர்ச்சியாகவே நடந்தேறியது. சொற்பொழிவு மண்டபத்தில் ஸ்திரி-புருஷர்களுமாக சுமார் 1000 பக்தர்கள் குழுமியிருந்தனர். விளம்பர நோட்டீஸுகளில் வழக்கம்போல் ஸ்ரீமான் அண்ணங்கராச்சாரியரும் உபந்யாஸம் செய்வார் என்று குறிப்பிட்டிருந்தது. ஆனால் ஸ்வாமி கொஞ்ச நாட்களாகவே தேக அசௌகர்யமாயிருந்ததால்

இதன் தொடர்ச்சி ராப்பர் மூன்றும் பக்கம் பார்க்கவும்

# ஸ்ரீ ராமாநுஜன்-343



ஆசிரியர்:

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம் மஹாமஹிமோபாத்யாய பத்மவிபூஷண ஜகதாசார்ய

அண்ணங்கராசாரியர்

ஸம்புடம் 29 | நள ஆு மார்கழி மாதம் | ஸஞ்சிகை 7


**பத்ராதிபரின்விண்ணப்பம்;**-நிகழும் நள வருஷத்தில் ஆண்டாளும், திருமங்கையாழ்வாரும் திருவவதரித்ததனால் இதற்கு ஞாபகார்த்தமாகச் செய்துவரும் தொண்டுகளில், ஆண்டாள் விஷயமாக அபிநவகோதாஸ்துதி யென்றும், கோதாதேவ்யம்ருதத்வநி யென்றும் இரண்டு ஸ்துதி நூல்களைச் சென்ற திருவாடிப்பூரத்தன்று விஜ்ஞாபித்தேன். அவையிரண்டும் பொழிப் புரையுடன் ஈண்டு பிரசுரிக்கப்படுகின்றன. .... .... .... *

## அபிநவ கோதாஸ்துதி

ஸ்ரீகாஞ்சி, பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் விஜ்ஞாபித்தது.

[ஒவ்வொரு சுலோகத்திலும் நான்காவது பாதம் *பட்டமுநிபுத்ரி! ஜய நித்யமிஹ கோதே!* என்று தொடர்ந்து வரும்.]

### திருப்பாவையின் ஸாரங்கொண்ட சுலோகங்கள்-5

மார்க்கசிர ஆஹ்வய ஸுமாஸதிவஸாநாம் புண்யதமதாம் ஜகதி ஸம்யகவபோத்ய |
வேதஸமதிவ்யக்ருதி தாநகுசலே! ஸ்ரீ:! பட்டமுநிபுத்ரி! ஜய நித்யமிஹ கோதே! || 1

(பொழிப்புரை) மார்க்கசீர்ஷமென்கிற மாஸத்தின் முப்பதுநாள்களும் மிகப் புனிதமானவை யென்னுமிடத்தை உலகுக்கு நன்கு தெரிவித்து வேதத்தோடொத்த திவ்யப்பிரபந்தத்தை அருளிச்செய்தவளே! பிராட்டியே! பெரியாழ்வார் திருமகளாரான ஆண்டாளே! நிச்சலுமிங்கு வாழ்க. .... .... .... .... .... 2

கோகுலவதூஜநவிபோதநமிஷேண ஸ்ரீபதி பதாப்ஜநதபக்தமஹிமாநம் |
ஸ்பஷ்டமவபோதிதவதி! ப்ரணயபூர்ணே! பட்டமுநிபுத்ரி! ஜய நித்யமிஹ கோதே! ||

(திருப்பாவையில் *புள்ளும் சிலம்பினகாண்* என்கிற ஆறுவதுபாசுரம்முதல் *எல்லே யிளங்கிளியே!* என்கிற பதினைந்தாம்பாசுரமளவாகத்) திருவாய்பாடியிற் பெண்பிள்ளைகளை யெழுப்பும் வியாஜத்திஞல் (அப்பாசுரங்களிலுள்ள சொற்றொடர்களிஞல்) திருமாலடியார் களின் பெருமையை நன்கு விளக்கினவளே! பக்தி நிறைந்தவளே! வாழி வாழி. திருப் பாவைப் பாசுரங்களின் உள்ளுறை பொருளை முக்கியமாகக் கொண்டு இங்ஙனே பேசப் பட்டது. நமது *திருப்பாவை நறுமணமென்னும் உரையில் விரிவுகாண்க.) .... *

த்வாரபதிபோதநபுரஸ்ஸரம், உதாரம் நந்தமத தத்ப்ரணயிநீமபி யசோதாம் |
க்ருஷ்ண ஹலிநாவபி ச போதிதவதி/ஸ்ரீ:/ பட்டமுநிபுத்ரி/ ஜய நித்யமிஹ கோதே/ ॥ 3

நந்தகோபனுடைய கோயில் காப்பானை யெழுப்பி, வள்ளலான நந்தகோபனையும் அவன்றன் தேவியான யசோதைப்பிராட்டியையும் கண்ணபிரானையும் நம்பிமூத்தபிரானையுமெழுப்பின நாச்சியாரே/ வாழ்க .... .... .... .... .... *

ஸப்தவ்ருஷதர்ப்பதலநேந ஹ்ருதநீலாம் தத்குச கிரீந்த்ரதடஸுப்தமபி க்ருஷ்ணம் |
போதிதவதி/ ப்ரணயஸாரபரிபூர்ணே! பட்டமுநிபுத்ரி ஜய நித்யமிஹ கோதே! ॥ 4

எருதேழடர்த்து மணந்த நப்பின்னைப்பிராட்டியையும் அவளுடையதிருமுலைத்தடத்திலே வைத்துக்கிடந்த மலாமார்பனை கண்ணபிரானையுமுணர்த்தினவளே! அன்புமிக்க நாச்சி யாரே வாழி. .... .... .... .... .... *

கோபலலநாரசிதஸுவ்ரத விசேஷஸ்யாநுகரணேந பகவந்த முபஸ்ருப்ய |
ப்ரார்த்தித நிரந்தரமஹிஷ்ட வரிவஸ்யே/ பட்டமுநிபுத்ரி ஜய நித்யமிஹ கோதே! ॥ 5

ஆய்ச்சிகளனுட்டித்த வொருநோன்பை அநுகரித்துக் கண்ணபிரானையணுகி *உன்றன் னோடுற்றோமேயாவோ முனக்கே நாமாட்செய்வோம்* என்று நித்ய கைங்கர்ய ப்ரார்த்தனை பண்ணித் தலைக்கட்டின நாச்சியாரே! வாழி. .... .... .... *

திருப்பாவை யநுபவம் முற்றிற்று

(இனி நாச்சியார் திருமொழியநுபவ விசேஷ ச்லோகங்கள்)

கோபலலநாரசிதக்ருத்யமநுக்ருத்யாப்யச்யுத ஸமாகமஸுபாக்யவிரஹேண |
பூய இஹ பூரிகுணபோகருசிபூர்ணே! பட்டமுநிபுத்ரி! ஜய நித்யமிஹ கோதே ॥ 6

ஆய்ச்சியர் அனுட்டித்த க்ருத்ய விசேஷத்தை அநுகரித்தும் கண்ணபிரானேடு சேர்ந்தநு பவிக்கும் பாக்கியம் கிடைக்காமையினலே மேலும் பல குணவிசேஷங்களையநுபவிக்க ருசி பிறந்து திருமொழியருளிச்செய்த நாச்சியாரே! வாழ்க. .... .... .... *

(தையொரு திங்களும்)

கேசவபதாம்புருஹயுக்மபரிசர்யா கௌதுகபரேண க்ருதபஞ்சசரஸேவே! |
க்ஷாந்திகருணதிகுணபூரிதமநஸ்கே! பட்டமுநிபுத்ரி! ஜய நித்யமிஹ கோதே! ॥ 7

*தையொரு திங்களுமென்கிற முதல் திருமொழியில் *காமதேவா! கேசவநம்பியைக் கால் பிடிப்பாளென்னு மிப்பேறெனக்கருள்கண்டாய்* என்று கண்ணபிரானுடைய திருவடி வருடும்பேறு ஸித்திக்கவேணுமென்று மன்மதனை வணங்கின நாச்சியாரே! வாழ்க. .... *

காமபஜநம் பரமபக்தி பரிதாநாம் நோசிதமிதி ஸ்திதம் அதாபி பலத்ருஷ்ட்யா |
நாநுசிதமித்யமலநிர்ணயதஸுக்தே/ பட்டமுநிபுத்ரி/ ஜய நித்யமிஹ கோதே/ ॥ 8

காமதேவன் தேவதாந்தரமாகையாலே பரமைகாந்திகளுக்கு தேவதாந்தர பஜநம் கூடாதாகையாலே பெரியாழ்வார் திருமகளாரான ஆண்டாள் காம ஸமாச்ரயணம் பண்ணுவது தகுதியன்று—என்னவேண்டியிருக்கும். ஆனாலும் ஆண்டாள் பரமபுருஷார்த்தமான பகவத் கைங்கர்ய மாகிற பலத்தை யுத்தேசித்துச் செய்கையாலே கூடாமையில்லை— என்கிற நிரவத்ய மான ஸித்தாந்தத்தைத் தரும் ஸ்ரீ ஸூக்தியையுடைய நாச்சியாரே! வாழ்க. ஸ்ரீராமாயணத்தில் *ஸர்வாந் தேவாந் நமஸ்யந்தி ராமஸ்யார்த்தே யசஸ்விந:* என்றது காண்க. ஸ்ரீவசன பூஷணத்தில் "ஜ்ஞாநவிபாக கார்யமான அஜ்ஞானத்தாலே வருமவையெல்லாம் அடிக்கழஞ்சு பெறும்" இத்யாதி சூர்ணைகளின் வியாக்கியானம் ஸேவிப்பது .... .... *

ஹேதிபதிசங்கதரபூருஷவரார்ஹம் மாமகபயோதரயுகம் ந பரயோக்யம் |
இத்தமவதாரிதவதி! ப்ரணயஸிந்தோ! பட்டமுநிபுத்ரி! ஜய நித்யமிஹ கோதே! ॥ 9

*ஊனிடையாழி சங்குத்தமற்கென்று உன்னித்தெழுந்த வென்தடமுலைகள், மானிட வர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன் கண்டாய் மன்மதனே!* என்றும், மேலே (12-4) *அங்கைத் தலத்திடையாழி கொண்டானவன் முகத்தன்றி விழியேனென்று, செங்கச்சுக் கொண்டு கண்ணுடையார்த்துச் சிறுமானிடவரைக் காணில் நாணுங் கொங்கைத்தலமிவை நோக்கிக் காணீர்! கோவிந்தனுக்கல்லால் வாயில் போகா* என்றுமுள்ள பாசுரங்களை நோக்கியது இந்த சுலோகம். ஆழியங்கையனை புருஷோத்தமனுக்கே உரிய என் தடமுலைகள் காபுருஷர்களுக்கு உரியனவாகமாட்டாவென்று ஆண்டாள் தன் உறுதியைச் சொல்லிக் கொண்டாளாயிற்று .... .... .... .... ....

(நாமமாயிரமேத்தநின்ற)

ஸைகதக்ருஹப்ரணயநப்ரவணகோபீ சித்தபரிதாபகரக்ருத்யநிரதஸ்ய |
நந்ததநயஸ்ய லகுசேஷ்டிதரஸஜ்ஞே! பட்டமுநிபுத்ரி! ஜய நித்யமிஹ கோதே! ॥ 10

ஸைகதக்ருஹப்ரணயநமாவது—சிற்றிலிழைத்தல். ஆங்காங்குச் சிறுவர் சிறுமியர் களின் விளையாட்டுக்களில் இஃது ஒன்று. திருவாய்ப்பாடியி லாய்ப்பெண்கள் தங்கள் பருவத்துக்குத் தக்கபடி சிற்றிலிழைத்துக் கொண்டிருக்க, அதுகண்ட கண்ணபிரான் 'நம்மைவிட்டு இப்பெண்கள் அந்யபரைகளாக இருப்பதென்!' என்கிற ரோஷத்தாலே அச்சிற்றிலையழிக்கப்புக, அப்படியழிக்கக்கூடாதென்று வேண்டின ஆய்ச்சிகளின் பாசுரமாகப் பாடின நாச்சியாரே! வாழ்க!

(கோழியழைப்பதன் முன்னம்)

குக்குடருநாத் புரத உத்திதவதூநாம் யாமுநஜலாசயவிகாஹநரதாநாம் |
வஸ்த்ரஹரணப்ரவணமாதவரஸஜ்ஞே! பட்டமுநிபுத்ரி! ஜய நித்யமிஹ கோதே! ॥ 11

கோழியழைப்பதன் முன்னமே யெழுந்து எழுனையாற்றின் ஒருபொய்கையிலே (க்ருஷ்ண விரஹதாபந்தீர) நீராடப்போன ஆய்ப்பெண்களைப் பின்சென்று (இருளிலே மறைந் திருந்து) அப்பெண்களின் ஆடையாபரணங்களைக் கவர்ந்த கண்ணன் குருந்தமரத்தின்மீது வீற்றிருக்கக்கண்ட ஆய்ச்சிகள் அவனைத் தொழுவதும் அழுவதுமாய் இரந்த செய்தியைப் பேசின நாச்சியாரே! வாழ்க.

(தெள்ளியார் பலர்)

நந்தஸூதஸங்கமந பாக்யமிஹ சேந்மே ஸங்கமநதைவத! கடஸ்வ க்ருபயேதி |
கேலநரதவ்ரஜவதூஜநஸத்ருக்ஷே! பட்டமுநிபுத்ரி! ஜய நித்யமிஹ கோதே!॥ 12

கூடலிழைத்தலென்பது பெண்களின் செயல்களில் ஒன்று, கூடல்தெய்வமென்று ஒரு தெய்வம். கண்ணைமூடிக்கொண்டு கீழே பலபல கோடுகளைக் கீறிவிட்டு, பிறகு கண்ணைத்

திறந்துகொண்டு அக்கோடுகளை எண்ணிப் பார்க்கையில் இரட்டைக்கோடாக முடிந்தால் இரண்டு பேராக [தம்பதிகளாக] வாழ்வோம் என்று மகிழ்வது; ஒற்றைக்கோடாக மிச்சப் பட்டால் நாம் தனியாக நின்று துவள்வோம் என்று வருந்துவது...... ....கூடல் தெய்வத்தை நோக்கி "எனக்கு எம்பெருமானோடு கூடும் பாக்கியம் வாய்க்குமானால் நீ கூடு" என்று சொல்லிக் கோடுகளைக் கீறுவது இந்த விளையாட்டின் தன்மை. இங்ஙனமாக விளையாடின ஆய்ச்சிகளை அநுகரித்த நாச்சியாரே! வாழ்க. ... *

(மன்னுபெரும்)

ப்ரேமபரிபோஷிதவநப்ரியமவேக்ஷ்ய த்வம் ஸபதி வேங்கடமஹீத்ரபதிமத்ர |
ஆகமய ஸங்கமய சேதி க்ருதவாக்யே! பட்டமுநிபுத்ரி! ஜயநித்யமிஹ கோதே! ॥ 13

ஆண்டாள், தன்னுடைய தோட்டத்தில் வளரும் குயிலைநோக்கி 'நீ ஏதோ கூவிக்கொண்டிருக்கிறாய்; திருவேங்கடமுடையான் இங்குவந்து என்னோடு கூடும்படி கூவாய் என்றுரைத்தாள் இப்பதிகத்தில்; அந்த ஆண்டாளுக்கு வாழ்த்து, .... .... .... *

(வாரணமாயிரம்)

வாரணஸஹஸ்ரவ்ருதமச்யுதமநந்தம் ஸ்வப்நமுகத: பதிமவாப்ய பரிதுஷ்டே! |
மத்தகஜமஸ்தகநிஷண்ணபதியுக்தே! பட்டமுநிபுத்ரி! ஜய நித்யமிஹ கோதே! ॥ 14

கண்ணபிரான் ஆயிரம் யானைகள் [*தன்னேராயிரம் பிள்ளைகள்] சூழ வந்து தன்னை மணம் புணர்ந்ததாகவும், அவனோடுகூட யானையின்மீது வீற்றிருந்து ஊர்வலம் வந்ததாகவும் கனாக் கண்ட ஆண்டாளே வாழி. .... .... .... .... *

(கருப்பூரம் நாறுமோ)

நந்தஸுதவக்த்ரரஸஸௌரபவிசேஷம் ப்ரூஹி நநு பஞ்சஜநஜாத! மம த்ருப்த்யை |
இத்தமபிதாய பரிஹ்ருஷ்டஹ்ருதயே!ஸ்ரீ:! பட்டமுநிபுத்ரி! ஜய நித்யமிஹ கோதே! ॥ 15

இமே கண்ணபிரானோடு விளைந்த போகம் நனவன்றிக்கே கனவாக முடிந்ததற்கு வருந்தி மெய்யாகவே கண்ணனை யநுபவிக்கும் பாக்கியமுடையார் உளரோ? என்று ஆலோசிக்கையில் திருச்சங்காழ்வான் அந்த பாக்கியம் பெற்றவனென்று உணர்ந்து அவனோடு உசாவின நாச்சியாரே! வாழி. .... .... .... .... *

(விண்ணீலமேலாப்பு)

வ்யோமகதமேசகவிதாநஸமமேகம் பாஷ்பபரிபூர்ணநயநேந ஸஹ வீக்ஷ்ய |
சேஷகிரிநாதவசநாய க்ருதயாச்ஞே! பட்டமுநிபுத்ரி! ஜய நித்யமிஹ கோதே! ॥ 16

விண்ணுலகில் நீலமேலாப்பு விரித்தாற்போன்று காட்சி தந்த கருமுகிலைக் கண்ணீர்கள் துளிசோரக் கண்டு, திருவேங்கடமுடையான் பக்கல் தூது செல்லுமாறு வேண்டின நாச்சியாரே! வாழி. .... .... .... .... .... *

(சிந்துரச்செம்பொடி)

ஸுந்தரபுஜாய சதபாண்டநவநீதம் ஸ்வாது மதுராந்நமபிசார்ப்பயிதுமாசாம் |
ப்ரோக்தவதி! பூதபுரயோகிஸஹஜாதே! பட்டமுநிபுத்ரி! ஜய நித்யமிஹ கோதே! ॥ 17

திருமாலிருஞ்சோலை நின்ற சுந்தரத்தோளுடையானுக்கு நூறு தடாவில் வெண்ணெயும், நூறுதடா நிறைந்த அக்காரவடிசிலும் வாய்நேர்ந்து பராவி வைத்துப் பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானாளென்று பேர்பெற்ற நாச்சியாரே! வாழி [ஸ்வாதுகலசாந்நம் என்னவுமாம்; =கலசமென்று க்ஷீரத்திற்குப்பெயர். *கலசஜலநிகந்யா* இத்யாதி காண்க.] .... *

(கார்க்கோடல் பூக்காள்)

வ்ருஷ்டிபல புல்லவநபுஷ்பததித்ருஷ்ட்யா கேதமதிமாத்ரமதிகத்ய ருதிதை: ஸ்வை: |
வ்ருக்ஷவிததேரபி ச ஸஞ்ஜநித கேதே! பட்டமுநிபுத்ரி! ஜய நித்யமிஹ கோதே! || 18

*விண்ணீல மேலாப்புப்பதிகத்தில் திருமலையப்பன்பக்கல் தூது செல்லவேணுமென்று இரந்தாளன்றே ஆண்டாள்; அந்த மேகங்கள் தூது செல்லாமல் நன்றாக வர்ஷிக்க, அதனால் காட்டுப் பூக்களெல்லாம் மலர்ந்தனவாக, அவை கண்ணபிரானுடைய திவ்யாவயவங்களுக்கு ஸ்மாரகங்களாய் நலிய, மிக வருந்திக் கதறி மரங்களையுமிரங்கச் செய்தாள் ஆண்டாள்; அவள் வாழ்க. .... .... .... .... .... .... *

(தாமுகக்கும் தங்கையில்)

பூமிதநயாதரணிருக்மிஸஹஜாஸுக ஸ்ரீரமணஸாதித பரிச்ரமகதாபி: |
ஸ்வப்ரணய ரோஷமுபதர்சிதவதி! ஸ்ரீ! பட்டமுநிபுத்ரி! ஜய நித்யமிஹ கோதே! || 19

*தாமுகக்குந் திருமொழியில் *உண்ணாதுறங்காது* என்கிற பாசுரத்தில் ஸீதாபிராட்டிக்காக அவன்பட்ட பரிச்ரமங்களையும், *பாசிதூர்த்துக்கிடந்த* என்கிற பாசுரத்தில் பூமிப்பிராட்டிக்காக அவன்பட்ட பரிச்ரமங்களையும், *கண்ணாலங் கோடித்து* என்கிற பாசுரத்தில் ருக்மிணிப் பிராட்டிக்காக அவன்பட்ட பரிச்ரமங்களையும் பேசி ப்ரணய ரோஷத்தைக் காட்டின நாச்சியாரே! வாழி. இந்த சுலோகத்தில் மூன்றாவது பாதத்தை *வ்யஞ்ஜித நிஜப்ரணய ரோஷபஹுமாநே!* என்பதாகவுங் கொள்ளலாம். ப்ரணய ரோஷத்தை மட்டுமன்றிக்கே *பன்றியாந் தேசுடையதேவர்—பேசியிருப்பனகள்* என்று பெருமதிப்பையுங் காட்டியிருப்பது காண்க. .... .... .... .... *

ஸிந்துவ்ருதபூமிதலம் அம்பரதலம் தத் ஸுஷ்டு பரிபாலயதி ரங்கபுரநாதே |
அப்ரதிம பக்திபரபூஷிதமநஸ்கே! பட்டமுநிபுத்ரி ஜய நித்யமிஹகோதே! || 20

*பொங்கோதஞ் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும் அங்காதுஞ்சோராமே ஆள்கின்ற செங்கோலுடைய திருவரங்கச் செல்வனார் பக்கல் சிறந்த பக்திகொண்ட நாச்சியாரே! வாழி.

(மற்றிருந்திர்கட்கு)

திவ்யமதுராநகரமுக்யநவதேசாந் ப்ரோச்ய, நநு! மாம் நயத தத்ர ஸஹஸேதி |
ப்ரார்த்திதவதி! ப்ரசுர பக்திரஸசித்தே! பட்டமுநிபுத்ரி ஜய நித்யமிஹ கோதே || 21

வடமதுரை, திருவாய்ப்பாடி, நந்தகோபர்திருமாளிகை, எமுனைக்கரை, காளியன் பொய்கை, பக்தவிலோசனம், பாண்டிவடம், கோவர்த்தனம், துவராபதி—ஆகிய ஒன்பது இடங்க யெடுத்துக்கூறி அங்கங்கெல்லாம் தன்னைக் கொண்டுபோய் விடும்படி உற்றுருறவினரை வேண்டின நாச்சியாரே! காதல் களஞ்சியமே! வாழி. .... .... *

(கண்ணனென்னுங்கருந்தெய்வம்)

க்ருஷ்ணகடிவஸ்த்ரம் அத தத்பதபராகம் வேணுரஸுஷிரோத்தஜலபிந்துமபி தூர்ணம் |
ஆநயத ஹர்ஷயத சேதி க்ருதவாக்யே! பட்டமுநிபுத்ரி ஜய நித்யமிஹ கோதே! || 22

கண்ணனென்னுங் கருந்தெய்வத்தின் அரையில் பீதகவண்ணவாடையும் அடிப்பாட்டில் பொடியையும் அவனூதிவருகின்ற குழலின் துளைவாய் நீரையுங்கொணர்ந்து விரைவில் என்னைத் தேற்றுங்கோள்! என்று பணித்த நாச்சியாரே! வாழி வாழி. .... .... *

(பட்டிமேய்ந்து)

அக்ரஜஹலாயுதஸஹாய இஹ ப்ருந்தாரண்யபுவி வீக்ஷித இதீரிதவசோபி: |
அப்ரதிமஹர்ஷவிவசீக்ருதமநஸ்கே! பட்டமுநிபுத்ரி! ஜய நித்யமிஹ கோதே! || 23

நம்பி மூத்தபிரானுடன் செல்பவனை கண்ணபிரானை விருந்தாவனத்தே கண்டோமென்று பலகால் சொன்ன பேச்சுக்களாலே நிகரற்ற மகிழ்ச்சிகொண்டநாச்சியாரே! வாழி வாழி. *

துர்க்கடம்ருஷாவசநபாஷணபடீயாந் கிம் நநு முகுந்த இஹ த்ருஷ்ட இதி ப்ருஷ்ட்வா |
ஜக்ஷி யமுநாதட இதீரிதவசோபி: ஹ்ருஷ்டஹ்ருதயா ஜயது நித்யமிஹ கோதா || 24

*ஏலாப் பொய்களுரைக்க வல்ல கண்ணபிரானை இங்குக் கண்டாருண்டோ? என்று வினவி, எமுனையாற்றங்கரையில் விருந்தாவனத்தில் கண்டோமென்று சொன்ன சொற்களாலே திருவுள்ளமுகந்த நாச்சியார் நீடூழி வாழ்க. ... .... .... ... *

மாதவமலிம்லுச முராரிரிஹப்ருந்தாரண்யபுவித்ருஷ்ட இதி பாஷணமிஷேண |
வ்யஞ்ஜிதமுகுந்தபரிரம்பரஸபோகே! பட்டமுநிபுத்ரி! ஜயநித்யமிஹகோதே! || 25

ஜாரசோரசிரோமணியான கண்ணனை விருந்தாவனத்தே கண்டோம் கண்டோம் என்று பாசுரமிட்டதனால் கண்ணபிரானோடு கூடியநுபவித்து மையல் தீர்ந்தபடியைத் தெரிவித்த நாச்சியாரே! வாழி. ... .... .... ... .... .... ¤

தந்விநவ பத்தநஜபட்டமுநிபுத்ரீ–கீதக்ருதிரத்நயுகலார்த்தமவபோத்ய |
காஞ்ச்யுதிதவாதிபயக்ருத்குருகுலீநோ தாஸஇமமாஹமதுரம் ஸ்துதிநிபந்தம்! || 26

வில்லிபுதுவை விட்டுசித்தர் திருமகளார் அருளிச்செய்த இரண்டு திவ்யப்ரபந்தங்களின் மஹார்த்த ஸாரத்தை யுணர்த்தி ஸ்ரீகாஞ்சி ப்ரதிவாதி பயங்கர ஸ்ரீ வைஷ்ணவதாஸன் இத்துதி நூலை பக்தபோக்யமாக இயற்றினான். .... .... .... ... *

அபிநவ கோதாஸ்துதி முற்றிற்று.

## 2. கோதாதேவ்யம்ருதத்வநி:

க்ஷிதிதல க்ருதஜநிஜநகஸுதாவத் நிஜபித்ருவிரசிததுலஸிவநோத்தே! |
ஹரிரிஹ மம பதிரிதி த்ருடசித்தே! ஜயஜய யதிபதிஸஹஜநி கோதே! || 1

பூதலத்தில் நின்றும் தோன்றிய ஸீதாபிராட்டிபோல் திருத்தந்தையாரான பெரியாழ்வார் சமைத்த திருத்துழாய்வனத்தில் நின்றும் [அயோநிஜையாய்த்] தோன்றினவளே! எம்பெருமானே எனக்குக் கணவனென்று திடமான உறுதி கொண்டவளே! பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னான கோதையே! வாழி.

மம குசயுகமிதம்வரஜநார்ஹம் கதமபி நபவிதுமுசிதமிதீஹ |
ப்ரகடிதநிஜத்ருடமஹிதமநஸ்கே! ஜயஜய யதிபதிஸஹஜநி கோதே! || 2

¤கொங்கைத் தலமிவை நோக்கிக் காணீர் கோவிந்தனுக்கல்லால் வாயில் போகா* என்கிற பாசுரத்தினால் தன்னுடைய த்ருடாத்யவஸாயத்தை வெளியிட்ட கோதையே! வாழி.

பதயுகதஸுரகண நுதகீர்த்தே! நிஜகசவிநிஹிதஸுமஹ்ருத காந்தே! |
வடதலசயஹரிஸஹசயநார்ஹே! ஜயஜய யதிபதிஸஹஜநி கோதே! || 3

திருவடியிணைகளில் வணங்கின அமரர் திரளால் புகழப்பட்ட கீர்த்தியையுடையவளே! தனது கூந்தலில் சூடிக் களைந்த மாலையினால் கணவனை வசப்படுத்திக் கொண்டவளே! வட பெருங்கோயிலுடையானுடைய தேவியே வாழி. .... .... .... .... *

வநகிரிபதிஹரிஹ்ருதயநிஷண்ணே! வ்ருஷகிரிவரபதிபதயுகலீநே! |
பணிபதிசயஹரிஹ்ருதயஹரோக்தே! ஜயஜய யதிபதிஸஹஜநி கோதே! || 4

திருமாலிருஞ்சோலை யழகருடைய திருவுள்ளத்தில் வீற்றிருப்பவளே! திருவேங்கடமுடையானுடைய திருவடியிணைகளில் லயித்திருப்பவளே! அரங்கத்தரவினணையானுடைய திருவுள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் ஸ்ரீஸூக்திகள் பணித்தவளே! வாழி வாழி. .... .... *

வ்ரஜபதிவஸுஸுதபரிணயகாமாத் பஹுவிதக்ருதிததிவிரசநிரதே! |
வ்ரஜபுவி யுவதிஷு நிஹிதமநஸ்கே! ஜயஜய யதிபதிஸஹஜநி கோதே! || 5

ஆயர்பாடிகவர்ந்துண்ணும் வஸுதேவஸூநுவான கண்ணபிரானைத் திருமணம் புணர விரும்பி நோன்பு நோற்பது, காமன் கழல்தொழுவது, கூடலிழைப்பது, தூதுவிடுவது முதலான பல செயல்களைச் செய்வதில் ஊக்கங் கொண்டவளே! ஆயர்பாடிப் பெண்களை அநுகரிப்பவளே! வாழி. .... .... .... .... .... *

விதி சிவஸுரபதி நதபதயுக்மே! நிஜதநுருசிஹ்ருதமுராரிபுசித்தே! |
ஜலதர ஸமருசி ஹரிதநுஸக்தே! ஜயஜய யதிபதி ஸஹஜநி கோதே! || 6

பிரமன் சிவனிந்திரன் தொழும் திருவடிகளையுடையவளே! தனது வடிவழகினால் கண்ணபிரானுடைய சிந்தையைக் கவருமவளே! முகில் வண்ணனான கண்ணனுடைய திருமேனியில் ஆழ்ந்தவளே! வாழி. .... .... .... .... *

வநபுவி விகஸிதஸுமததித்ருஷ்ட்யா நிஜஹ்ருதி ஸமுதிதவிக்ருதிபலேந |
பஹுவித விலபநகலுஷித சித்தே! ஜய ஜய ஹரிபரிணயகர கோதே! || 7

காட்டில் விகஸித்த பூக்களைக் கண்டதனால் மநோவிகாரமடைந்து பலவாறு கதறிக் கடைசியாகக் கண்ணனை மணந்துகொண்ட நாச்சியாரே! வாழி. *

கரிகிரிசிகரகவரத பதாம்போருஹயுக விநிஹிதநிஜ ஹ்ருதி தாஸே |
திச த்ருசமநுதிந மநிசமஜஸ்ரம் மம கதிரஸி கலு முநிவரதநயே! || 8

பெரியாழ்வார் திருமகளாரே! திருவத்திமாமலையில் வாழும் பேரருளாளனடியிணைகளை உள்ளத்துக்கொள்ளு மடியேன்மீது கடைக்கண்ணோக்கை எஞ்ஞான்று மெப்பொழுது மருளவேணும். எனக்கு நீரேயன்றோ தஞ்சம்.

அண்ணங்கரார்ய ரசிதோ கோதாதேவ்யஷ்டகாத்மக: |
அம்ருதத்வநிராகர்யாணாம் அஸ்து கர்ணரஸாயநம்.

அம்ருதத்வநி முற்றிற்று.

# உபயகலையாரும் உபேக்ஷியாதே ஊன்றிக் கடாக்ஷிக்க.

*

சென்னை மாநகரில் 3-12-76 முதல் 12-12-76 வரை நடந்த நான்கு விசேஷங்களைப் பற்றி அடுத்தபக்கம் முதல் விரிவாக எழுதி வெளியிட்டிருக்கிறேன். அதிலும் நான்காவதான ஐக்கிய வைணவ இயக்கத்தைப்பற்றி மிக விரிவாக எழுதியிருக்கிறேன். அதைப்பற்றிச் சுருக்கமாகவும் ஸாரமாகவும் இங்கு விஜ்ஞாபிக்கிறேன். இந்த ஐக்கியப் பேச்சு அர்த்த மற்றதாக இருக்கக்கூடாது. நமது ஸ்ரீவைஷ்ணவஸமூஹத்தில் வடகலையார் தென்கலையார் என்கிற வ்யவஹாரம் எக்காலத்தில் ஏற்படத் தொடங்கிற்று? எந்த நிமித்தங் கொண்டு ஏற்பட்டது? என்பது பற்றி எந்தப் பெரியவரைக் கேட்டாலும் த்ருப்திகரமான பதில் கிடைப்பதில்லை. அடியேனுடைய மாதாமஹ ஸ்ரீஜீயர் ஸ்வாமி ஒருகால் ஸாதிக்கக் கேட்டது நினைவுக்கு வருகிறது; சில தேவஸ்தானங்களில் ஸ்ரீவைஷ்ணவர்களுக்குள் சச்சரவு ஏற்பட்டு நீதிமன்றங்களில் வழக்குகள் தொடர்ந்த காலத்தில் ரிகார்டுகளில் ஏறியிருக்கும் வ்யவஹார மிது; யூ(u)மார்க்கு ஒய்(y)மார்க்கு என்று ஆங்கிலப் பிரபுக்கள் வழங்கினராம். பிராமணர்களான அதிகாரிகள் தென்கலையார் வடகலையார் என வழங்கி வந்தார்களாம். அது நிற்க. ஸ்ரீவைஷ்ணவ ஸமுதாயத்திற்கு பகவத் ராமாநுஜதர்சனஸ்தர்கள் என்கிற வ்யபதேச மொன்றே இருநூறாண்டுகட்கு முன் வரையில் இருந்து வந்ததென்பது நிஸ்ஸந்தேஹம். பகவத் ராமாநுஜ சிஷ்ய பரம்பரையில் ஸ்வல்பயோஜநாபேதமே யொழிய அர்த்த விரோதமில்லையென்று தேசிகன் ஸாதித்திருப்பதை உபயகலையாரும் சொல்லிக்கொண்டும் எழுதிக்கொண்டும் வருவதற்குப் பயனொன்றும் காணவில்லை. அர்த்த விரோதங்கள் பல பல இருப்பதாகக் கொண்டு போராடி வருவதுதான் காண்கிறது. இது அசட்டுத்தனமான— நிராதாரமான போராட்டமென்றே அடியேனுடைய திடமான கொள்கை. விவாதவிஷயங்கள் சிலவற்றையெடுத்துக் கொண்டு "இது வடகலையாருடைய கொள்கை" என்று சொல்லலாமே யொழிய தேசிகஸித்தாந்தமென்று சொல்லலாகாதென்றும், அப்படிச் சொல்வதற்கு ஔசித்யலேசமுமில்லை யென்றும் அடியேனுடைய நூல்களினால் ப்ராமாணிக பண்டிதர்கள் நன்கு உணர்வர். மேலே "க்ருபாயாம் ப்ரபத்த்யாம் ரமாயாம் தயாயாம்" என்கிறவொரு சுலோகத்தையெடுத்துக் கொண்டு ஒரு பத்துவிஷயங்களில் ஸ்வாமி தேசிகனுடைய திருவுள்ளத்தை மட்டும் அவருடைய ஸ்ரீஸூக்திகளை மட்டுங்கொண்டு உபபாதித் திருக்கிறேன். தேசிகன் நிஷ்கர்ஷித்தருளின அர்த்தங்களும் மற்றையாசாரியர்கள் நிஷ்கர்ஷித் தருளின அர்த்தங்களும் வேறுபாடோ மாறுபாடோ இல்லாமல் ஒத்திருப்பவைகளே யென்பதைக் கையிலங்கு நெல்லிக்கனியாகக் காட்டியிருக்கிறேன். இருள் துயக்கு மயக்குமறப்புகளுக்கு அடியேன் தூரஸ்தனல்லேன். அவை நிரம்பியவனே யாதலால் அடியேன் எழுதியவை பொருத்தமற்றவையாகவுமிருக்கலாம். அந்தப்பொருத்தமின்மையை ப்ராமாணிக வித்வான்கள் கோபதாபமின்றி ஸரளமான நடையில் நிரூபித்து, அடியேனையும் அடியேனது சுவடிகளில் மயங்கியிருப்பவர்களையும் தெளிவு பெறுத்தவேண்டுவது மிகவும் ஆவச்யகம். "அவனுக்கென்ன வேலை! பாடின பாட்டையே பாடிக்கொண்டிருக்கிறான்" என்று சில அறிவிலிகளும் அசக்தர்களும் சொல்லிக்கொண்டிருப்பது போலச் சொல்லி விடலாகாது. *ராமோ லக்ஷ்மணமப்ரவீத்* என்பதற்கு 'லக்ஷ்மணன் ராமனைப் பார்த்துச் சொன்னான்' என்று ஒருவன் பொருள் கூறினால் அதைப் பண்டிதர்கள் திருத்திக் கொடுக்கவில்லையா? "ப்ராரப்த்முத்தமகுணாந் அபரித்யஜந்தி" என்று சொல்லி, 'உத்தமசிலர்களையும் ப்ராரப்தகருமம் விடாது' என்று ஒருவர் பொருளுரைத்தால் அதைவிவேகிகள் திருத்திக் கொடுப்பதில்லையா? இங்ஙனே எத்தனையோ திருத்தங்கள் காட்ட வேண்டியவையுள. இந்த ரீதியில், அடியேன் எடுத்துக்காட்டியுள்ள தேசிக திவ்ய ஸூக்திகளை ஒன்றுவிடாமலெடுத்துக்கொண்டு விக்ருதிலேசமுமின்றிக்கே "அண்ணா! இங்கு நீ மருண்டிருக்கிறாய்; இதற்கு அப்படி அர்த்தமன்று, இப்படி அர்த்தங்காண்" என்று புன் முறுவலோடே ஸாதித்தருளி அடியேனைத் திருத்திப் பணிகொள்ளவேணுமென்று தெண்டனிட்டுப்பிரார்த்திக்கிறேன்.

ஸ்ரீ

எம்பெருமானார் திருவடிகளே சரணம்

# சென்னையில் நான்கு விசேஷங்கள்

(ஸ்ரீ காஞ்சி பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர்.)

(3-12-76 to 12-12-76)

நான்கு விசேஷங்களாவன:—ஸ்ரீமத் பரமஹம்ஸ. த்ரிதண்டி ஸ்ரீமந்நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமிகள் மூலமாக அமைந்தவை மூன்று விசேஷங்கள். ஐக்கிய வைணவஸபையாருடைய ஸம்மேளனத்திலாயது நான்காவது விசேஷம்.

## (இந்நான்கு விசேஷங்களின் சுருக்கமான விவரணம்.)

—முதல் விசேஷம்—

1. ஸத்ய ஸங்கல்ப ஸ்வாமியென்று ஸர்வ லோக ஸாக்ஷிகமான விருதுபெற்ற ஸ்ரீமந் நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமிகள் சென்னை (G.T.) வரதாமுத்தியப்பன் வீதியில் ப்ரதிஷ்டாபனம் செய்திருக்கிற கீதா மந்திரம் என்று ஸுப்ரஸித்தமான பவனத்திற்கு இருபத்தைந்து ஆண்டுகள் நிரம்பின படியால் அதையிட்டு ரஜதோத்ஸவம் 3-12-76 புதன்கிழமை முதலாக மூன்று நாள் அந்த கீதாமந்திரத்திலேயே நடைபெற்றது. பல வித்வான்களின் உபந்யாஸங்களும் ஆண்டாள் கோஷ்டியாரின் ஸமாஜமும் மிகச் சிறப்பாக நடைபெற்றன. [ஸ்ரீ ஜீயர் ஸ்வாமி நடத்தியருளின விசேஷமென்றால் அதன் சிறப்பைப்பற்றி விரித்துரைக்க அவசியமேயில்லை. இது உலகமறிந்த விஷயமாதலால் 'நடைபெற்றது' என்றெழுதினாலே போதுமானது ]



—இரண்டாவது விசேஷம்—

2. அதற்குப் பிறகு, ஸ்ரீ ஜீயர் ஸ்வாமியின் உபய வேதாந்தாசார்ய பீடத்தின் வார்ஷிகஸபை T. நகரில் கோடா. ஸ்ரீநிவாஸய்யாவின் ராமாநுஜகூடத்தில் 8, 9, 10 ஆகிய மூன்று தேதிகளில் பரமவிலக்ஷணமாக நடைபெற்றது இதிலும் பலவித்வான்கள் அங்வயித்துச் சிறப்பித்தனர். வித்யார்த்திகள் பரீக்ஷிக்கப்பட்டுப் பரிசளிக்கப் பெற்றனர். அடியேனுடைய உபந்யாஸத்தின் முடிவில் ஒரு சுலோகம் விஜ்ஞாபித்து விவரித்ததை மட்டும் இங்குச் சுருக்கமாக விண்ணப்பிக்கிறேன்.

புவி கதி ந ஸந்தி யதய: தேதே த்ரவ்யாண்யுபார்ஜ்ய ரக்ஷந்தி ।
அதிதைவ கார்ய கர்த்தா ஸ்ரீமந்நாராயணஸ்ஸூர்யயதி ரேக: ॥

(கருத்து) இந்நிலவுலகில் எத்தனையோ யதிகள் (மடாதிபதிகள்) எழுந்தருளியிருக்கிறார்கள். அவரவர்கள் விசேஷமாகப் பொருளீட்டிச் சேம வைப்பாக வைக்கிறார்களத்தனை.

அதிமாநுஷம் என்பதற்கு மேல், அதிதைவம் என்றும் சொல்லும்படியான [ஒருவருடைய சிந்தைக்கும் கோசரமல்லாத] செயல்களைச் செய்தருள்பவர் கடல் சூழ்ந்த இம்மண்ணுலகில் ஸ்ரீமந் நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி யொருவரே-என்பதாம்.

—மூன்றாவது விசேஷம்—

3. ஸ்ரீ ஜீயர் ஸ்வாமியின் அமாநுஷச் செய்கைகளில் இப்போது ஒன்றிரண்டு வருஷகாலமாக ஸ்வாத்யாயஜ்ஞாநயஜ்ஞம் என்ற பெயரால் ஆங்காங்கு யஜ்ஞங்கள் நடத்தப் பட்டு வருகின்றன. ஸமீபகாலத்தில் சேலம், ஈரோடு, கோயம்புத்தூர் என்னும் நகரங்களில் நடைபெற்ற விஷயம் ஸுப்ரஸித்தம். இப்போது இருபத்திரண்டாவது யஜ்ஞம் சென்னை மாநகரில் (T.Nagarல்) சிவவிஷ்ணுவாலயத்தின் பரிஸரத்தில் வேதாரண்ய மஹாமண்டபத்தில் [*ககநம் ககநாகாரம் ஸாகரஸ் ஸாகரோபம:*] என்னும் படியான முறையில் 7 நாள் நடைபெற்றது. ஸகல வேத வேதாங்க பாராயண ப்ரவீணர்கள் குழுமியிருந்தது அற்புதம்! ஆச்சரியம்!! என்னத் தகுமத்தனை.

# - நான்காவது விசேஷம் -

சென்னை முதலான சில மஹாநகரங்களிலுள்ள தென்கலை வடகலைப்பிரமுகர்கள் பலர் கூடி ஐக்கியவைணவ சங்கம் என்று ஏற்படுத்தியிருப்பது தென்னாடுமுழுவதும் அறிந்ததாகும். இதற்குத்தலைமையாபீஸ் சென்னையிலுள்ளது கிளையாபீஸ்கள் பலவிடங்களிலுள்ளன. இச் சங்கத்தின் சார்பில் அடிக்கடி ஆங்காங்கு ஸம்மேளனங்கள் நடைபெறுகின்றன. சென்னையில் ஸ்ரீமான் உவே. (லிப்கோதலைவர்) கிருஷ்ணஸ்வாமிசர்மா அவர்கள் செந்தமிழ் வேதியர் ஸ்ரீஉவே. குமாரவாடி ராமாநுஜாசாரியர் ஸ்வாமி முதலான பல மஹான்கள் இந்த ஐக்கிய இயக்கத்தில் மிகவும் ச்ரத்தை கொண்டு பலவழிகளிலும் பலவாறாக உழைத்து வருவதனால் அச்சங்கம் மூலமாக உலகுக்குச் சிறந்த நன்மைகள் ஏற்படக் கூடுமென்கிற நம்பிக்கை யுள்ளது. ஸ்ரீமத்பரமஹம்ஸ ஸ்ரீமந்நாராயண ராமாநுஜஜீயர் ஸ்வாமி தற்காலம் (இரண்டு வாரம்) எழுந்தருளியிருக்குமிடமான (Kota Srinivasaiya) ராமாநுஜ கூடத்தின் மேல்மாடி ஹாலிலேஅகில இந்திய ஐக்கிய வைணவமகாநாடு 11, 12 தேதிகளில் காலைமாலைகளில் மிகவும் கொண்டாடவும் வியக்கவும் தக்க முறையில் நடைபெற்றது. உலகம் நிறைந்த புகழாளர்கள் பலர் கூடினர், பேசினர், போற்றினர் ... ... .... ....

12-12-77 (ஞாயிற்றுக் கிழமை) பிற்பகலில் ஷை ஸபையின் சார்பில் அடியேனுடைய ப்ரஸங்கம் நடைபெற்றது. 11-12-76 சனிக்கிழமை முதல் நாள் காலையிலும் அடியேனது சொற்பொழிவொன்று நடந்தது. அது தினசரிப்பத்திரிகைகளில் பிரசுரமாகியிருப்பது.

12உ பிற்பகலில், ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனபத்ராதிபரான ஸ்ரீமதுபயவே. புத்தூர் S. கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் M. A. B. L. Advocate ஸ்வாமியின் ஆத்யக்ஷயத்தில் விளக்கமாக விண்ணப்பித்த விஷயங்களின் ஸாராம்சம் வருமாறு.

உலகத்தில் எண்ணிறந்த மதங்கள் தோன்றியுள்ளன. இதைப் பற்றி இங்கு நான் விவரிக்க வேண்டியதில்லை. நம்மாழ்வார் தமது முதற்பிரபந்தமான திருவிருத்தத்தில் "வணங்கும் துறைகள் பலபலவாக்கி, மதிவிகற்பால் பிணங்குஞ்சமயம் பலபலவாக்கி, அவையவை தோறணங்கும் பலபலவாக்கி நின் மூர்த்தி பரப்பிவைத்தாய் .... .... ..." என்றருளிச் செய்துள்ளது ஸுப்ரஸித்தம். [இந்தப் பாசுரம் ஸபையில் விளக்கியுரைக்கப்பட்டது ப்ராஹ்மணஸமூஹத்திற்குள் தென்னிந்தியாவிலும் வட இந்தியாவிலும் எத்தனை வகுப்புகள் உள்ளன வென்பது கணக்கிட முடியாதது. ஸ்ரீவைஷ்ணவ ஸமூஹத்தில் தென்கலை வடகலை என் கிற இரு வகுப்புகள் எங்கும் ஏற்பட்டிருப்பது ப்ரஸித்தம். இந்த இரு வகுப்புகளுக்குள் பரஸ்பர

வைரஸ்யத்தைப் போக்கி ஸாமரஸ்யத்தை யுண்டாக்கவேணுமென்கிற விசால நோக்கத்துடன் இருகலையிலுமுள்ள பலபல பெரியார்கள் [வைதிக லௌகிகப் பிரமுகர்கள்] தீவிரமான முயற்சி கொண்டிருப்பது உலகத்தின் பரமபாக்யம்.

இருகலையினுள்ளும் பேதமிருப்பது வாஸ்தவம். அந்த பேதத்தை இரண்டுவிதமாகக் காண்கிறோம். 1. ப்ரத்யக்ஷபேதம்; 2. பரோக்ஷபேதம். முகத்திலுள்ள புண்ட்ரஸந்நிவேசத்தைக் கொண்டும், நமஸ்கார ஆவ்ருத்தி அநாவ்ருத்திகளைக் கொண்டும் இன்னார் இன்ன கலையைச் சேர்ந்தவரென்பதை எளிதில் அறிகிறோம். இதை ப்ரத்யக்ஷபேதமென்று கொள்க. இனி, பரோக்ஷபேதமாவது—ஸம்ப்ரதாயக் கொள்கைகளில் உள்ளவாசிகள். அதைப்பற்றி அடுத்தபடியாகத் தெரிவிக்கிறேன். இப்போதைய ஐக்கிய சங்கத்தின் முயற்சி நன்கு பலித்ததென்று வைத்துக்கொள்வோம். அதனால் உலகம் காணும் நன்மை எப்படிப்பட்டதாக இருக்கும் என்பதை நாம் முன்னம் ஆலோசித்துப் பார்க்கவேண்டும். அவரவர்கள் அணிந்து கொள்ளும் புண்ட்ரஸந்நிவேசம் [திருமண்காப்பு] மாறப்போகிறதில்லை. நமஸ்காரத்தில் அவரவர்கள் ஸம்ப்ரதாய ஆசாரத்தைச் சிறிதும் மாற்றிக்கொள்ளப்போகிறதில்லை. வடகலைக் கோவில்கள் தென்கலையாகவோ, தென்கலைக் கோவில்கள் வடகலையாகவோ மாறப்போவதில்லை. மாற்றுவதற்கு எந்தத் தரப்பில் முயற்சி ஏற்பட்டாலும் உடனே ரகளைகள் ஏற்படுவது திண்ணம். இதுபற்றி நீதி மன்றங்களிலுள்ள வழக்குக்கள் அறப்போகிறதில்லை. இருகலையிலும் விவாஹாதிஸம்பந்தங்கள் நெடுநாளாகவே உள்ளபடியால் அதற்கு எவ்விதமான ஹானியும் விளையப்போவதில்லை. இருகலையாரும் பரஸ்பரம் நேசமாகப் பேசிக்கொள்வது முதலான நட்பு முறைகள் இவ்வைக்கிய சங்கத்தினால் புதிதாக ஏற்படப்போவதில்லை. இந்த நட்புமுறை நாளடைவில் மேன்மேலும் வளருமே யொழிய இறையும் குறையமாட்டா. சில பல வருஷங்களுக்கு முன்பு சில தேவாலயங்களில் இருகலையாருக்கும் குத்துச்சண்டை குடுமிச்சண்டை முதலான கோரயுத்தங்கள் நடந்து கொண்டிருந்தன. ஆங்காங்கு எக்ஸிக்யூடிவ் டிரஸ்டிகளும் ஆபீஸர்களும் ஏற்பட்டபின்பு அந்தச் சண்டைகள் அறவே யொழிந்தன. எனக்குத் தெரிந்து காஞ்சிபுரம் ஸ்ரீ தேவராஜஸ்வாமி தேவஸ்தானத்தில் மட்டும் நடந்த கிரிமினல் ஸிவில் வியாஜ்ஜியங்களுக்கு இருகலையார் தரப்பிலும் செலவு செய்யப்பட்ட பணத்தைக் கொண்டு நாலைந்து தேவாலயங்கள் நிர்மாணம் செய்யலாமென்பது அதிசயோக்தியன்று. இனி கிரிமினல் வியாஜ்ஜியங்களுக்கு அவகாசம் ஏற்படாதெனினும் ஸிவில் விவகாரங்கள் ஒரு தலையில் ஏற்பட்டால் அதை இந்த ஐக்கிய வைணவச் சங்கம் தடுக்க முடியுமென்று தோன்றவில்லை. சில தேவாலயங்களில் பெண்டிங்கிலிருக்கும் ஸிவில் விவகாரங்களைத் தீர்க்கவும், இனி விவகாரங்கள் ஏற்படாத வழி செய்யவும் இந்த ஐக்கிய சங்கம் அதிகாரம் கொள்ளுமானால்—நீதிமன்றத் தீர்ப்புப்போல் கட்டுப்படுத்தக்கூடிய சக்தி பெறுமானால் இச்சங்கத்தினால் பரமோபகாரம்! நிகரற்ற உபகாரம்! என்னலாம்.

இந்த சந்தர்ப்பத்தில் அடியேன் விஜ்ஞாபிப்பதை அனைவரும் குறிக்கொள்ளவேணும். உபயஸம்பிரதாயத்திலும் முன்னோர்கள் அருளிய நூல்கள் பல பலவுள்ளன. ஸ்வாமி தேசிகனுக்குப் பிற்பட்ட ஆசாரியர்கள் (மணவாளமாமுனிகள்போல்வார்) அருளிய நூல்கள் இருக்கட்டும். தேசிகனுடைய ஸமகாலத்திலும் சிறிது முற்பட்ட காலத்திலும் விளங்கியிருந்த ஆசாரியர்கள் பெரியவாச்சான்பிள்ளை, பிள்ளை லோகாசாரியர் போல்வார்க்கும் ஸ்வாமி தேசிகனுக்கும் இருந்த ஐகரஸ்யத்தைப் பலர் அறியார்கள். உண்மைபறியவுரைக்கிறேன். தேசிகன் பெரியவாச்சான்பிள்ளைக்குப் பிற்பட்டவர் என்பதை தாமே தம்முடைய ஒரு ஸ்ரீ ஸூக்தியினால் ஸுஸ்பஷ்டமாக வெளியிட்டுள்ளார் என்பதை மேலே (பக்கம் 7-ல்) விளக்குவேன்.

## ஸ்தோத்ரபாஷ்யத்தில் அருமையான இடங்கள் கேளீர்.

ஸ்தோத்ரபாஷ்யத்தில் ஒவ்வொரு ச்லோகத்தின் பாஷ்யத்தையும் பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்கியானத்தை உடன்கொண்டு ஸேவித்தால், அவருடைய வியாக்கியான

ஸரணியை தேசிகன் எவ்வளவு தழுவியிருக்கிறார் என்பது அநாயாஸமாக விளங்கும். *நமோசிந்த்யாத்புத* என்கிற முதல் ச்லோகத்திலிருந்தே பார்க்கலாம். பெரியவாச்சான்பிள்ளை உதாஹரித்தருளுகிற ஸம்ஸ்க்ருத ப்ரமாணங்களை நூற்றுக்கு எண்பது பங்கு விடுவதில்லை தேசிகன், இது அநுமாநமன்று, உத்ப்ரேக்ஷையன்று உல்லேகமன்று. இரண்டு ஸ்ரீகோசங்களும் ஸுலபமேயிறே; துர்லபமன்றே; எடுத்துப் பரீக்ஷிக்கலாமே. ப்ரமாணங்களைக் கொள்வது மாத்திரமேயன்று. பெரியவாச்சான்பிள்ளை வியாக்யானத்திற்காணும் இன்சுவைமிக்க பொருள்களை அப்படியப்படியே தழுவிக்கொள்வதையும் காணலாம். இதற்கு நூறிடங்கள் எடுத்துக் காட்டலாம்; ஆயினும் விரிவு காண்பாரில்லாமையாலே இங்குச் சிலவிடங்களே காட்டப்படுகின்றன. முதல் ச்லோகத்தில் *ஜ்ஞாந வைராக்யராசயே* என்றவிடத்தில் வாரிராசி:, ஜலராசி: இத்யாதி ஸ்தலங்களிற் போல ஜ்ஞாநவைராக்யங்களுக்கு ராசியாயிருப்பவர் என்கிற பொருளே எல்லார்க்கும் தோன்றக்கூடியது. இது ஸங்கதமான பொருளேயன்றி அஸங்கதமான பொருளன்று. இவ்வகைப் பொருளை மூந்துறப் பணித்தார் தேசிகன்; இங்கே பெரியவாச்சான்பிள்ளை பஹுவ்ரீஹியை விவக்ஷித்து, ராசியென்பதற்கு ஸமூஹப்பொருளைக் கொண்டு ஜ்ஞாந ஸமூஹங்களையும் வைராக்ய ஸமூஹங்களையுமுடையவர் என்றுரைத்து, ஜ்ஞாநமும் வைராக்யமும் ஒன்றாயிருக்க ராசியென்னலாமோவென்று சங்கித்துக்கொண்டு 'பகவத் ஸ்வரூபாதிகள் ஜ்ஞான விஷயங்களாகையாலே பல; த்யாஜ்ய விஷயங்களும் பலவாகையாலே வைராக்யங்களும் பலவென்று சொல்லலாம்' என்று அருளிச் செய்திருக்கிறார். தேசிகன் தமது பாஷ்யத்தில் இதை அப்படியே மொழி பெயர்த்திருக்கிறார். மேலே *அகாத பகவத் பக்திஸிந்தவே* என்றவிடத்திலும் பக்திக்குக் கடலாயிருப்பவர் என்று பொருள் கொள்ளாமல், *காதல் கடல் புரைய விளைவித்த* *காதல் கடலின் மிகப்பெரிதால்* இத்யாதி திவ்ய ஸூக்திகளுக்குச்சேர பக்தியைக் கடலாக ரூபித்து அகாதமான பகவத் பக்திஸிந்துவையுடையவர் என்று உரைத்தார் பெரியவாச்சான்பிள்ளை; தேசிகன் அதைத் தழுவி "பக்திம் வா ஸிந்துத்வேந ரூபயித்வா பஹுவ்ரீஹி." என்று பணித்தார்.

*ந நிந்திதம் கர்ம ததஸ்தி லோகே* என்றவிடத்தில் லோகே என்பதற்கு (ஸம்ஸாரிஜநே) என்று முதலில் ஸாமாந்யமாகப் பொருள் பணித்த தேசிகன் (லோகே—சாஸ்திரத்தில்) என்றுள்ள பெரியவாச்சான்பிள்ளை வியாக்யானத்தை ஸேவித்து அப்படியேயருளிச் செய்தார். *வசீ வதாந்யோ குணவாந்* என்ற ச்லோகத்தில் அநுபவிக்கப்பட்ட பன்னிரண்டு திருக்குணங்களையும் விவரித்தருளாநின்ற தேசிகன் பெரியவாச்சான்பிள்ளை வியாக்யானத்தையே ப்ராயேண மொழி பெயர்த்திருக்கின்றார். சிறிது மேலே போவோம்.

*அசிந்த்யதிவ்யாத்புதேத்யாதியான ச்லோகத்திற்குப் பெரியவாச்சான்பிள்ளை இட்டருளின அவதாரிகையையே சிறிது பெருக்கி மொழிபெயர்த்திருக்கிறார் தேசிகன். பக்தஜநைக ஜீவிதம் என்பதற்கு பக்தஜநங்களுக்கு தாரகாதிகளெல்லாம் தானேயாயிருக்குமவன் என்றும், பக்த ஜனங்களையே தனக்கு தாரகமாகவுடையவன் என்றும் இரண்டுவிதமாகப் பொருள் பணித்தார் பெரியவாச்சான்பிள்ளை; தேசிகனும் அப்படியே பாஷ்யமிட்டருளினார். இதற்கு அடுத்தது ஸமர்த்தம் என்பது. இதற்கும் பெரியவாச்சான்பிள்ளை வியாக்யானத்தை யநுஸரித்தே பாஷ்யமுள்ளது. எம்பெருமானுக்கு ஸமர்த்தம் என்றல்லவோ இங்கு விசேஷண முள்ளது. க்ஷுத்ரர்களான நாமெல்லாருங்கூட ஸமர்த்தர்களென்று கொண்டாடப்படுகிறோம். எம்பெருமானை ஸமர்த்தனென்றால் அவனுடைய ஸாமர்த்தியம் ஸாமாந்யமாயிருக்க முடியாதே; இங்கு எவ்விதமான விசேஷத்தைக் காட்டலாமென்று விமர்சித்த பெரிய வாச்சான்பிள்ளை ஆளவந்தாருடைய திருவுள்ளத்தை உள்ளபடி யுணர்ந்து தமது வியாக்கியானத்தில்—"[ஸமர்த்தம்] அளவுடையரான நித்ய ஸூரிகள் அநுபவிக்கும் தன்னை நித்ய ஸம்ஸாரிகள் அநுபவிக்குமிடத்தில் *ஆற்றநல்லவகை காட்டுமம்மானை* என்கிறபடியே ஸாத்மிக்க ஸாத்மிக்க அநுபவிப்பிக்கும் ஸாமர்த்யத்தையுடைய" என்றருளிச் செய்தார். உண்மையில் எம்பெருமானுக்கு இதுதான் ஸாமர்த்தியம். இப்பங்க்தியை ஸேவித்த தேசிகன் இவ்வர்த்தத்தை மிகவும் ரஸித்து இதை அப்படியே மொழிபெயர்த்தவர்போல "ஆச்ரிதாநாம்

ஸாத்ம்யபோகப்ரதாநே'' என்று அருளிச் செய்தார். ஸாத்ம்ய என்கிற ஸம்ஸ்க்ருதபதம் சிறிது அபூர்வமானது; சரகஸுச்ருதாதிகளிலே கையாண்டது. நம் ஆசார்யர்களின் திவ்யக்ரந்தங்களில்தான் இந்த பதம் விசேஷமாகக் காணப்படும். திருவாய்மொழியில் (1—9) இவையுமவையுமுவையும்* என்கிற பதிகத்தில் எம்பெருமான் ஆழ்வார்க்கு ஸ்வாநுபவத்தை ஸாத்மிக்க ஸாத்மிக்கக் கொடுத்தருளினதாகப் பெரியவாச்சான்பிள்ளை அவதாரிகையிட்டருளினர்; அதையநுஸரித்து தேசிகன் த்ரமிடோபநிஷந் தாத்பர்ய ரத்நாவலியில் "விபுமநுபுபுஜே ஸாத்ம்ய போகப்ரதாநாத்'' என்றருளிச் செய்தார். அந்த ப்ரயோகத்தையே இங்கும் தேசிகன் செய்தருளியுள்ளார். இனி வேறொரு நூலில் செல்வோம்.

## ஸச்சரித்ர ரக்ஷையில் மிகப்பெரிய விஷயமொன்று காட்டுதல்.

ஸச்சரித்ர ரக்ஷையில் ஊர்த்வபுண்ட்ர விசாரபரமான இரண்டாமதிகாரத்தில் *கரியமேனிமிசை வெளியநீறு சிறிதேயிடும், பெரியகோலத் தடங்கண்ணன்* (4-5-6) என்ற திருவாய்மொழிப் பாசுரத்தைப்பற்றி அர்த்தவிசாரம் செய்யப்புகுந்து "சக்ஷுஷி தத்தாரணம் தத்ர விஹிதமிதி அஞ்ஜநபரத்வமாஹுராசார்யா:'' என்று எழுதியுள்ளார் தேசிகன். இங்கு ஆசார்யா: என்கிற சொல்லால் பெரியவாச்சான்பிள்ளையையே விவக்ஷிக்கிறாரென்பது அசைக்க முடியாதது. ஏன்? மேலேகுறித்த பாசுரத்திற்குப் பிள்ளானுடைய ஆறுயிரப்படி வியாக்கியானம்:—"நீலமேக நிபதிவ்ய ரூபோசித திவ்யாங்கராகத்தாலே அநுலிப்தனாய், அதிவிசாலமாய் அதிரமணீயமாயிருப்பதொரு தாமரைத் தடாகம்போலேயிருந்த திருக்கண்களையுடையனாய்'' என்பது. இதனால், வெளியநீறு என்பதற்கு திவ்யாங்கராகமென்னும் பொருள் கொள்ளப் பட்டதென்பதும், 'கரியமேனிமிசை வெளியநீறு சிறிதேயிடும்' என்கிற முதலடியானது எம்பெருமானுக்கு விசேஷணமாகக் கொள்ளப்பட்டதென்பதும் நன்கு விளங்கிற்று. பெரியவாச்சான்பிள்ளையினுடைய வியாக்கியானத்தில் அருளிச்செய்திருக்கும் விதமாவது பிள்ளானருளிச்செய்த விதத்திற் காட்டில் மிக வேறுபட்டது. 'வெளிய நீறு' என்பதற்கு அஞ்ஜந சூர்ணமென்று பொருள் கொள்ளப்பட்டது [வெளியம்—அஞ்ஜனம்.] "கரியமேனிமிசை வெளியநீறு சிறிதேயிடும்'' என்கிற முதலடி எம்பெருமானுக்கு விசேஷணமாகக் கொள்ளப்படாமல் 'பெரியகோலத் தடங்கண்ணன்' என்றதன் ஏகதேசமான திருக்கண்களுக்கு விசேஷணமாகக் கொள்ளப்பட்டது. 'திருக்கண்களின் கரிய விழியினுடைய கறுத்த நிறத்தின் மேலே அஞ்ஜநசூர்ணத்தை யிட்டபெற்ற திருக்கண்களையுடையவன், என்னும் தாத்பரியம் பெரியவாச்சான்பிள்ளை முதலானோருடைய வியாக்கியானங்களில் மாத்திரம் காண்கிறது. பிள்ளானுடைய வியாக்கியானம் இதனில் மிக வேறுபட்டதென்பது புநருக்தம். "அஞ்ஜநபரத்வமாஹுராசார்யா:''* என்றெழுதிய தேசிகன் பெரிவாச்சான்பிள்ளை முதலானோரையே ஆசார்யராகச் சுட்டினாரென்பது நிஸ்ஸந்தேஹவிபர்யயம்: பிள்ளானுடைய வியாக்கியானத்தில் நீறு என்பதற்கு அஞ்ஜநபரத்வமும் கூறப்படவில்லை. சக்ஷுஷி தாரணமும் காட்டப்படவில்லையன்றோ. ஆறுயிரப்படியில் "திவ்யாங்கராகத்தாலே அநுலிப்தனாய்'' என்கிற பங்க்தி ஸுஸ்பஷ்டமாயிருக்கையாலே நீறு என்பதற்கு அங்கராகப் பொருளும் அந்த அங்கராகத்தினால் திருமேனி அநுலிப்தமாயிருக்கிறதென்பதுமே பிள்ளானுடைய திருவுள்ளமாகத் தேறுகிறது. ஆக ஸச்சரித்ரரக்ஷையில் ஆசார்யா ஆஹு: என்று எடுத்துக்காட்டியிருக்கும் விஷயம் பிள்ளானுடைய படியில் கிடையாதென்றும் நம்பிள்ளையின் பரம்பரையினருடைய வியாக்கியானங்களிலேயே உள்ளதென்றும் நிஸ்ஸந்தேஹமாகத் தேறுகின்றது. (கேசித் ஆஹு:) என்னாமல் ஆசார்யா ஆஹு: என்றெழுதியிருப்பது உற்றுநோக்கத் தக்கது. மாச்சரியத்தையகற்றி நடுநிலையில் நின்று காணவேணும்.

## தாத்பர்யரத்னாவளியில் ரத்னங்கள் காட்டுதல்.

தேசிகன் உபயவேதாந்தத்தையும் குருமுகமாக அதிகரித்தவர் என்பது ஸர்வ ஸம்ப்ரதிபந்நம். திருவாய்மொழிக்கு ஒரு வியாக்யானமும் அவதரியாதிருந்த காலத்துப் பூர்வாசார்யர்கள் மூலத்தை வைத்துக்கொண்டே ஸ்வஸ்வாசார்யர்களிடத்தில் அர்த்தச்ரவணம் பண்ணி

வந்தார்கள். பிள்ளானுடைய ஆறாயிரப்படி அவதரித்தபின்பு அக்காலத்திலுள்ளவர்கள் அதைக்கொண்டு காலக்ஷேபம் செய்திருப்பர்கள். நஞ்சீயருடைய ஒன்பதினாயிரப்படியும் சுருக்கம். பிறகு பெரியவாச்சான்பிள்ளையின் இருபத்துநாலாயிரப்படி மிக விரிவாகவும் ரஸபரிபுஷ்டமாகவும் அவதரித்தபடியினாலே அக்காலத்திருந்தவர்கள் யாவரும் அந்த இருபத்து நாலாயிரப்படி கொண்டே காலக்ஷேபம் செய்து வந்தார்கள். அடுத்தபடியாக ஈடுமுப்பத்தாறு யிரப்படி அவதரித்திருந்தும் அது அக்காலத்தில் பிரசாரமடையாமல் பிறகு பிரசாரமடைந்த படியினால் அந்த மத்யகாலத்தில் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானமே தேசிகன் முதலானோர்க்கும் காலக்ஷேப க்ரந்தமாக விளங்கிற்று—என்னுமிது அளவுகடந்த ஸாக்ஷியங்களால் அவிசால்யமாகக் காட்டி நிரூபிக்கப்பட்டிருக்கிறது. அந்த நிரூபணங்கள் ஸாமாந்யப்ராஜ்ஞர் களின் புத்திக்கு அடியோடு எட்டமாட்டாதவை. (1-8.) ஓடும் புள்ளேறி. (1-10) பொருமா நீள்படை. (2-8) அணைவதரவணைமேல்........இவை முதலான பல தசகங்களுக்கு ஆறாயிரப் படியிலுள்ள அவதாரிகைகள் வேறுவிதம்; பெரியவாச்சான் பிள்ளை யிருபத்துநாலாயிரப்படியி லுள்ள அவதாரிகைகள் வேறுவிதம். இதை ஒவ்வொருவரும் அநாயாஸமாக அறியலாம்: தேசிகன் இருபத்துநாலாயிரப்படியையே அடிபொற்றி த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவலியையும் த்ரமிடோபநிஷத் ஸாரத்தையும் ஸாதித்திருக்கிறார். பத்தாம்பத்தில் முதல்திருவாய்மொழி *தாளதாமரையென்பது. இதில் திருமோகூரெம்பெருமானுடைய அநுபவம் நிகழ்கின்றது. இத் திருவாய்மொழிக்கு அவதாரிகையிட்டருளின திருக்குருகைப்பிரான் பிள்ளான் ஆறாயிரப் படியில்—"திருக்கண்ணபுரத்திலெம்பெருமானை யநுபவித்து இப்போது திருமோகூரிலெம் பெருமானை யநுபவிக்கிறார்" என்று இவ்வளவேயருளிச் செய்தார். மேற்பாசுரங்களிலும் ஸாதாரணமாகப் பாசுரப்பொருளே பணித்துள்ளார். மற்ற ஆசார்யர்களெல்லாரும் இங்கு ஒரு விசேஷம் அருளிச் செய்கிறார்கள். அதாவது—ஆழ்வார் கீழ்*மாலைநண்ணித்திருவாய்மொழி யில் *சரணமாகுமென்கிற பாசுரத்தில் தம்முடைய பரமபதயாத்திரையை நிச்சயித்து அர்ச்சி ராதி மார்க்க கதியை யநுஸந்தித்து அந்த கதிக்குத் திருமோகூர்க் காளமேகப்பெருமாளை வழித் துணையாகப் பற்றுகிறார் இத்திருவாய்மொழியில்—என்பதே. மணவாளமாமுனிகள் நூற்றந் தாதியில் *தாளடைந்தோர் தங்கட்குத் தானே வழித்துணையாம், காளமேகத்தைக் கதியாக்கி* என்றருளிச்செய்தார். ஆசார்யஹ்ருதயத்தில்"மார்க்கபந்து சைத்யம் மோஹனத்தே மடுவிடும்" என்று பணிக்கப்பட்டது. பெரியவாச்சான்பிள்ளை இருபத்துநாலாயிரப்படி முதலானவற்றி லும் 'காளமேகப்பெருமாளை வழித்துணையாகப்பற்றுகிறார்' என்றுள்ளது. இவ்விதமாக ப்ரமேய சிக்ஷை ஆறாயிரப்படியில் ஸூசனையாகக்கூடக் கிடையாதென்பது நிர்விவாதம். திருமோகூரப் பனை ஸ்தோத்திரம் பண்ணுகிறாரென்னுமித்தனையே ஆறாயிரப்படியிலுள்ளது. இனி, தேசி கனது த்ரமிடோபநிஷத்தாத்பர்ய ரத்நாவளியிலும் தத்ஸாரத்திலும் பார்க்கவேணும். ரத்நா வளியில் (104) *தைத்யாநாமித்யாதி ச்லோகத்தில் "ச்ராந்திஹாரித்வமுக்க்யை ராகாரைஸ் ஸத்கதிஸ் ஸ்யாத்" என்கிறார். *ஸத்கதிஸ் ஸ்யாத்* என்பதற்கு வியாக்கியான மிட்டவர்கள் "காளமேகப்பெருமாளே வழித்துணை" என்றெழுதி வைத்தார்கள். த்ரமிடோபநிஷத் ஸாரத்திலும் இப்பதிகத்தில் தேறின குணமாக "ஸத்பதவ்யாம் ஸஹாயம் ஸ்ரீசம் ப்ராஹ" என்ற ருளிச்செய்தார். *ஸத் கதிஸ் ஸ்யாத்* என்ற தாத்பர்ய ரத்நாவளிக்கு *ஸத்பதவ்யாம் ஸஹாய மென்றவிது கைவிளக்காயிருக்கின்றது. இப்படி இன்னும் பலவிடங்கள் உண்டு; தேசிகனுக்கு ஆறாயிரப்படியில் த்வேஷம் என்றோ வெறுப்பு என்றோ சொல்லுகிறோமல்லோம். அது மிகவும் சுருக்கமான வியாக்கியானமாயிருக்கிறபடியால் அதை ஒருகால் ஸேவித்து நிறுத்தி பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானம் அதற்கு நான்மடங்கு விரிவாகவும் ரஸகனமாகவும் இருக்கிறதென்கிற காரணத்தினால் தேசிகன் இது தன்னையே நிதியாகக் கொண்டு இதையே தமக்குக் காலக்ஷேபக்ரந்தமாக ஆதரித்துவந்தார். இக்காலத்தவர்களுக்கு இவ்வுண்மையுரை விஷமாயிருக்கும்.



## பகவத்கீதையில் அற்புதமான இரண்டு மஹார்த்தங்கள் காட்டுதல்.

கீதையில் அரிய பெரிய விஷயமிரண்டுகேளீர். நம்பிள்ளை பக்கலில் ஒரு பண்டிதர் வந்து "கீதையில் அர்ச்சாவதார ப்ரஸ்தாவமேயில்லையே! ஏன்?" என்று கேட்க, "நாலாமத்யாயத்தில்

*யே யதாமாம் ப்ரபத்யந்தே தாந் ததைவ பஜாம்யஹம்* என்றதில் அர்ச்சாவதார நிலையும் அந்தர்க்கதமே காணீர்'' என்று நம்பிள்ளையருளிச் செய்ததாக வார்த்தாமாலையிலுள்ளது. திருவாய்மொழியில் (8-1-4) *உமருகந்துகந்தவுருவம் நின்னுருவமாகி* என்கிற பாசுரத்தை அர்ச்சாவதாரபரமாக நிர்வஹித்து இந்த ஸ்லோகத்தை ஸ்வாதப்ரமாணமாக நம்பிள்ளை காட்டியருளினது ஈட்டிலும் இருபத்து நாலாயிரப்படியிலும் விசதம். இந்த ஸ்லோகத்திற்கு அர்ச்சாவதாரபரத்வம் கீதாபாஷ்யத்தில் இல்லை. நம்பிள்ளை நிர்வாஹமே. தேசிகன் இந்த நிர்வாஹத்தை தாத்பர்யசந்திரிகையில் *யே யதா மாம் சுலோக உபக்ரமத்திலேயே "அத்ர க்ருஷ்ணவதார வ்ருத்தாந்தேந ஸஹ அர்ச்சாவதார வ்ருத்தாந்தோபி ஸங்க்ருஹீத:" என்று காட்டினர். இதைக் காட்டிலும் மிகச்சிறந்த விஷயமொன்று கேளீர்: ஒருநாள் நம்பிள்ளையுபந்யாஸத்தில் *தம்மையுகப்பாரைத் தாமுகப்பரென்கிற நாச்சியார் திருமொழிப் பாசுரத்தைக் கொண்டு ரஸகனமாக அருளிச்செய்கையில் *ப்ரியோ ஹி ஜ்ஞானிநோத்யர்த்தம் அஹம் ஸ ச மம ப்ரிய:* என்கிற ஸ்லோகத்தில் சகாரத்தைக் கொண்டு "ஜ்ஞானி என் பக்கலில் செய்யும் ப்ரீதியை உபாதியாக்கி அவன் பக்கலிலே நான் ப்ரீதி பண்ணுவது பெரிதோ?" என்றருளினதாகவுள்ளது. இதை ஸேவித்த தேசிகன் அந்த ஸ்லோகத்தின் தாத்பர்ய சந்திரிகை முடிவில் "ஸ ச மம ப்ரிய: இத்யத்ர ப்ரதிசயப்ரீதிம் குர்வதோபி மஹோதாரஸ்ய ஈச்வரஸ்யாபி தத்ப்ரீத்யுபாதிகப்ரீதிகரணத் அத்ருப்திஸ் ஸூசிதேதி கேசிதாசார்யா:" என்றெழுதினர். (கேசிதாஹு:); என்னுமல் கேசிதாசார்யா; என்றதிலுள்ள ப்ரதிபத்தி கௌரவம் உணரத்தக்கது. இங்ஙனே பலபல விஷயங்கள் அடியேனுடைய நூல்களில் கொள்ளை கொள்ளையாகத் திகழும்.

பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செய்த வியாக்கியானங்கள் தேசிகனுடைய காலத்தில் நன்றாக ப்ரவசனத்தில் வந்துவிட்டனவென்கிற விஷயம் தேசிகனுடைய ரஹஸ்யத்ரய ஸாரத்தில் ப்ரபாவவ்யவஸ்தாதிகாரத்தில்—"குலந்தருமென்கிற பாட்டுக்கு வியாக்கியானம் பண்ணின அபியுக்தரும் 'ஜன்மத்தால் வ்ருத்தத்தால் குறைந்தானொருத்தனுக்கு பகவத் ஸம்பந்தமுண்டானால் அவனை இவையுடையானொருத்தன் தாழ நினைக்கக் கூசவேண்டும்படியாயிற்று பகவத்ப்ரபாவமிருக்கும்படி. ஆனால் அவர்களோடு பெண் கொடுத்துக் கொள்ளுகிறதில்லையேயென்னில் அது ஜாதிநிபந்தனம், ச்லாகை குண நிபந்தனம்' என்று நிஷ்கர்ஷித்தார்கள்'' என்று பெரியவாச்சான்பிள்ளையின் வியாக்கியான பங்க்திகளையே உதாஹரித்திருப்பதனால் ஸுஸ்பஷ்டமாகிறது. இதனால் பெரியவாச்சான்பிள்ளை தேசிகனுக்கு முற்பட்டவர் என்பது நிஸ்ஸந்தேஹஸித்தம். மேலே உதாஹரித்த பங்க்திகளில் அபியுக்தரென்றது பெரியவாச்சான்பிள்ளையையென்று ஸ்ரீமத் இஞ்சிமேட்டழகிய சிங்கர் வரையிலுமுள்ள வ்யாக்யாதாக்களெல்லோரும் எழுதிவைத்தார்கள்.

இதுகாறும் நாம் நிரூபித்தவற்றின் நோக்கமென்னவென்றால், ஸர்வஜ்ஞஸார்வபௌமரான ஸ்வாமி தேசிகனுக்கு ஒரு குறையையோ தாழ்ச்சியையோ காட்டுவதற்காகவன்று; அத்தகைய நினைவு நமது நெஞ்சில் ஒரு மூலையிலுமில்லை. இக்காலத்தவர்கள் பெரியவாச்சான்பிள்ளையின் ஸ்ரீஸூக்திகளில் நிர்விஷயகமாகப் பகை பாராட்டி வருவதானது-தேசிகனுக்குப் பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்திகளிலுள்ள கௌரவாதிசயம் சிறிதும் தெரியாமையினாலாதலால் அதைத் தெரிவிக்க வேண்டுமென்பதேயாம் இவ்விஷயத்தை அடியேன் (12-12-76உ) பிற்பகலில் மஹாஸதஸ்ஸில் விளக்கிப் பேசிய போது ப்ராமாணிக ரஸிகர்கள் பலர் கரகோஷம் செய்தனர். மணவாளமாமுனிகள் தம்முடைய ரஹஸ்ய வியாக்கியான நூல்களில் தேசிக ஸ்ரீஸூக்திகளை அலைக்ருத் அபியுக்தோக்தியாக எடுத்துக்காட்டியுள்ளார். ஸ்ரீரஹஸ்யத்ரயஸாரத்திலிருந்து மூன்றிடங்களிலுள்ள வாக்யராசிகளை உதாஹரித்தருளியுள்ளார். ந்யாஸ விம்சதியிலிருந்தும் தத்வமுக்தாகலாபத்திலிருந்தும் ச்லோக முதாஹரித்தருளியுள்ளார்.

[ஒரு விசேஷங் கேண்மின்] வாதி கேஸரி அழகிய மணவாளஜீயரென்பவர் மணவாள மாமுனிகளுக்கு முற்பட்டவர்; தேசிகனுடைய ஸமகாலத்திலிருந்தவர். இருவர்க்கும்

ஒன்றிரண்டு பிராயமே ஏற்றத்தாழ்விருக்கும். வாதி கேஸரி ஜீயர் தாம் பணித்த தத்வதீப தீபப்ரகாசாதிகளில் தேசிக ஸூக்திகள் பலவும் உதாஹரித்துள்ளார். தேசிகனும் வாதி கேஸரி ஜீயரின் பன்னீராயிரப்படியை த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்னாவளியில் உபஜீவத்திருக்கிறார். (இதெல்லாம் நாம் நமது நூல்களில் பலகால் விவரித்திருப்பவை.) தேசிகன் மேற்கே ஸத்யமங்கலத்திலிருந்துகொண்டு ஸாதித்தருளின அபீதிஸ்தவத்தில் *நிரஸ்த ரிபுஸம்பவே க்வசந ரங்கமுக்க்யே விபோ! பரஸ்பரஹிதைஷிணாம் பரிஸரேஷு மாம் வர்த்தய* என்று உள்கனிந்து அருளிச் செய்திருப்பதை உணராதார் பலர்; உணர்ந்தும் அந்யபரமாக்குவார் பலர். அப்படிப்பட்டவர்கள் இந்த ஐக்கிய ஸபைக்கு நெடுந்தூரத்தில் நிற்க வேண்டியவர்களென்பதைக் கூசாமல் கூறுவேன்.

அர்த்த விசேஷங்களில் தேசிகன திருவுள்ளம் வேறு, மற்றையாசாரியர்களின் திருவுள்ளம் வேறு—என்று சிலரோ பலரோ மருண்டிருப்பது பற்றியும் அன்று ஸதஸ்ஸில் விரிவாகப் பேசினேன். அவகாசக் குறைவினால் அப்போது சிற்சில விஷயங்கள் விடுபட்டிருந்ததுமுண்டு; அவற்றையும் சேர்த்து ஈண்டு உபபாதிக்கிறேன். [சிற்சில விஷயங்களில் அபிப்ராயபேதங்கள் அபரிஹார்யமாக இருக்கலாம்; அது வாதிகேஸரிஜீயர் நூல்களிலுமுண்டு. அப்படிப்பட்ட பேதத்தை யோஜநாபேதமாத்ரமாகக் கொள்ளலாம்.]

உபயகலையிலுமுள்ள இக்காலத்தவர்களையும் இவர்களது கொள்கைகளையும் பரஸ்பர விவாதச் சுவடிகளையும் நெடுந்தூரத்தில் விட்டிட்டு தேசிக ஸ்ரீஸூக்திகளை மட்டும் நடுநிலையில் நின்று விமர்சிக்குங்கால் நம் ஆசாரியர்களின் ஐகரஸ்யம் ஆச்சரியமாகப் புலப்பட்டேதீரும். பெரியவாச்சான்பிள்ளை பிள்ளைலோகாசாரியர்களின் ஸ்ரீஸூக்திகளையடியொற்றி தேசிகன் ஸாதித்தாரென்கிற பேச்சே வேண்டியதில்லை. தேசிகதிவ்யஸூக்திகளை அடியொற்றியே அவ்வாசாரியர்கள் அர்த்தநிஷ்கர்ஷம் பண்ணினார்கள்—என்றே கொள்வோம். முழுமனமாகக் கொள்வோம். உபயாசாரியர்களும்*பேசிற்றே பேசு மேககண்டர்களே—என்கிற பரமார்த்த ஸ்தாபன மொன்றே நமக்கு விவக்ஷிதம்.

## சுலோகமொன்று கேளீர்:—

க்ருபாயாம் ப்ரபத்த்யாம் ரமாயாம் தயாயாம்
குணே வத்ஸலத்வேப்யத்ருஷ்டார்த்த க்ருத்யாம் |
உபாயாந்தரேஷ்வாத்ம லாபேச ஜாதௌ
அணுவ்யாப்திவாதே ச பேதோ மநாக் ஸ்யாத் ||

ஒரு மஹானுடைய நூலில் காணும் சுலோகமிது. இதன் கருத்தென்ன வென்றால், 1. பகவத்க்ருபை நிர்ஹேதுகமா? ஸஹேதுகமா? 2. ப்ரபத்தி உபாயமா? அநுபாயமா? 3. பிராட்டிக்குப் புருஷகாரத்வ மாத்ரமேயா? மோக்ஷப்ரதத்வமுங் கூடவா? 4. தயையென்கிற குணத்தின் ஸ்வரூபம் பரதுக்கதுக்கித்வரூபமா? பரதுக்க நிராசிகீர்ஷா ரூபமா? 5. வாத்ஸல்ய மென்பது தோஷபோக்யதா ரூபமா? தோஷாதர்சித்வ ரூபமா? 6. அத்ருஷ்டார்த்த மென்கிற அனுஷ்டானம் பூர்வாசார்யபரம்பரா ப்ராப்தமா? இடைக்காலத்தில் தோன்றினதா? 7. உபாயாந்தரங்கள் ஸ்வரூபோசிதங்களா? ஸ்வரூபத்திற்கு அநுசிதங்களா? 8. ஜீவாத்மலாபம் பரமாத்மாவுக்கா? அவனுடைய லாபம் இவனுக்கா? 9 ஜாதி ஒருபோதும் மாறாததா? ஆகமாபாயியானதா? 10. ஸர்வேச்வரனுக்கு அணுபதார்த்தங்களில் வ்யாப்தியும், வஸ்துதோறும் பரிஸமாப்யவர்த்தித்வமும் உண்டா? இல்லையா?—என்னுமிந்த பத்துவிஷயங்களில் இருகலையார்க்கும் வாதவிவாதமிருக்கலாம் என்கிறது இந்த ச்லோகம். ஈண்டு நாம் நிரூபிக்கப்புகுமது என்ன வென்றால், இவ்விஷயங்களை விவாதாஸ்பதங்களாகக் கொள்பவர்கள் இக்காலத்தவர்களே யன்றி முன்னோர்களல்லர் என்பதுவேயாம். வரிசையாக நிரூபணங்களைக் கேண்மின். (இடையில் ஒருவிண்ணப்பம்.) மேலே கண்ட பத்துவிஷயங்களைப் பற்றியும்

மற்றுஞ்சில பல விஷயங்களைப் பற்றியும் த்ராவிட ஸம்ஸ்க்ருத ஆந்த்ரபாஷைகளில் அடியேன் விரிவாகப் பல நூல்களெழுதி அச்சிட்டு வெளியிட்டிருக்கிறே னென்பதை உலகமறியும். அவை அபேக்ஷகர்களுக்கு இப்போதும் கிடைக்கும். இங்கு விரிவு கொள்ளாமைக்காக தேசிகதிவ்ய ஸூக்திகளை மட்டும், அதிலும் சிலவற்றை மட்டும் எடுத்துக் காட்டுகிறேன்.

## 1. க்ருபாயாம்-பகவத்க்ருபை ஸஹேதுகமா? நிர்ஹேதுகமா? என்பதில் கேளீர்.

க்ருபையின் பெருமைக்கென்றே இட்டருளின தயாசதகத்தில் பலபல சுலோகங்கள் உள்ளனவெனினும் ஒருசுலோகம் போதும்; *அசிதவிசிஷ்டாந் ப்ரலயே ஜந்தூநவலோக்ய ஜாதநிர்வேதா. கரணகலேபரயோகம் விதரஸி வ்ருஷசைலநாதகருணே! த்வம்* என்பது. *ஏவம் ஸம்ஸ்ருதி சக்ரஸ்தே ப்ராம்யமாணே ஸ்வகர்மபி:, ஜீவே து:க்காகுலே விஷ்ணோ: க்ருபா காப்யுபஜாயதே* என்கிற மஹர்ஷி வசனத்தை பட்டர் *அசித விசேஷிதாந் ப்ரலயஸீமநி ஸம்ஸரத: கரணகலேபரைர் கடயிதும் தயமாநமநா:....* என்று பெருக்கினர். தேசிகன் அதைச் சுருக்கினர். இதில் *ஜாதநிர்வேதா* என்றருளிச் செய்தது விசேஷம். தேசிகனருளிச்செய்த பரமபதஸோபாநத்தில்— "அஜ்ஞாதயாத்ருச்சிக ஆநுஷங்கிக ப்ராஸங்கிக ஸாமாந்யபுத்திமூல ஸுக்ருதவிசேஷங்களை வ்யாஜமாகக் கொண்டு விசேஷகடாக்ஷம் பண்ணி" என்றருளிச் செய்தார். இதில் "வ்யாஜமாகக்கொண்டு" என்றதையும் ஸஹியாமல் அவ்யாஜக்ருபையையும் அருளிச்செய்து போந்தார். அது எங்கே யென்னில்; திருவாய்மொழியில் முதற்பத்தில் *பொருமா நீள்படை யென்கிற பத்தாவது பதிகத்திற்கு ஆறுயிரப்படியிலில்லாத விஷயம் அவ்வாறுயிரப்படிக்குப் பிற்பட்ட வியாக்கியானங்களிலுள்ளது. அதாவது, இப்பதிகத்தினால் ஆழ்வார் எம்பெருமானுடைய நிர்ஹேதுக க்ருபாப்ரபாவத்தையநுபவிக்கிறாரென்று பட்டர் நிர்வஹித்தருளினதாகக் காட்டப்பட்டது. அந்நிர்வாஹத்தையே ஸ்வாமிதேசிகன் ஆதரித்து த்ரமிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளியில் "ஆநாவித்தம் பரத்வா...." என்கிற ச்லோகத்தில் "அவ்யாஜோதார பாவாத்" என்றருளிச் செய்தார். நிர்ஹேதுகக்ருபா விசிஷ்டனுகையாலே என்றபடி. இவ்விடத்தில் இரண்டு விசேஷங்கள் (1) எம்பெருமானை நிர்ஹேதுகக்ருபாவானாகச் சொன்னது ஒன்று; (2) இவ்விஷயம் ஆறுயிரப்படியில் இல்லாமல் அதற்குப்பின் தோன்றிய வியாக்கியானங்களில் மட்டும் விளங்காநிற்கவும் இதையே ஆதரித்துப் பரிக்ரஹித்தது மற்றொன்று. அது நிற்க. இத்யாத்யநேக தேசிக திவ்யஸூக்திகளைத் தழுவியே போலும் பிள்ளை லோகாசாரியர் ஸ்ரீவசநபூஷணத்தில்—

"த்ரிபாத்விபூதியிலே பரிபூர்ணநுபவம் நடவாநிற்க.... — என்னூரைச் சொன்னாய் என்பேரைச் சொன்னாய் என்னடியாரை நோக்கினாய் அவர்கள் விடாயைத் தீர்த்தாய் அவர்களுக்கொதுங்க நிழலைக்கொடுத்தாய் என்னுமாபோலே சிலவற்றை ஏறிட்டு மடிமாங்காயிட்டு... ஜந்ம பரம்பரைகள்தோறும் யாத்ருச்சிகம் ப்ராஸங்கிகம் ஆநுஷங்கிகமென்கிற ஸுக்ருத விசேஷங்களைக் கற்பித்துக்கொண்டு தானே அவற்றை ஒன்று பத்தாக்கி நடத்திக்கொண்டு போரும்" என்கிற ஆச்சரியமான சூர்ணையை அருளிச்செய்தாரென்று கொள்ளுங்கள். தேசிகதிவ்யஸூக்திகள் பிற்பட்டவையாயினும் முற்பட்டவையென்றேவைத்துக்கொள்வோம்.

"நிஷாதாநாம் நேதா கபிகுலபதி: காபி சபரீ" என்கிற தயாசதக ச்லோகரத்நத்தின் பொருளை உபந்யஸிக்கப்புக்கால் குஹப்பெருமாள் ஸுக்ரீவ மஹாராஜர் சபரி குசேலர் கூனி ஆய்ச்சியர் மாலாகாரர் என்னுமிவர்கள் இராமபிரானுடையவும் கண்ணபிரானுடையவும் நிர்ஹேதுகமான கருணைக்கு இலக்கானவர்கள் என்றல்லது வேறொன்றும் சொல்ல வொண்ணாதாயிற்று.

ஸ்தோத்ர க்ரந்தங்களில் பணிப்பது ப்ரசம்ஸைகபரமாதலால் அதுதன்னை சாஸ்த்ரார்த்தமாகக் கொள்ளவொண்ணாதென்று கூறுவருவர்கள். முகிவாஹந போகமென்று பெயரிட்டு

ரஹஸ்யக்ரந்தமாகப் பண்ணித்த அமலனாதிபிரான் வ்யாக்கியானத்தின் உபக்ரம ஸ்ரீஸூக்தி இது காணீர்;— "காரணவிசேஷம் இன்னதென்று அறுதியிட அரிதாயிருப்பதொரு பகவத் கடாக்ஷத்தாலே அயத்நலப்தமான........" என்று. இவ்விஷயத்தில் இவ்வளவேபோதும். ஒரு ஹேதுவில்லாமல் எம்பெருமான் அருள் செய்யமாட்டானென்கிற வாதம் ஸ்ரீவைஷ்ணவ கோஷ்டிகளில் விலை செல்லுமதன்று. *நாஸௌ புருஷகாரேண ந சாபி அந்யேந ஹேதுநா, கேவலம் ஸ்வேச்சயைவாஹம் ப்ரேக்ஷே கஞ்சித் கதாசந* என்பதன்றோ எம்பெருமானுடைய திருமுகப்பாசுரம். ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் *த்ராணே ஸ்வாமித்வ மௌசித்யம் ந்யாஸாத்யாஸ் ஸஹகாரிண:, ப்ரதாநஹேது: ஸ்வாதந்த்ர்ய விசிஷ்டா கருணா விபோ!* என்றருளிய காரிகை ஒன்றுபோதும். கருணைக்கு *ஸ்வாதந்த்ர்யவிசிஷ்டா* என்றிட்ட விசேஷணம் ஏதுக்கு? ஸர்வமுக்திப்ரஸங்க வாதம் தலையெடுக்கவொண்ணாமைக்கன்றோ?

தேசிகன் தாம் அவதரித்தவிடமாகிய திருத்தண்காவில் ஸேவைஸாதிக்கின்ற விளக்கொளி யெம்பெருமானுக்கு இட்டருளின ஸ்தோத்ரத்திற்கு சரணாகதிதீபிகை யென்று பெயர். இது மற்ற பல ஸ்துதி நூல்களைப் போலல்லாமல் தத்வார்த்த ஸாரங்களை வெளியிடுவதற்கென்றே இயற்றப்பட்டதென்பது தோன்றவே சரணாகதிதீபிகையென்று தாம் நாமகரணம் செய்தார் தீபப்ரகாசனுக்கும் தீபிகை காட்டினபடி. இதில் பதினொன்றாவது சுலோகத்தில் ஸகலசாஸ்த்ர ஸாரப் பொருளையும் கைவிளக்கேற்றிக் காட்டிவைத்துள்ளார்.

"கர்மஸ்வநாதிவிஷமேஷு ஸமோ தயாலு:
ஸ்வேநைவ க்ல்ப்தமபதேசமவேக்ஷமாண:,
ஸ்வப்ராப்தயே தநுப்ருதாம் த்வரஸே முகுந்த !
ஸ்வாபாவிகம் தவ ஸௌஹ்ருத்த்வமிதம் க்ருணந்தி"

என்பது அந்த சுலோகம்; இது பதினொன்றாவது சுலோகம்; கீழே பன்னிரண்டாவதான *த்வாம் மாதரஞ்ச பிதரஞ்ச* என்கிற சுலோகத்தில் உபாத்தமான ச்ருதியில் ஸௌஹ்ருத் எனப்பட்ட மஹாகுணத்தை இந்த சுலோகத்தினால் விவரிக்கின்றார் எம்பெருமான் தனது ஸஹஜ ஸௌஹார்த குணத்தினால்தான் சரணாகதியில் ஆபிமுக்யத்தை விளைவித்தருளுகிறானென்பதை சுலோகத்தின் முடிவில் காட்டியருளினர். 'சோபநம் ஹ்ருத் யஸ்ய ஸ:— ஸௌஹ்ருத்' என்று வ்யுத்பத்தியென்பதை வ்யுத்பந்நர் உணர்வர். சோபநாசயியான ஹ்ருதயத்தையுடையவன் எம்பெருமான். இந்த ஸௌஹ்ருத்த்வம் செய்யுமத்தைக் கேளீர். எம்பெருமான், விமுகர்களையும் வாரிப் பிடியாகப் பிடிக்கவேண்டி ஸர்வமுக்தி ப்ரஸங்க பரிஹாரார்த்தமாகச் சில வியாஜங்களை ஸ்வயமேவ கல்பித்துக்கொள்வதை சாஸ்த்ர முகத்தினாலறிகிறோம். ப்ரக்ருதச்லோகத்தில் *ஸ்வேநைவ க்ல்ப்தம் அபதேசம் அவேக்ஷமாண:* என்றதை நோக்கவேணும் பதத்தின்மேல் பொருள் என்னவென்றால், ஸ்வேநைவ— தானாகவே, க்ல்ப்தம்—கல்பித்துக்கொண்ட, அபதேசம்—வ்யாஜவிசேஷத்தை அவேக்ஷமாண:— கடாக்ஷித்தவனாய் என்பதாம். இப்படி தேசிகன் ஸாதித்தது—ஸகலசாஸ்த்ரஸாரார்த்த பரமார்த்தமன்றோ? இதெல்லாம் விநோதமாகப் பேசின பேச்சோ?

இதற்குமேலும் நோக்கவேணும். *ஸ்வப்ராப்தயே தநுப்ருதாம் த்வரஸே முகுந்த!* என்பது மூன்றாவது பாதம். இதில் த்வரஸே என்கிற க்ரியாபதம் பேறு யாருடையதென்பதை நிஸ்ஸந்தேஹவிபர்யயமாகக் காட்டித்தரவில்லையா? *இன்று விண்ணுலகம் தருவானாய் விரைகின்றான்* என்ற திருவாய்மொழிப் பாசுரத்தை மொழிபெயர்த்தவத்தனையேயோ? சாஸ்த்ரார்த்தத்தைச் சிந்தித்து உள்ளமுருகியன்றோ உரைத்திருக்கிறார். *மாறிமாறிப் பலபிறப்பும் பிறந்து தொலையட்டுமிவன் என்று கைவாங்கியிராதே, *கூவிக்கொள்ளுங்கால மின்னங்குறுகாதோ* என்று இவன் கதறுமது அற்பமென்னும்படி 'கூடி வாழுங்கால மின்னுங் குறுகாதோ' என்று அவன் பதறியிருப்பது பெருங்கடல் போன்றது என்கிற தத்துவத்தையன்றோ த்வரஸே என்பதனால் தெள்ளிதாக உணர்த்தியிருக்கின்றார் தேசிகன்....*

## 2. ப்ரபத்த்யாம்-ப்ரபத்திஉபாயமா? அநுபாயமா? என்னுமதில் கேண்மின்.

ஆளவந்தார் தாம் அருளிச்செய்த ஸ்தோத்ர ஸங்க்ரஹத்தில் *நிஜகர்மாதி பக்த்யந்தம் குர்யாத் ப்ரீத்யைவ காரித:, உபாயதாம் பரித்யஜ்ய ந்யஸ்யேத் தேவே து தாம் அபி:* என்று ஸ்பஷ்டமாகச் சொல்லி வைத்தார் இது வியாக்யான ஸாபேக்ஷமல்லாத மூலம். ஆனாலும் இங்கே தேசிகன் பரக்க வியாக்யானமிட்டிருக்கிறார். என்ன இட்டிருக்கிறாரென்றால். [ரக்ஷாயாம்] "முக்தவ்யாபார ந்யாயேந ஸ்வயம் ஸ்வாதுத்வாத் க்ஷணிகஸ்ய காலாந்தரபாவி பலஸாதநத்வ அநுபபத்தி தர்சநாச்ச நாஸ்ய ஸ்வவ்யாபாரே மோக்ஷோபாயதாபுத்திரபி ஸ்யாத் இதி பாவ:, அத: தைஸ்தை ராகாரைரிதோ பகவாநேவ ஸர்வத்ர உபாய:" என்று கல்வெட்டாக எழுதியிருக்கிறார். இங்கு "முக்தவ்யாபாரந்யாயேந" என்றெழுதியிருக்கிற இதுதான் இவ் விஷயத்தில் ஜீவநாடியானது. கேவலம் பலாநுபவத்தில் ஊன்றின முக்தனுக்கு ஸாதநாநுஷ்டான ரூபமான செயல் லவலேசமுமில்லை அது அபேக்ஷிதமுமன்று; ஆனாலும் முக்தன் வாளாவிருப்பதில்லை. செய்வனவெல்லாம் ஸ்வயம் போக்யமாகக்கொண்டு செய்கிறான். பரமைகாந்திகளான முமுக்ஷுக்களின் வியாபாரங்களும் அப்படிப்பட்டவையேயென்று இதனால் வெட்டவெளிச்சமாகத் தேறவில்லையா? இப்படிப்பட்ட தேசிக திவ்ய ஸூக்திகள் ஒன்றிரண்டன்றே; நலிந்து பொருள் கொள்ள வேண்டியவையோ இவை?

தேசிகன் ந்யாஸதிலகத்தில் *த்வய்யேகஸ்மிந்நபி விஜஹதோ முக்தவத் ஸாதநத்வம்— ஸூரயோ மே ஸ்வதந்த்ராம்* என்று, எம்பெருமானைக்கூட உபாயமென்ன ஸஹியாத நித்ய முக்தகல்பர்களான மஹான்கள் திறத்திலே தமக்கு ப்ராவண்யாதிசயமுள்ளதாகக் கூறியிருக்கிறார். கீதா பாஷ்யத்தில் (8-14) *அநந்யசேதாஸ் ஸததம் யோ மாம் ஸ்மரதி நித்யச:, தஸ்யாஹம் ஸுலப: பார்த்த! நித்யயுக்தஸ்ய யோகிந:* என்றவிடத்து "தத்வியோகம் அஸஹமாந: அஹமேவ தம் வ்ருணே; மத்ப்ராப்த்யநுகுண—உபாஸநவிபாகம் தத்விரோதி நிரஸநம் அத்யர்த்தமத்ப்ரியத்வாதிகஞ்ச அஹமேவ ததாமி இத்யர்த்த: *யமேவைஷ வ்ருணுதே தேந லப்ய:* இதி ஹி ச்ரூயதே." என்றுள்ளவிடத்தில் தாத்பர்ய சந்த்ரிகையில் "உக்தஸ்ய அதிவாதமாத்ரத்வசங்காவ்யுதாஸாய ச்ருதிமூலதாம் ஆஹ—யமேவேதி;" என்றருளிச் செய்திருக்கிறார். "உக்தஸ்ய ச்ருதிமூலதாம் ஆஹ" என்றோ "ச்ருத்யநுக்ருஹீதோயம் அர்த்த இதி ப்ரகாசயதி" என்றோ அவதாரிகை இடலாமாயிருக்க, பலவிடங்களில் கைப்பற்றின அந்த பத்ததியை இங்கே விட்டு "அதிவாத மாத்ரத்வ சங்காவ்யுதாஸாய ச்ருதி மூலதாமாஹ" என்று அவதாரிகை இட்டிருப்பதை உற்று நோக்க வேணுமே.

ப்ரபத்தி பண்ணவேணுமென்கிற புத்தி நமக்கேயுண்டானதா? எம்பெருமான் தந்தருளினதா? என்பதை நாம் முக்கியமாக ஆராயவேண்டும். நமக்கேயுண்டானதென்று தேறிவிடுமாயின் அதை உபாயமென்னத் தட்டில்லை; உபாயமென்றே சொல்லியாகவேண்டும். **வரத! தவ கலு ப்ரஸாதாத் ருதே சரணமிதி வசோபி மே நோதியாத்** என்று ஆழ்வானருளிச் செய்ததையடியொற்றி தேசிகனும் **ஸ்வாமீ ஸ்வசேஷம் ஸ்வவசம் ஸ்வபரத்வேந நிர்ப்பரம், ஸ்வதத்த ஸ்வதியா ஸ்வார்த்தம் ஸ்வஸ்மிந் ந்யஸ்யதி மாம் ஸ்வயம்** என்று ந்யாஸதசகத்தில் ஸாதித்தார். இதில் ஸ்வசப்தத்தை எத்தனை தடவை ப்ரயோகித்திருக்கிறாரென்று எண்ணிப் பார்க்கவேணும். இதில் பூர்வார்த்தமிருக்கட்டும். உத்தரார்த்தத்தை உற்று நோக்கவேணும். "ஸ்வதத்தயா தியா" என்னலாமே எளிதாக; "ஸ்வதத்த ஸ்வதியா' என்று சொல்லியிருப்பதை நோக்கவேண்டாமா? பலகால் காட்டினதையும் நாம் இங்கே காட்டுதும்.

ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸார சரமச்லோகாதிகாரத்திலுள்ளதாவது — "கர்த்தா சாஸ்த்ரார்த்தவத்த்வாத்* என்கிறபடியே ஜீவனுக்கு கர்த்ருத்வம் ப்ராமாணிகமேயாகிலும் இது பராதீநமுமாய் அல்பவிஷயகமுமாய் ப்ரதிஹதி யோக்யமுமாயிருக்கும். ஆகையால் இவன் தான் உபாயாநுஷ்டானம்பண்ணிற்றும் **வரத! தவ கலு ப்ரஸாதாத்ருதே சரணமிதி வசோபி மே நோதியாத்** என்று சொல்லுகிறபடியே அவன் கடாக்ஷமடியாக வருகையால் அவனாலே ப்ரேரிதனாய், அவன் ஸஹகரியாதபோது நீட்ட முடக்கமாட்டாதே அவன் கொடுத்த

கரணகளேபரங்களைக் கொண்டு அவன் காட்டினவுபாயத்தை அவன் துணைசெய்ய அநுஷ்டித்து அவனால் கொடுக்கப்படுகிற பலத்துக்கு சாதகம்போலே அண்ணுந்திருக்கிற விவனை ஸ்வாதீந ஸர்வ விஷய அப்ரதிஹத கர்த்ருத்வமுடையவனோடே துல்யமாக இரண்டாம் ஸித்தோபாயமாக வெண்ணுகை விவேகியான முமுக்ஷுவுக்கு உசிதமன்று.... **என்னுணர்வினுள்ளே யிருத்தினேன் அதுவுமவனதின்னருளே** யென்றும்**இசைவித்தென்னையுன் தாளிணைக் கீழிருத்து மம்மானே** யென்றுஞ் சொல்லுகிறபடியே உபாயபூதனை அவன் செய்விக்கச் செய்கிற வ்யாஜமாத்ரத்தை அவனோடொக்க உபாயமாக வெண்ணுகை உசிதமன்றென்று ஏகசப்தத்துக்கு தாத்பர்யம்'' என்று. விரோதபரிஹார ரஹஸ்யத்திலுள்ள ஸ்ரீஸூக்திகளாவன—''பக்திபோலே ப்ரபத்தியும் சோதிதமான உபாயமாய் நின்றது; இது பகவத்ப்ரஸாத வ்யவஹிதமாகையாலே ஸாக்ஷாத் பலஹேதுவன்றென்னுமிடம் பக்த்யாதிகளுக்கும் துல்யமாயிருந்தது. இப்படியிருக்க ப்ரபத்தியை உபாயமன்றென்று விசேஷித்துச் சொல்லுகைக்குத் தாத்பர்யமென்னென்னில், சாஸ்த்ரங்கள் பக்தியைப்போலே ப்ரபத்தியையும் உபாயமாக விதிக்கச் செய்தேயும் இவ்வுபாயத்தினுடைய அநுஷ்டான சரீரத்தைப் பார்த்தால் பரந்யாஸப்ரதாநமாய் நீயே உபாயமாக வேண்டுமென்று அபேக்ஷிக்கிறபடியே பரஸ்வீகாரம் பண்ணிக் கொண்டு உபாயாந்தரஸ்தானத்திலே நிற்கிற ஈச்வரனுடைய நிரபேக்ஷோபாயத்வம் இவ்வித்யைக்கு வேத்யாகாரமாய் நிற்கையாலே வித்யாந்தரங்களிற் காட்டில் இவ்வாசியைப்பற்ற ப்ரபத்தியை உபாயமன்றென்கிறது'' என்பவை. விவரிக்கக் கேண்மின்: சாஸ்த்ரங்களில் ஒன்று விதிக்கப்படுமானால் அது ஸாதனமாக இருந்தே தீருமென்றும், ஸாதனமாகமாட்டாததை சாஸ்த்ரம் விதியாதென்றும், விதிவிஷயமானதற்கு ஸாதநத்வம் அநிவார்யமென்றும், சரமச்லோகத்திலும் **மாமேகம் சரணம் வ்ரஜ** என்று விதிக்கப்பட்டிருக்கின்ற ப்ரபத்திக்கு எப்படி உபாயத்வம் இல்லாமற் போகுமென்றும் சிலர் சங்கிப்பதுண்டு; இந்த சங்கையை நியாஸதிலகத்தில் தேசிகனே வேரற அரிந்து போகட்டிருக்கிறார்; எங்ஙனேயென்னில்; **ஹேதுர் வைதே விமர்சே பஜநவத் இதரத். கிந்து அநுஷ்டாநகாலே வேத்யஸ் த்வத்ரூப பேதோ விவித இஹ ஸதூபாயதா அந்யாநபேக்ஷா** என்று கையிலங்கு நெல்லிக்கனியாகக் காட்டியிருக்கிறார் தத்துவத்தை. இதன் கருத்து யாதெனில், ப்ரபத்தியானது விதிக்கப்பட்டிருப்பதனால் பக்திபோலே இதுவும் உபாயமென்று சொல்லக் கூடியதாயிருந்தாலும் இங்கு அங்ஙனே கொள்வதற்கிடமில்லை; ஒவ்வொரு வித்யையிலும் எம்பெருமானுக்கு ஒவ்வொரு ரூபம் அறியக்கடவதாயிருக்கிற கணக்கிலே இந்த ப்ரபத்திவித்யையில் இதராநபேக்ஷ உபாயத்வம் வேத்யாகாரமாக இருக்கையாலே என்கை.'' இப்படி தேசிகன் வெட்ட வெளிச்சமாகச் சொல்லியிருப்பதை, இன்னமும் கேண்மின். [புதிதாகக் கேட்பிக்கிறோமல்லோம்; பலகால் கேட்பித்தவையே; வித்வான்கள் பரமக்ருபையுடன் ஆராய்ந்தருளவேணும்].

நியாயஸித்தாஞ்ஜனத்தில் **இயம் கேவல லக்ஷ்மீசோபாயத்வ ப்ரத்யயாத்மிகா** என்றதையும், உடனே **ஸ்வஹேதுத்வதியம் ருந்தே** என்றதையும் **கிம்புநஸ் ஸஹகாரிணம்** என்றதையும் தனித்தனியே ஆழ்ந்து பார்க்கவேண்டாவா? ப்ரபத்தியென்கிற வஸ்து தேறும்போதே தன்னிடத்தில் உபாயத்வத்தை அணுவளவும் ஸஹியாமலே தேறுவதனால் **ஸ்வஹேதுத்வதியம் ருந்தே** என்று வெட்டென்று ஆண்டிரஸ்டாகச் சொல்லியுள்ளதைப் பலகால் எடுத்துக்காட்டியிருக்கிறேனடியேன்.

### 3. ரமாயாம்—ஸ்ரீமஹாலக்ஷ்மியின் மோக்ஷப்ரதத்வ விஷயத்தில் கேண்மின்.

ஆளவந்தார் அருளிச்செய்த சதுச்ச்லோகியில் மூன்றாவது ச்லோகத்தில் **ச்ரேயோ ந ஹ்யரவிந்த லோசநமந:காந்தா ப்ரஸாதாத்ருதே ஸம்ஸ்ருத்யக்ஷர வைஷ்ணவாத்வஸு ந்ருணாம் ஸம்பாவ்யதே கர்ஹிசித்** என்பது உத்தரார்த்தம். மோக்ஷபர்யந்தமான எல்லாப் பேறுகளும் பிராட்டியின் அநுக்ரஹத்தாலல்லது ஸம்பவிக்கமாட்டாதென்பது இதன் பொருள். இவ்விடத்தில் ஒரு சங்கை யுண்டாகும் (அதாவது) அபார காருண்ய வாத்ஸல்யாதி ஸகல

ஸத்குண நிதியான எம்பெருமான் நமது இடர்களைக் களைந்து இன்பங்களை யளிக்கவல்லவனு யிருக்க, அவனுடைய அநுக்ரஹத்தினலாகாததும் ஒன்றுண்டோ? பிராட்டியின் அநுக்ரஹம் எதற்காக? என்று; இங்கு இந்த சங்கையை ஸ்ரீநிகமாந்த தேசிகன் தோன்றுவித்து அந்த ச்லோகத்தின் பாஷ்யத்திலும் வேறிடங்களிலும் பரிஹார முணர்த்தியிருக்கிறார். "நநு மோக்ஷப்ரதத்வம் பகவத ஏவேதி ஸர்வத்ர ஸ்தாபிதம்" என்று தொடங்கி சங்கையை உத்க்ஷேபித்து 'மைவம்' என்று தொடங்கி தத்பரிஹாரம் பண்ணியிருப்பதைக் காண வேணும். ப்ரக்ருத ச்லோகபாஷ்யத்தின் முடிவில் நிஷ்கர்ஷம் செய்திருப்பது என்ன வென்றால், "மோக்ஷப்ரதே பகவதி முமுக்ஷூணும் கடகதயா ஏஷா திஷ்டதீதி ஸர்வஸம்மதம்" என்பது முதல்வாக்கியம். இதன் பொருளாவது, மோக்ஷமளிப்பவன் எம்பெருமானே; பிரட்டியோ வென்னில், புருஷகாரபூதையா யிருக்கிறுளென்பது யாவருமிசைந்தது—என்பதாம்.

(அந்த சதுச்ச்லோகியில தானே) இரண்டாவது சுலோகத்தில் மோக்ஷப்ரதாக ப்ரஸ் தாவமே யில்லாதிருக்கவும் ப்ராஸங்கிகமாகக் கொண்ட விசாரத்தில் தேசிகனே காரிகை யொன்று இட்டிருக்கிறார். (அதாவது) **அஸ்தி கர்மார்ஹபலதே பத்யௌ க்ருத்ய த்வயம் ச்ரிய:, நிக்ரஹாத் வாரணம் காலே ஸந்துக்ஷண மநுக்ரஹே** என்பதாம். இதன் பொரு ளாவது, கர்மாநுரூடமாகப் பேறு பெறுவிக்குமவன் எம்பெருமானே; பிராட்டி தான் இரண்டு க்ருத்யங்களை வைத்துக் கொள்கிறுள்; அவன் நிக்ரஹிக்கும்போது அதைத் தடுப்பதும் அநுக்ரஹிக்கும் போது அதை மேன்மேலும் வளரச்செய்வது:மென்கை. அதற்குமேல் "அத்ர வரதகுரூபதேச அநு ஸாரிபி: வ்யாஸார்யைச் ச உக்தம்—ப்ரதாபோஷ்மல பித்ருத்வ துராஸத பகவத் ஸமாச்ரயண ஸித்தயே புருஷகாராநுப்ரவிஷ்ட வாத்ஸல்ய நிர்ப்பர லக்ஷ்மீ ஸமாச்ரயணம் ஸ்ரீமச்சப்த விவரணமுகேந அபிதீயதே இதி" என்றெழுதியுள்ளார் ஸ்ரீதேசிகன். மேலெடுத்த வாக்யத் தில் வ்யாஸார்ய ரென்னப் பட்டவர் ச்ருதப்ரகாசிகாபட்டர்; அவர்க்கு வரதரூபதேசா நுஸாரித்வ விசேஷணமிட்டதனுல் ஸத்ஸம்ப்ரதாயசுத்தி காட்டப்பட்டதாயிற்று. தேசி கனுக்குப்ராசார்யான நடாதூரம்மாள் உபதேசித்த யதார்த்தமான அர்த்தத்தையே அவருடைய திருவடியான ச்ருதப்ரகாசிகாபட்டர் பொறித்து வைத்ததென்ன வென்றால்; எம்பெருமான் வாத்ஸல்யாதி குணநிதியாயிருக்கச் செய்தேயும் சீற்றங்கொள்ளும்படியான பிதாவாயுமிருக்கையாலே அணுகவொண்ணுதபடியாகவும் இருக்க நேருமாகையாலே அணு குவிப்பதற்குப் பாங்கான தண்ணளிவாய்ந்த பிராட்டியைப் புருஷகாரமாக வரிப்பது ஸ்ரீமச் சப்தவிவரண முகத்தாலே சொல்லப்படுகிறது என்பதாம். **லக்ஷ்மீ: புருஷகாரத்வே நிர்திஷ்டா பரமர்ஷிபி:, மமாபி ச மதம் ஹ்யேதத் நாந்யதா லக்ஷணம் பவேத்** என்கிற ப்ரமாணத்தை யார்தாம் மீறமுடியும்? நீரிலே நெருப்புக் கிளருமாபோலே குளிர்ந்த திருவுள்ளத் திலே அபராதத்தாலே சீற்றம் பிறந்தே தீரும். அப்போது நிர்ப்பயமாக அணுகுவதற்குப் பிராட்டியின் புரஸ்கரணம் அவர்ஜநீயமானதே. ஆனது பற்றியே ஆளவந்தார் 'ச்ரேயோ நஹ்யரவிந்தேத்யாதியையருளிச் செய்தார்—என்று விளக்கிக் காட்டியிருக்கிறார் தேசிகன்.

மேலே குறித்த ச்ருதப்காசிகாபட்டருடைய ஸ்ரீஸூக்திக்கும் முன்னே "உக்தஞ்ச ஸ்ரீவிஷ்ணுசித்தை: கத்யவ்யாக்யாநாரம்பே; மாத்ருத்வைகரூபாம் ச்ரியம் ப்ரபத்யதே: மாதா ஹிதாதபி புத்ரஸ்ய ப்ரியமேவ பச்யதி. பிதா து உபயம் பச்யதி. அதோ தண்டதரத்வ ஹீநதைவ அவலம்பநம் அஸ்யாம் தசாயாம் ஆஸீத் இதி', என்று எங்களாழ்வான் ஸ்ரீஸூக்தியையு மெடுத்துக்காட்டியிருக்கிறார் தேசிகன். வாத்ஸல்யாதிகளைப்போலே தண்ட தரத்வமு முடைய எம்பெருமானை யணுகுவதற்கு *நித்யமஜ்ஞாத நிக்ரஹையான பிராட்டியைப் புரஸ்கரிக்கவேண்டியது அவசியமாகிறது—என்பதையே தேசிகனைப்போல் ஒவ்வோராசார் யரும் அருளிச் செய்து வைத்துள்ளார். எங்களாழ்வானுடைய ஸ்ரீஸூக்திக்கு முன்னே பட்டருடைய ஸ்ரீகுணரத்நகோச ஸ்ரீஸூக்தியையும் உதாஹரித்திருக்கிறார். "ஆஹுச்ச *பிதேவ த்வத்ப்ரேயாந்* இத்யாரப்ய *மாதா தத்ஸி ந:* இதி" என்று, இவ்வளவோடும் நின்றிலர்; உடனே "ஏவம் அநப்யுபகமே தாம் புரஸ்க்ருத்ய பகவதபிகமநமபி தத்ரதத்ர உக்தம் துச்சகம் ஸ்யாத்" என்று மெழுதியிருக்கிறார். இதன் பொருளாவது—தண்டதரனுன

எம்பெருமானுடைய சீற்றத்தைபாற்றுதற்குப் பிராட்டியைப் புருஷகாரமாகக் கொள்ள வேணுமென்று இசையாதொழியில் ஆங்காங்கு சாஸ்த்ரங்களில் பிராட்டியைப் புரஸ்கரித்து எம்பெருமானை ஆச்ரயிக்கவேணுமென்று கூறியிருப்பது பொருந்தாமற்போகும்—என்கை. இஃதொன்று போதும் பிராட்டி விஷயத்தில் தேசிக ஸித்தாந்தத்தையுணர.

இதே இடத்தில்தான் (கீழே காட்டிய) *அஸ்தி கர்மார்ஹபலதே பத்யௌ க்ருத்யத்வயம் ச்ரிய:, நிக்ரஹாத் வாரணம் காலே ஸந்துக்ஷண மநுக்ரஹே* என்னும் காரிகையை தேசிக னிட்டிருக்கிறார். இந்த காரிகையானது ப்ரக்ருத விஷயத்தில் தோன்றும் ஸகலஸந்தேஹங் களையும் வேரறுக்கவல்லது. பிராட்டியின் இத்தகைய இரண்டு க்ருத்யங்களைத் திருவுள்ளம் பற்றியே ஆளவந்தார் *ச்ரேயோ ந ஹ்யரவிந்த லோசந........* இத்யாதியை யருளிச்செய்தா ரென்று சதுச்ச்லோகீ பாஷ்யத்தில் நிகமனம் செய்திருக்கிறார் ஸ்வாமி தேசிகன். அவ்விடத்து பாஷ்யத்தில் "நநு, மோக்ஷப்ரதத்வம் பகவத ஏவேதி ஸர்வத்ர ஸ்தாபிதம்" என்று தேசிகன் உத்க்ஷேபித்த ஆசங்கையைப் பரிஹரிக்குமிடத்து "மோக்ஷப்ரதே பகவதி முமுக்ஷூணாம் கடகதயா ஏஷா இஷ்டேதி ஸர்வஸம்மதம்" என்றெழுதியிருப்பதுண்டே, இஃதொன்றே இவ்விஷயத்திற்கு ஜீவநாடியாகும்.

நியாயஸித்தாஞ்ஜநத்தில் *இயம் கேவலலக்ஷ்மீசோபாயத்வ ப்ரத்யயாத்மிகா, ஸ்வஹேதுத்வதியம் ருந்தே* என்கிற காரிகையானது பிரபத்தியின் உபாயத்வத்தைமட்டும் தவிர்ப்பதன்று; பிராட்டியின் உபாயத்வத்தைத்தான் முந்துற முன்னம் தவிர்ப்பது. பிராட்டிக் கும் உபாயத்வ முண்டென்று எண்ணமிருந்தால் *லக்ஷ்மீததீசோபாயத்வ ப்ரத்யயாத்மிகா* என்றன்றோ வசனவ்யக்தி வெளிவந்திருக்கும். ஸம்ஸ்க்ருத நூல்களில் இங்ஙனே விமர்சித்து விளக்கின ஸ்வாமி தாமே சில்லரை ரஹஸ்யங்களில் எழுதிவைத்தவைகளையும் தெரிவிக் கிறேன்—ரஹஸ்ய ரத்நாவளியென்றும் அதன் ஹ்ருதயமென்றும் இரண்டு ரஹஸ்யங்கள் எழுதி யிருக்கிறார்; முப்பது வாக்யங்கள் கொண்ட ரஹஸ்ய ரத்நாவளியில் நான்காவது வாக்யம்—

'ஸர்வஸ்வாமிநியாய் ஸர்வேச்வரனுக்கு சேஷமாய் ஸஹதர்மசாரிணியான பெரிய பிராட்டியார் இத்தலையில் வாத்ஸல்யாதிசயத்தாலும் அத்தலையில் வால்லப்யாதிசயத்தாலும் புருஷகாரமாய்க் கொண்டு இஜ்ஜீவர்களுக்குத் தஞ்சமாகிறாள். இவளைப் புருஷகாரமாக்கவேண்டுகிறது ஈச்வரன் தண்டதரனாகையாலே" என்று பணித்தார். இத்யேதாவதா அலம். .... .... *

## 4, 5. தயாகுணத்திலும் வாத்ஸல்ய குணத்திலும் கேவீர்.

எம்பெருமான் ராமக்ருஷ்ணாதியவதாரங்கள் செய்வது எதற்காக? என்பது ஒரு கேள்வி. ராவண கம்ஸ சிசுபாலாதிகளான அரக்கர்களையும் அசுரர்களையும் தொலைப்பதற்காக—என்று சிலர் விடையளிப்பர்கள். தத்வதர்சிகளான நம் ஆசாரியர்கள் அருளிச்செய்வது—அதை வியாஜமாத்திரமாக்கி, திருநாட்டில் காட்டமுடியாத திருக்குணங்களை விளங்கக் காட்டுவதற் காகவே திருவவதாரங்கள் செய்தருள்வதாக. அந்தரதிகரண ஸ்ரீ பாஷ்ய—கீதாபாஷ்யாதிகளில் இதை ஸ்பஷ்டமாகக் காணலாம். பட்டர் (ஸ்ரீ ரங்கராஜஸ்தவத்தின் உத்தரசதகத்தில் "குணபரீவாஹாத்மநாம் ஜந்மநாம்" என்றருளிச் செய்தவிது ஸாரஸங்க்ரஹமான ஸூக்தி. எம்பெருமானை *உயர்வறவுயர்நலமுடையவன்* என்கிறாழ்வார். *அஸங்க்யேய கல்யாண குணகணநிதி* என்கிறார்கள் ஆசாரியர்கள். எண்ணில் பல் குணங்கள் இருந்தாலும் அவற்றுள் தயை, வாத்ஸல்யம் என்கிற இரண்டு குணங்களே சிறந்தவை, முக்கியமானவை. நிர்குண ப்ரஹ்மவாதிகளான பிறர் திரளில் பிறவாதே இந்திருக்குணங்களை வாய் வெருவுவதற்கென்றே இட்டுப் பிறந்த எம்பெருமானார் தர்சநத்திற்பிறந்தவர்கள் இத்திருக்குணங்களின் பொருளில் விஸம்வாதப்படுவதென்பது மிகவும் சோசநீயமென்ன வேணும். 'குணாநுபவத்தாலே போது போக்குமவர்கள்' என்பது நமக்குத் தனிச்சிறப்பு. மற்ற எல்லாத் திருக்குணங்களையும் விட்டிட்டு இந்த தயாவாத்ஸல்யங்களாகிற இரண்டு திருக்குணங்களை மட்டும் அநுபவிக்கத் தொடங்கினால் காலமுள்ளதனையும் அநுபவிக்கலாமே.

நினைவுக்கு வருவதொன்றை உபேக்ஷிக்க முடியாமல் ஈண்டு எழுதுகின்றேன்; சென்னைத் தொண்டமண்டலக் கலாசாலையில் அடியேனுடைய ஸ்ரீராமாயண ப்ரவசனம் நடந்துகொண்டிருந்தபோது வாலிவதப்ரகரணம் உபந்யஸிக்கப்பட்டு வருகிறது. பரம ரஸிக ஸார்வபௌமர்களான ஸ்ரீமதுபயவே, ஸர். S. வரதாசார்யஸ்வாமி, மஹரிஷி ஸ்ரீ வாஸுதேவாசார்யஸ்வாமி போல்வார் வீற்றிருந்து கேட்கிறார்கள். "ஸஞ்ஜாதபாஷ்ப: பரவீரஹந்தா ராமோ முஹூர்த்தம் விமநா பபூவ" என்கிற வால்மீகி சுலோகத்தை உபந்யஸித்துக் கொண்டிருக்கிறேன். அதன் பூர்வார்த்தமென்னவென்றால், "இத்யேவமார்த்தஸ்ய ரகுப்ரவீர: ச்ருத்வா வசோ வால்யநுஜஸ்ய தஸ்ய" என்பது. "வாலிமாண்டபின்பு ஸுக்ரீவமஹாராஜர் ஸௌப்ராத்ரம் பின்னாட்டி அழத் தொடங்கினர்; பெருமாள் அவர் கழுத்தைக் கட்டிக்கொண்டு தாமும் அழத் தொடங்கினர்" என்று நினைவுக்கு வந்த ஆசார்ய ஸ்ரீஸூக்தியை மூலமாகக் கொண்டு "ஸஞ்ஜாதபாஷ்ப: பரவீரஹந்தா ராமோ முஹூர்த்தம் விமநா பபூவ" என்கிற உத்தரார்த்தத்தைப் போது போவதறியாமல் கண்ணீர்ப் பெருக்குடன் விரமல் பொருமலாய் உபந்யஸித்துக் கொண்டிருக்கிறேன்; அப்போது (Federal court Judge) ஸ்ரீ வரதாசார்யஸ்வாமியும் மஹர்ஷிவாஸுதேவாசார்ய ஸ்வாமியும் பட்டபாடுகளை என் சொல்வேன்! என்னெழுதுவேன்!! இப்படி ஒன்றிரண்டு ஸந்தர்ப்பங்களல்ல. நேற்றை அகில இந்திய ஐக்ய வைணவ மகாநாட்டின் முடிவில் ஆங்கிலத்தில் அற்புதமாகச் சொற்பொழிவாற்றிய மஹாமேதாவி ஸ்ரீஉவே K.சேஷாத்ரி யென்பவர் மஹாஸபையோர் மனமுருக இதையெல்லாம் நினைவூட்டிப் பேசினபடியால் பழைய செய்திகள் பலவும் நினைவுக்கு வந்து இஃதெழுதலாயிற்று. (இந்தமஹான் திருவனந்தபுரம் யூனிவர்ஸிடியில் தத்துவப் பேராசிரியராக இருந்து ஓய்வு பெற்றவர். தற்காலம் Sir C, P. Ramaswamy Iyer Memorial Foundationல் Director ஆக இருப்பவர் தொண்டமண்டலம் ஹாலில் நமது உபந்யாஸங்களை அநுபவித்தவரென்று ஸபையில் சொல்லிக் கொண்டவர்.)

தேசிகன் தசாவதாரஸ்தோத்ரத்தில் ஒவ்வோரவதாரத்திற்கும் தனித்தனி ஒவ்வொரு சுலோகமிட்டருளி, முடிவில் தசாவதாரங்களையும் ஒன்று சேர்த்து அநுபவிக்கிற "இச்சாமீந! விஹாரகச்சப!" இத்யாதி ச்லோகத்தில் சக்ரவர்த்தி திருமகனாரைக் "கருண காகுத்ஸ்த!" என்று விளிக்கிறார். கருணை, காருண்யம், தயா—இவையெல்லாம் பர்யாயம். "ருஷேர் தர்மாத்மநஸ் தஸ்ய காருண்யம் ஸமபத்யத" என்ற ஸ்ரீராமாயண ச்லோகத்திலும் *அஸ்தாந ஸ்நேஹ காருண்ய" என்ற கீதார்த்த ஸங்க்ரஹ ச்லோகத்திலும் காருண்ய சப்தார்த்தம் இன்னதென்பதை நாம் விவரிக்கவேணுமோ? இக்காலத்தவர்கள் கூறுவதென்னவென்றால், பரது:க்கது:க்கித்வமென்பது நம்போல்வாரான மனிதர்களுக்குக் கூடுமானாலும் அது ஹேய குணமாகையாலே ஹேயப்ரத்யநீகனான எம்பெருமானுக்குக் கூடாதென்கிறார்கள். இவர்கள் யதுதிகளுக்கு நெடுந்தூரத்திலே நிற்கக் கடவர்கள். தேசிகன் தயாசதகமருளிச் செய்ததில் ஸ்ரீராமாதயாளுவான எம்பெருமானுடைய தன்மைகளையே தயாகுணத்தின்மேல் ஏற்றியருளிச் செய்துள்ளார். "ஜந்தூநவலோக்ய ஜாதநிர்வேதா" என்று தயை நிர்வேதப்பட்டதாக ஸாதித்தது தயாளுவான எம்பெருமான் நிர்வேதப் பட்டதைச் சொன்னபடியன்றோ. .... .... *

## இனி வாத்ஸல்யவிஷயம்

*மயி திஷ்டதி துஷ்க்ருதாம் ப்ரதாநே மிததோஷாந் இதராந் விசிந்வதீ த்வம், அபராத சதைரபூர்ணகுக்ஷி: கமலாகாந்ததயே!.... *ஆலிஹ்ய தாந நிரவசேஷம் அலப்ததருப்தி: *ஔதந்வதே மஹதி ஸத்மநி பாஸமாநே ச்லாக்யே ச திவ்யஸதநே தமஸ: பரஸ்தாத், அந்த: கலேபரமிதம் ஸுஷிரம் ஸுஸூக்ஷ்மம் ஜாதம் கரீச! கதம் ஆதரணாஸ்பதம் தே* இத்யாதி தேசிக திவ்யஸூக்திகளை யநுஸந்திப்பார்கு மருள்வாராது. கடவல்லியில்* *அங்குஷ்டமாத்ர: புருஷோ மத்ய ஆத்மநி திஷ்டதி, ஈசாநோ பூதபவ்யஸ்ய ந ததோ விஜுகுப்ஸதே* என்றவிடத்து பாஷ்யமிட்ட உபநிஷத்பாஷ்யகாரர் 'வாத்ஸல்யாதேவ தேஹகதாநபி தோஷாந் போக்யதயா பச்யதீத்யர்த்த:* என்றெழுதிவைத்தார். (ந விஜுகுப்ஸதே) என்ற மூலத்திற்கு "போக்யதயா பச்யதி" என்கிற அர்த்தமும் அது வாத்ஸல்ய குணகார்யம் என்பதும் அந்த மஹான் கண்டறிந்த பொருள். இத்யலம். .... .... *

## 6. அத்ருஷ்டார்த்தமென்னும் சரணாகதியனுஷ்டானத்தைப்பற்றிக் கேளீர்.

பரமபுருஷார்த்தமான அரும்பெரும்பேறு பெறுதற்கு உறுப்பாக நாம் ஒரு ஸதாசார்யரை ஆச்ரயிக்கிறோம்; என்றைக்கு ஆச்ரயிக்கிறோமோ அன்றைக்கு நமக்கு ஸமாச்ரயணமானதாகத் தொன்றுதொட்டு வ்யவஹாரம் நிகழ்ந்துவருகின்றது. திருவாழி திருச்சங்குகளினால் இலச்சினை பெறுகையாகிற சக்ராங்கனத்தையே ஸமாச்ரயணமென்று உலகம் க்ரஹித்திருக்கின்றது. உண்மையில் ஸமாச்ரயணமென்பது அவ்வளவேயன்று. "ஆசார்யனை ஆச்ரயித்து அவன் மூலமாக எம்பெருமானையடிபணிதல்" என்னும் பொருளதான ஸமாச்ரயணமென்கிற சொல்லானது ஆசார்யனால் பெறுவிக்கப்படுகிற பேறுகளுக்கெல்லாம் ஸூசகமாக நிற்கின்றது. ஆசார்யனால் க்ருதக்ருத்யனாகச் செய்விக்கப் பெறுகையே ஸமாச்ரயணமெனப்படுகிறது. பகவதாச்ரயணத்தில் பர்யவஸிதமாகிறது. இந்த ஸமாச்ரயணத்தையே பஞ்ச ஸம்ஸ்கார மென்கிற சொல்லாலும் வழங்கிவருகிறார்கள். "தாப: புண்ட்ரஸ ததா நாம மந்த்ரோ யாகச்ச பஞ்சம:, அமீ பரமஸம்ஸ்காரா: பாரமைகாந்த்ய ஹேதவ:" என்று யாவருமறிந்த ச்லோகமானது பஞ்ச ஸம்ஸ்காரங்கள் இன்னின்னவையென்பதை விவரித்துக் காட்டுகின்றது. தாப: என்பது முதல் ஸம்ஸ்காரம். அதுதான் தப்தசக்ராங்கனமென்பது. திருவிலச்சினையென்பது ஸம்ப்ரதாய வழக்கு. இரண்டாவதான புண்ட்ரஸம்ஸ்காரமாவது த்வாதசோர்த்வபுண்ட்ரதாரணம் செய்வித்தல். மூன்றாவதான நாமஸம்ஸ்காரமாவது 'இந்த சிஷ்யன் ஸ்ரீவைஷ்ணவனாயினான்' என்பதை விளங்கக் காட்டுகின்ற தாஸ்யநாமகரணம். அவரவர்களின் ஸம்ப்ரதாயப்படி ராமாநுஜதாஸனென்றும் மதுரகவிதாஸனென்றும் ஸ்ரீவைஷ்ணவதாஸனென்றும் இப்புடைகளிலே வழங்கிவருவன காண்க. இனி நான்காவதான மந்த்ர ஸம்ஸ்காரமாவது-திருமந்த்ரம் த்வயம் சரமச்லோகம் என்கிற ரஹஸ்யத்ரயத்தை உபதேசிக்கப் பெறுகை. ஐந்தாவதான யாகமாவது 'யஜ—தேவபூஜாயாம்' என்கிற தாதுவிலிருந்து தேறுகிற யாகசப்தம் திருவாராதனத்தைச் சொல்லுகிறதாகையாலே பகவதாராதனத்திற்கு அதிகாரம் பெறுகை. இதற்கு மற்றொரு வகையாகவும் பொருள் கூறுவர். அது நிற்க

இவற்றுள் நான்காவதான மந்த்ரஸம்ஸ்காரத்தில் த்வயமென்கிற மந்த்ரரத்நமே மிகச் சிறந்தது. ஸமாச்ரிதனான சிஷ்யனை அந்த மந்த்ரரத்நமே க்ருதக்ருத்யனாக்குகின்றதாக நம் ஆசார்யர்களனைவருடையவும் ஸமகண்டமான ஸித்தாந்தம். இதனாலேயே ஸமாச்ரயண நிஷ்பத்தியென்றுணர்க இதுதன்னை ரஹஸ்ய க்ரந்தத்திலே ஸுவ்யக்தமாக எழுதிவைத்து சிலாலிகிதமாக்கிவைத்தவர் வேதாந்த தேசிகன். எங்ஙனே யென்னில்; ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் க்ருதக்ருத்யாதிகாரத்திலே—

> "அநாதிகாலம் ஆஜ்ஞாதிலங்கனமடியாகவுண்டான பகவந்நிக்ரஹத்தாலே ஸம்ஸரித்துப் போந்த நமக்கு அவஸரப்ரதீக்ஷையான பகவத்க்ருபைபடியாகவுண்டான ஸதாசார்ய கடாக்ஷவிஷயீகாரத்தாலே வந்த த்வயோச்சாரணாநுச்சாரணத்தாலே ப்ரபத்த்யநுஷ்டானம் பிறந்தபின்பு சரண்ய ப்ரஸாதனங்களில் இதுக்குமேல் ஒன்றில்லாமையாலே நிக்ரஹ ஹேதுக்களையெல்லாம் க்ஷமித்துத் தீர்ந்தவடியவர் தம்மைத் திருத்திப் பணிகொள்ளவல்ல ஸர்வசேஷியான ச்ரிய பதி தன்பேருகத் தானே ரக்ஷிக்குமென்று தேறி நிர்ப்பரனாயிருவென்கை. இது*மாசுச:* என்கிற சரண்ய வாக்யத்திலும் தீர்ந்தபொருள்."

என்றுள்ள வாக்கியங்கள் நிஸ்ஸந்தேஹவிபர்யயமாக உண்மைப்பொருளை யுணர்த்துகின்றன. மேலே உதாஹரித்த வாக்கியராசியில் "த்வயோச்சாரணாநுச்சாரணத்தாலே ப்ரபத்த்யநுஷ்டானம் பிறந்தபின்பு" என்றும் "சரண்ய ப்ரஸாதநங்களில இதுக்கு மேல் ஒன்றில்லாமையாலே" என்றுமுள்ள ஸ்ரீஸூக்திகள் ஸாரமானவை. மந்த்ரஸம்ஸ்கார ஸமயத்தில் த்வயமென்னும் மந்த்ரத்தை ஆசார்யன் சொல்ல அதை சிஷ்யன் பின்சொல்லுவதுண்டே இதுதான் ப்ரபத்த்யனுஷ்டானமென்று சொன்னதோடு நில்லாமல் இதற்குமேல் வேறொன்று கிடையாதென்றும் ஸுவ்யக்தமாக அருளிச் செய்தாராயிற்று. இங்ஙனே தமிழில் அருளிச் செய்ததை சரணாகதி கத்யபாஷ்யத்தின் முடிவில் ஸம்ஸ்க்ருதத்திலும் அருளிச்செய்துள்ளனர்; இவை பலகால் எடுத்துக்காட்டப்பட்டவை. .... .... .... *

இப்படியிருக்க, ஒருவகுப்பினர் அத்ருஷ்டார்த்தமென்று ஒன்று நடத்திப்போருவதானது சாஸ்த்ரங்களிலும் ஸதாசார்யாநுஷ்டாந பரம்பரையிலும் எங்கும் கண்டதில்லை. எம்பெருமானுடைய சிஷ்ய பரம்பரையிலே ஜனித்தவர்களுக்கு ப்ரபந்நத்வமோ சரணாகதத்வமோ ஜன்மஸித்தமேயாகும். அன்னவர்கள் பஞ்ச ஸம்ஸ்காரம் செய்துகொள்வதானது வைஷ்ணவ தீக்ஷார்த்தமாக வத்தனையல்லது மோக்ஷஸாதனமாகவன்று. நம்முடைய குல கூடஸ்தரான எம்பெருமானுர்க்கு ஸ்ரீரங்கநாதனிடமிருந்து வரமும் கிடைத்திருக்கிறது. அதையும் தேசிகனே ந்யாஸதிலகத்தில் "ச்ருத்வா வரம் ததநுபந்த மதாவலிப்தே" என்கிற ஸ்ரீஸூக்தியினுல் காட்டியுள்ளார். அதன் வியாக்கியானங்கள் ஸேவிக்க.

அதற்கு முந்தின சுலோகம்—

அந்தோநந்தக்ரஹணவசகோ யாதி ரங்கேச! யத்வத்
பங்குர் நௌகாகுஹரநிஹிதோ நீயதே நாவிகேந,
புங்க்தே போகாந் அவிதிதந்ருபஸ் ஸேவகஸ் யார்ப்பகாதி:
த்வத்ஸம்ப்ராப்தௌ ப்ரபவதி ததா தேசிகோ மே தயாலு:" என்பது

இந்த ச்லோகத்தில் ஜ்ஞாநஹீநனை ஒருவன் குருடனுடைய ஸ்தானத்திலும், ஆசார ஹீனனைவொருவன் நொண்டியினுடைய ஸ்தானத்திலும் கொள்ளப்படவேண்டியதாகத் தேறும். இப்படிப்பட்ட அதிகாரிகள் ஞானமனுட்டானமிவை நன்றாகவேயுடையனை குருவையடைந்தே புருஷார்த்தஸித்தி பெறவேண்டுமென்றதாயிற்று.

இதற்குமேல் மூன்ருவதானவொரு த்ருஷ்டாந்தம் (மூன்ருவது பாதத்தில்) வெகு அற்புதமாகக் காட்டப்பட்டிருக்கிறது. *புங்க்தே போகாந் அவிதிதந்ருபஸ் ஸேவகஸ்ய அர்ப்பகாதி* என்கிற த்ருஷ்டாந்தம் மிக அற்புதமானது. ராஜஸேவை பண்ணின அமாத்யனுடைய ஸந்ததியார்கள் பலனையநுபவிக்கும்போது அந்த ராஜாவின் முகத்தைப்பார்த்திருக்க வேண்டியதில்லையன்றே; அந்த ராஜாவைப்பற்றி ஒன்றுமே தெரிந்துகொண்டிருக்க வேண்டியதில்லையே. 'தாம் அமாத்யனுடைய ஸந்ததியார்' என்னுமிடத்தை மூதலிக்க வேண்டியதொன்று தவிர வேறொரு க்ருத்யமும் இல்லையன்றே ஸந்ததியார்க்கு; இதுதான் 'அவிதிதந்ருப.' என்கிற விசேஷணத்தினுல் தெரிவிக்கப்படுகிறது. இதுபோலவே, அமாத்ய ஸ்தாநீயரான எம்பெருமானுருடைய ஸந்ததியான நாமும், 'நாம் எம்பெருமானுரைச் சேர்ந்தவர்கள்' என்பதை மூதலிப்பது தவிர பேற்றின்ஸித்திக்காகப் பெருமாளுடைய திருமுகத்தையும் காணவேண்டிய ஆவச்யகதையில்லையென்று ஸ்பஷ்டமாகத் தெரிவித்ததாகிறது. 'உன்முகத்தையும்யாம காண வேண்டா' மென்றதற்காகச் சிறியருளாதே யென்கிறது (ப்ரஸித.) **

## 7. உபாயாந்தரேஷு—உபாயாந்தரங்களைப் பற்றிக்கேளீர்.

ப்ரபத்தியொழிந்த மற்றையுபாயங்கள் உபாயாந்தரங்களெனப்படும். உபாஸநம் முதலானவற்றிலே ப்ரபந்நர்களான நமக்கு ப்ராப்தியில்லையென்பது ஸர்வஸம்ப்ரதிபந்நம். சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்டுள்ள அந்த உபாயாந்தரங்களை நாம் விடுகைக்கு ஹேது என்ன? என்கிற விசாரத்திலே, அவ்வுபாயாந்தரங்களை அறிகைக்கும் அநுஷ்டிக்கைக்கு மீடான ஜ்ஞான சக்திகளில்லாமையே ஹேதுவென்று நினைக்கலாம். ஆனுல் அப்படிப்பட்ட ஜ்ஞாந சக்திகள் நம்போல்வார்க்கு இல்லையாகிலும் ஜ்ஞாநசக்திகளால் புஷ்கலர்கள் [பூர்வாசார்ய ப்ரப்ருதிகள்] பலருண்டே; அவர்கள் அநுஷ்டித்ததுண்டோ? அநுஷ்டிக்கத்தகுமோ? என்னில்; தகாது. உபாயாந்தரபரித்யாகத்திற்கு ஜ்ஞான சக்திகளில்லாமையே ஹேதுவன்று; எம்பெருமானுக்கு அத்யந்தம் பரதந்திரப்பட்டிருக்கையாகிற ஸ்வரூபத்துக்குச் சேராதென்னுமதுவே முக்க்யஹேதுவென்று தேசிகஸித்தாந்தம். அஜ்ஞானமும் அசக்தியுமடியாக விடுவதானுல் ஜ்ஞானசக்திகளுண்டாகில் அவற்றைப் பரிக்ரஹிக்கவேண்டி வருமன்றே; ஸ்வரூபவிரோதியென்று விட்டாலன்றே மறுவலிடாதொழிவது. ஆகவே ஸ்வரூபவிருத்தமென்னுமதுவே ப்ரதாநஹேது. இதை ஸ்வாமி தேசிகன் நியாஸதிலகத்திலே வெகு சாதுர்யமாகக் காட்டியருளினுர்; எங்ஙனே என்னில்; அநுதன்னிலுள்ள சுலோகமிது;—

*ஆர்த்தேஷ்வாசுபலா ததந்ய விஷயேபி உச்சிந்நதேஹாந்தரா
வஹ்ந்யாதே ரநபேக்ஷணத் ததுப்ருதாம் ஸத்யாதிவத் வ்யாபிநீ |
ஸ்ரீரங்கேச்வர! யாவதாத்மநியத த்வத் பாரதந்த்ர்யோசிதா
த்வய்யேவ த்வதுபாயதீ : அபிஹிதஸ்வோபாயபாவா அஸ்து மே*

இதில் ப்ரபத்திக்கு இட்டிருக்கிற விசேஷணங்களத்தனையும் பக்திவேஷவ்யாவர்த்தகங்கள், விவரித்துக் காட்டுகிறேன் காண்மின்; [ஆர்த்தேஷு ஆசுபலா] பக்தியானது விளம்பித்துப் பலனளிக்கும்; ப்ரபத்தி அங்ஙனன்றிக்கே:விரைவில் பலனளிக்கும் – ஆர்த்தப்ரபந்நர் திறத்தில். [ததந்யவிஷயேபி உச்சிந்ந தேஹாந்தரா] பக்தியானது தேஹாந்தர ஸம்பந்தத்தை யறுத்துத் தருவதில் நியதியுடையதன்று ; ப்ரபத்தி நியமேந தேஹாந்தர ஸம்பந்தத்தை யறுத்துத்தரும் [வஹ்ந்யாதே: அநபேக்ஷணத் ததுப்ருதாம் ஸத்யாதிவத் வ்யாபிநீ] பக்தியாகிற உபாயத்தின் அநுஷ்டானத்தில் அக்நிகார்யம் முதலியவை அபேக்ஷிதமாயிருக்கையாலே அது அதிக்ருதாதிகாரமாயிருக்கும். ப்ரபத்தியில் அவ்வபேக்ஷை யில்லாமையாலே ஸத்யம் சொல்வதற்கு எப்படி ஸர்வரும் அதிகாரிகளோ அப்படியே ப்ரபத்தியிலும் ஸர்வரும் அதிகாரிகள். இனி இதற்கு அடுத்த விசேஷணமே ப்ரக்ருத விஷயத்திற்கு உற்று நோக்கத்தக்கது. [யாவ தாத்ம நியத த்வத் பாரதந்த்ர்யோசிதா] பக்தி ஸ்வரூபவிருத்தம். ப்ரபத்தி ஸ்வரூபாநுரூபம் என்கிறது. யாவதாத்ம நியதமான அத்யந்த பாரதந்த்ர்யத்துக்கு ப்ரபத்தி உசிதமாயிருக்குமென்றபோதே அதற்கு ப்ரதிகோடியான பக்தியானது அந்த பாரதந்த்ரியத்திற்கு விருத்தமாயிருக்குமென்னுமிடம் ஸ்பஷ்டமாகத் தெரிவிக்கப்பட்டதாயிற்றன்றோ; ஆகவே தேசிகன் திருவுள்ளம் உபாயாந்தரம் ஸ்வரூப விருத்தமென்பதேயென்று தேறி நின்றது. "அகிஞ்சநோநந்யகதி:" என்றிருக்குமதிகாரிக்கு இவை ஸ்வாதிகார விருத்தங்களென்ன ப்ராப்தம்" என்றுமருளிச் செய்தார் தேசிகன் ரஹஸ்யத்ரயஸாரத்தில்.

## 8. ஆத்மலாபே—சேதநனைப்பெறுவதுஈச்வரனுக்குப்பேறென்பதுபற்றிக் கேளீர்.

ஸம்பிரதாயத்தில் சேதநலாபம் ஈச்வரனுக்குப்பேறு? ஈச்வர லாபம் சேதனனுக்குப் பேறு? என்கிற விசாரம் தலைமை பெற்றிருக்கும். இந்த விசாரத்தின் முடிவை உள்ளபடி தெரிந்து கொள்வதே மிகச் சிறக்கும். சாஸ்தரங்களை மேலெழப் பார்க்கும் போது ஈச்வரனை அடைவது சேதநனுக்குப் பேறு' என்பதாகவே தோற்றி நிற்கும். ஈச்வரனை ப்ராப்யனென்றும், சேதநனை ப்ராப்தாவென்றும் ஸ்பஷ்டமாகப் பல விடங்களிலும் சொல்லி யிருக்கையாலே 'ஈச்வரலாபம் சேதநனுக்குப் புருஷார்த்தம்' என்றே க்ரஹிக்கநேரும் பிறர் இப்படியே மதமாகக் கொண்டிருக்கிறார்கள. "ஈச்வரனுக்குத்தான் சேதநலாபம் புருஷார்த்தம்" என்பது தேசிக ஸித்தாந்த ஸாரமாக விளங்காநின்றது. இதனை ஸ்வாமி தேசிகன் கீதாபாஷ்யதாத்பர்ய சந்த்ரிகையில் வெகு அழகாகக் காட்டியுள்ளார். கீதையில் ஒன்பதாமத்யாயத்தின் முடிவிலுள்ள *மந்மநா பவ* என்கிற ச்லோகத்தின் பாஷ்யத்திற்கு விவரணமெழுதுகையில்— ["ஆச்ரித ஸம்ரக்ஷணம் ஸ்வலாபம் மத்வாப் ரவர்த்ததே" என்றருளிச்செய்திருக்கிறார்.

*சேதநனைப் பெறுவது ஈச்வரனுக்குப் பேறு என்றால் இவ்வர்த்தம் ஹ்ருதயத்தில் அவகாஹிப்பது சிரமமேயாகும். ஆனாலும் எளிதாக உணர்த்துகிறோம். சேதநன் முக்தனாகிப் பரமபதத்தில் சென்றபின் அங்கு என்ன கோஷிக்கிறானென்பதை நம் உபநிஷத்து தெரிவிக்கின்றது. [அஹமந்ந மஹமந்ந மஹமந்நம்] என்பது முக்தனுடைய முதல் வார்த்தை 'பகவானுக்கு நான் அன்னமாகிறேன்' என்று ஒரு தடவைக்கு மூன்று தடவையாக இதிவ் சொல்லுகிறது. இதனால், ஈச்வரனானவன் சேதநனைப் பெற்று அநுபவிக்க வேணுமென்று பெரும்பசி கொண்டிருந்தானென்றும், அப்பசி முக்தாத்மாவால் முதலில் தீருகிறதென்றும் ஸ்பஷ்டமாகிறது இல்லையாகில்,* அஹமந்நம்* என்று ஓதவேண்டியதில்லை யன்றோ.

"கஸ்தூரி கிடைப்பது மிகவும் அரிதாயிருக்கின்றது" என்று ஒருவன் சொன்னால் அவன் கஸ்தூரியைப் பெறுவதற்கு மிகவும் முயற்சி செய்பவன் என்பது எளிதாகத் தெரிய

வருமன்றோ. இதேபோல, எம்பெருமான் "வாஸுதேவஸ்ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப:" என்று கீதையில் சொல்லுகிறான். 'எல்லாம் கண்ணன்' என்றிருக்கிற மஹாத்மா எனக்குக் கிடைக்கவில்லையே என்கிற வருத்தத்தையன்றோ இதில் காட்டுகிறான். எம்பெருமான்தான் அப்படிப்பட்ட சேதனனைப் பெறுதற்குப் பெருமுயற்சி செய்பவனென்பது இதனால் ஸ்பஷ்டமாக விளங்கவில்லையா?

ஒரு வஸ்துவைப் பெறுவதனால் ஆனந்தம் உண்டாவது எவனுக்கோ அவன்தான் பேறு பெறுபவன் என்பது நிர்விவாதமான விஷயம். சேதநனைப் பெறுவதனால் ஆநந்திப்பவன் எம்பெருமானென்பது தேறிவிட்டால் அவனே லாபமடைபவன் என்பதும் அநாயாஸமாகத் தேறிவிடுமன்றோ. ஆளவந்தார் * "கதா ஹமைகாந்திகநித்யகிங்கர: ப்ரஹர்ஷயிஷ்யாமி ஸநாதஜீவித:" என்றார். இதில் ப்ரஹர்ஷயிஷ்யாமி என்கிற க்ரியாபதம் ஆச்சரியமாக அமைந்தது. உனக்குத் தொண்டு செய்து நான் எப்போது ஆநந்திக்கப் போகிறேனென்னாமல் 'நான் எப்போது உன்னை ஆநந்திப்பிக்கப்போகிறேன்' என்றார். ணிஜந்தப்ரயோகம் நோக்குக. இங்கு வியாக்யானத்தில்—" தன்னுடைய அநுவ்ருத்தியால் ஈச்வரனுக்குப் பிறக்கும் ஹர்ஷமேயிறே சேதநனுக்கு ப்ராப்யம்" என்று பெரியவாச்சான் பிள்ளையருளிச் செய்ததை ஸ்தோத்ரபாஷ்யத்தில் தேசிகன் மொழிபெயர்த்தார் [ப்ரஹர்ஷயிஷ்யாமி] த்வத்தாஸபூதஸ்ய மே த்வத்ப்ரஹர்ஷ ஏவ ப்ரதாநம் ப்ரயோஜநமிதி பாவ: என்று. இவற்றுக்கெல்லாம் சிகரமாக விளங்குவது "நச பரமபுருஷஸ் ஸத்ய ஸங்கல்ப : அத்யர்த்தப்ரியம் ஜ்ஞாநிநம் லப்தவா" என்கிற ஸ்ரீபாஷ்ய ஸூக்தி. இதில் "பரமபுருஷ: ஜ்ஞாநிநம் லப்த்வா" என்றது உயிரான ஸூக்தியன்றோ. இதையே தேசிகன் பலவிடங்களில் பலமுகமாக விவரித்தருளினாராயிற்று.

ஞானங்களில் மேலெழுந்த ஞானமென்றும் ஆழ்ந்த ஞானமென்றும் இருவகையுண்டு; அப்படியே விஷயங்களும் இருவகைப்பட்டிருக்கும். சேதநலாபம் பரமபுருஷனுக்குப் பேறு என்னுமிவ்விஷயம், ஆழ்ந்த ஞானத்தினால் அறியத்தக்கது. இவ்விஷயத்தில் ஸ்மார்த்த மாத்வாதிகளுக்கு ப்ரவேசப்ரஸக்தியே கிடையாது. இதை ஆழ்ந்து அநுபவிக்க ஸ்ரீவைஷ்ணவர்களே இட்டுப் பிறந்தவர்கள். ஏனென்றால், இது ரஹஸ்யங்களில் நுட்பமாகத் தேறுமது. ரஹஸ்யாதிகாரிகளாவார் எம்பெருமானார் திருவடிஸம்பந்திகளான ஸ்ரீவைஷ்ணவர்களேயல்லது மற்றையோர்களல்லர். தேசிகன் குருபரம்பராஸாரத்தில் எம்பெருமானார் இன்னாரிடம் இன்னது அதிகரித்தாரென்பதைச் சொல்லுமிடத்துத் திருக்கோட்டியூர் நம்பி பக்கலிலே ரஹஸ்யார்த்தங்களை அதிகரித்தாரென்னாமல் சிக்ஷித்தார் என்றார். அதிகரித்தாரென்கிற சொல்லுக்கும் சிக்ஷித்தாரென்கிற சொல்லுக்கும் நெடுவாசியுண்டு. குளத்து நீரை அப்படியே யெடுத்துப் பருகுவதற்கும் வடிக்கட்டிப்பருகுவதற்கும் வாசியில்லையா? அங்ஙனம் வடிக்கட்டின அர்த்தங்களை எம்பெருமானாருடைய பரம்பரையிலே படிந்தவர்கள் ரஸிக்கத்தக்கவர்களேயொழிய மற்றையார்க்கு இவற்றின் சுவை தெரியவிரகில்லை.

இராமபிரானை *சந்த்ர காந்தாநநம்* என்றார் முனிவர். இங்கு உபமிதஸமாஸம் கொண்டு சந்திரனைப்போலே அழகிய முகமுடையவர் பெருமாள் என்று பொருள்கூறினாரொருவர். மற்றொருவர் அப்பொருளைக் கண்டித்து, "சந்திரன்போலழகிய முகமுடையவரென்று பொருளன்று; சந்திரனிற் காட்டிலும் அழகிய முகமுடையவரென்று பொருளப்பா!" என்கிறார். "சந்த்ரவத்காந்தம்" என்பது சிறந்ததா? "சந்த்ராத்காந்தம்" என்பது சிறந்ததா? என்பதை ஆராயகில்லாமல் 'உபமித ஸமாஸந்தான் சாஸ்த்ரஸம்மதம்; பஞ்சமீதத்புருஷன் இங்குப் பொருந்தாது' என்று மற்றொருவர் விவாதத்தை வளர்த்திக் கொண்டு கிடந்தால் 'இந்த அரஸிக சிகாமணியோடு நமக்கென்ன விவாதம்? * உங்களோடெங்களிடையில்லையே* என்று விலகவேண்டியதே என்று சொல்லிக்கொண்டே விலகினர் ரஸிகர்.

## 9. ஜாத்யாம்—ஜாதி நசிக்குமா? நசியாதா? என்பதுபற்றிக்கேளீர்.

ஜாதியினால் ஏற்றமும், ஆச்ரமத்தினால் உயர்வும், கல்வியினால் சிறப்பும், ஒழுக்கத்தினால் உத்கர்ஷமும் பக்திப் பெருஞ்செல்வமில்லாதபோது சிறிதும் பயன்படாதென்பது நிர்விவாத

மான நூற்கொள்கை. வர்ணாச்ரம வ்யவஸ்தையை மீறி இதர வர்ணத்தவர்களை உபசரிப்பதோ கௌரவிப்பதோ தகாது என்னுமபிஸந்தியினால் இவ்வர்த்தத்தில் வாத விவாதங்கள் வளர்ந்திருக்கின்றன. இக்காலத்தில் இதர வருணத்தவர்கள் யோக்யதை மிகுந்தவர்களாக இருந்தாலும் அவர்களின் திறத்திலே நாம் எங்ஙனம் நடந்து கொள்ளுகிறோமென்பது அனைவர்க்கும் அபரோக்ஷம். உபயகலையாரும் நடத்தையில் ஒரு வாசியின்றிக்கேயிருப்பது ப்ரத்யக்ஷ ஸித்தம். ஆனால் இவ்வர்த்த விசேஷங்களை நம் பூருவர்கள் அவசியமாக எழுதி வைத்தது எதற்காகவென்றால், அவர்களுடைய காலத்திலும் பண்டைக்காலத்திலும் இருந்த லோகாதீத பரம விலக்ஷண பரமபக்த சிகாமணிகளைப் பற்றியே முக்கியமாக அருளிச் செய்ததாகும். இக்காலத்திலும் அப்படிப்பட்ட மஹா பாகவதோத்தமர்கள் *க்வசித் க்வசித்* என்றபடியே ஓரோ விடங்களிலே தோன்றுகை அஸம்பாவிதமன்று. அன்னவர் திறத்திலே நாம் ப்ரதி பத்தி குன்றாமேயிருக்கவேணுமென்பதை சிக்ஷிப்பதும் பூருவர்களின் கருத்தாகும். ஆகவே ஈண்டு இதில் விசேஷித்து விளக்கவேண்டிய அவசியமில்லையெனினும், சாஸ்த்ரார்த்த நிஷ்கர்ஷ ஸரணியில் ஒரு விஷயம் மாத்திரம் இங்கு நன்று தெளிவிக்க வேண்டியதாகவுள்ளது.

அவ்விஷயம் யாதெனில்; ஜாதி ஆகமாபாயியே யொழிய நசிக்காமலிருக்கக்கூடியதன்று. இதை தேசிகன் அபயப்ரதாந ஸாரத்தில் *நமஸ் தஸ்மை கஸ்மைசந பவது* என்று தொடங்கும் சுலோகத்தில் *ஸுராதீச ஸ்வைரக்ஷணகுபித சாபாயுதவதூ த்ருஷத்தாதுர் ஜாத ப்ரசமந பதாம்போஜ ரஜஸே* என்பதனாலும் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் *சிலாதே: ஸ்த்ரீத்வாதி:* என்பதனாலும் பாதுகா ஸஹஸ்ரத்தில்*யோஷித்பூதத்ருஷந்தி* என்பதனாலும், விளக்கியருளினார். ஸ்த்ரீஜாதிபோய் சிலாஜாதி ஏற்பட்டது முதலில்; பின்னை அந்த சிலாஜாதிபோய் ஸ்த்ரீஜாதி ஏற்பட்டது. ஆகவே ஜாதி ஆகமாபாயியென்று தேசிகன் திருவுள்ளமாக முடிந்தது.

## 10. அணுவ்யாப்திவாதே—எம்பெருமானுடைய அணுவ்யாப்தியைப் பற்றியும் பரிஸமாப்யவர்த்தநத்தைப் பற்றியும் கேளீர்.

உபநிஷத்தானது *அந்தர் பஹிச்ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயணஸ் ஸ்தித:*என்று ஸகல பதார்த்தங்களிலும் எம்பெருமான் உள்ளும் புறமும் வியாபித்திருப்பதாக ஓதியிருக்கின்றது. அணுவான பதார்த்தங்களில் உள்ளீடாக வ்யாப்தி ஸம்பவிக்கமாட்டாதென்று ஒருவாதம். அவயவியான பதார்த்தங்களுக்கே உட்புறம் வெளிப்புறம் என்றுசொல்லக்கூடுமாதலாலும் நிரவயவமான அணு பதார்த்தங்களுக்கு 'உள்ளே வெளியே' என்று சொல்வதற்கு ப்ரஸக்தியில்லாமையாலும் அணுபதார்த்தங்களிலே எம்பெருமானுக்கு உள்ளூற வ்யாப்தி சொல்லவொண்ணாது என்கிறார்கள் சிலர். அன்றியும், ஒரு பொருளிலும் எம்பெருமானுக்குப் பரிஸமாப்ய வர்த்தித்வம் [அதாவது—பரிபூர்ண வ்யாப்தி] கொள்ளவொண்ணாது. ஒரு பதார்த்தத்திலே அவனுக்குப் பரிபூர்ண வ்யாப்தியை அங்கீகரிக்குமளவில் [அதாவது பகவானுடைய ஸ்வரூபம் ஒன்றிலே பரிஸமாபித்து வர்த்திக்கிறதென்னில்] மற்றொரு பதார்த்தத்தில் வியாபிக்க ப்ரஸக்தியில்லாமையாலே பரிஸமாப்ய வ்யாப்தியை அங்கீகரிக்கலாகாதென்றும் மற்றொருவாதம் கூறுவர்.

அணுபதார்த்தங்களிலும் அந்தர் வ்யாப்தி உண்டென்றும், ஒவ்வொரு பொருளிலும் பரிஸமாப்யவர்த்தித்வமும் பொருந்துமென்றும் ஸ்ரீதேசிக ஸித்தாந்தம். சாரீரக மீமாம்ஸையில் (ப்ரஹ்மஸூத்ரத்தில்) *க்ருத்ஸ்நப்ரஸக்திர் நிரவயவத்வசப்தகோபோ வா* என்கிற பூர்வபக்ஷ ஸூத்ரத்தின்மேல் *ச்ருதேஸ் து சப்தமூலத்வாத்* என்கிற ஸித்தாந்தஸூத்ரம் அவதரித்துள்ளது. சாஸ்த்ரங்களினால் தேறுகின்ற குதர்க்க மூலமான குசோத்யங்களைச் செய்யாமல் சாஸ்த்ரம் சொன்ன கட்டளையிலே இசையவேண்டுமென்று இந்த ஸூத்ரம் சிக்ஷிக்கின்றது. *அந்தர் பஹிச்ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்தித:* என்று சுருதி ஸ்பஷ்டமாகச் சொல்லிவைத்தது. வேதஞ் சொன்னது ஒருபுறமிருக்கட்டும். வேதார்த்த நிர்ணயகர்களான நம் ஆசாரியர்கள் நிஸ்ஸந்தேஹமாக அருளிச் செய்திருப்பது என்ன? என்று பார்ப்போம்.

ஸ்ரீ பாஷ்யகாரருடைய ஸாக்ஷாத் திருவடியான திருக்குருகைப்பிரான் பிள்ளான் திருவாய்மொழியில் (1—1—10) *பரந்த தண் பரவையுள் நீர்தொறும் பரந்துளன்* என்கிற பாசுரத்தின்

ஆறுயிரப்படியில் இங்ஙனே யருளிச் செய்திருர்:—"அதி ஸூக்ஷ்மமாயிருந்த அசித் வஸ்துக்களிலும் வியாபித்து அவற்றினுள்ளே ப்ரகாசிக்கிற சித் வஸ்துக்களிலும் ஸ்தூலமான அண்டத்தில் வியாபித்தாற்போலே அநாயாஸத்தாலே அஸங்குசிதனுய்" என்று. தசோபநிஷத் பாஷ்யகாரரான ஸ்ரீரங்கராமாநுஜ ஸ்வாமி திருவாய்மொழிக்கு ஒன்பதினுயிரப்படியென்று ஸமஸ்க்ருத ப்ரதிபதார்த்தடீகை பணித்துள்ளார். [அச்சிட்டுமிருக்கிறது.] அதில் இப்பாசுரத்தின் வியாக்கியானத்தில் அவர் பணித்திருப்பதாவது * ஏகைகஸ்மிந் ஜலபரமாணௌ அதிவிசாலப்ரஹ்மாண்ட இவ வ்யக்திஷு ஜாதிவத் பர்யாப்தவ்ருத்தி:* என்று. இதன் பொருளாவது, வ்யக்திகளில் ஜாதியானது எப்படி பரிஸமாப்யவர்த்திக்கின்றதாக ஜாதிவாதிகளால் கொள்ளப்பட்டிருக்கின்றதோ அப்படி எம்பெருமான் ஒவ்வொரு ஜலபரமாணுவிலும் அதி விசாலமான ப்ரஹ்மாண்டத்திலிருப்பதுபோல (நெருக்குண்ணுமல்) நிறைந்திருக்கின்றான் என்பதாம். இங்கு *பர்யாப்த வ்ருத்தி * என்று இம்மஹான் பணித்திருப்பது தேசிக ஸித்தாந்தத்தை நன்கு அடியொற்றியதாம். பரிஸமாப்ய வர்த்தமாநத்வமே சொல்லிற்று. ரங்கராமாநுஜ ஸ்வாமியின் ஸ்ரீ ஸூக்தியென்றால் அது தேசிக ஸூக்திபோடொப்ப ஆதரணீயமன்றோ. நேராக தேசிக ஸூக்தியையே காட்டுவோம். ந்யாயஸித்தாஞ்ஜந—ஈச்வர பரிச்சேதத்தில் இவ்வாக்ஷேபத்தை யெடுத்துக்காட்டி * ச்ருதேஸ் து சப்தமூலத்வாத்* என்கிற ப்ரஹ்மஸூத்ரத்தையே தஞ்சமாகக் கொண்டு * யதாகமம் ஸர்வத்ர பூர்ண ஏவ பகவாந் * [சாஸ்த்ரம் சொன்னபடி எம்பெருமான் எங்கும் பூர்ணனே] என்று தலைக்கட்டியருளினர் இதில் சிலர்க்கு உள்ள மருளைப் போக்குவோமிங்கு.



ந்யாய ஸித்தாஞ்ஜனத்தில் * சதஸ்ருஷு ச மூர்த்திஷு பரிபூர்ண ஏவ* என்றருளிச் செய்துவிட்டு, உடனே * அந்யத்ர வித்யமாநஸ்ய அந்யத்ர பூர்ணத்வம் ந ஸ்யாத் இதி சேத்* என்கிற ஸ்ரீ ஸூக்தியுள்ளது. இந்த ஸூக்திக்கு உதயம் எப்படி? என்பதொன்றையே விவேகிகள் விமர்சிக்கவேணும் * ஸர்வத்ராபி பூர்ண ஏவ * என்று ஸாதித்தவுடனே "வேறிடங்களிலுமிருக்கின்ற ஈச்வரன் ஒரேயிடத்தில் எப்படி பூர்ணனுயிருக்கமுடியும்? என்று ஒருவன் ஆக்ஷேபிப்பதாக எழுதப்பட்டிருக்கிறதே, இவ்வாக்யத்திலிருந்துதானே இந்த ஆக்ஷேபம் தோன்றவேண்டும். இப்படி ஆக்ஷேபிக்கவேண்டும்படியான விஷயமே இவ்வாக்கியத்தில் சொல்லி முடிக்கப்பட்டிருக்கிறதென்பது கைகொள் கனியாகக் காண்கிறதே. இதை இல்லைசெய்ய யாரால் முடியும். சாகுந்தல நாடகத்தின் முடிவில் மஹாகவி ஒரு வாக்விநோதம் காட்டியுள்ளார்; அதைச் சுருக்கமாக நினைப்பூட்டுகிறோம்; குழந்தையான துஷ்யந்த குமாரனெதிரில் ஒருத்தி ஒரு பதுமைப் பறவையைக்கொண்டு காட்டி "ஸர்வதமந! சகுந்தலாவண்யம் பச்ய" [குழந்தாய்? இந்த பக்ஷியின் அழகைப்பார்] என்று சொன்னவளவிலே 'அப்படியா? என் தாயான சகுந்தலையா? எங்கே?' என்றதாம் அக்குழந்தை. சகுந்தமென்று பக்ஷிக்குப் பெயராகையாலே 'சகுந்தத்தினுடைய லாவண்யத்தைப்பார் என்று சொல்லப்பட்டிருக்கிறது. குழந்தையானது (சகுந்தலா....) என்று தன் தாயின் பெயரை ப்ரஸ்தாவித்ததாகக் கொண்டு சகுந்தலை எங்கே? என்று கேட்டதாக அமைப்பு உள்ளது. இங்கு 'சகுந்தலாவண்யம்' என்று சொல்லாமல் "விஹங்கம லாவண்யம்" என்றோ 'பக்ஷிலாவண்யம்' என்றோ சொல்லியிருந்தால் அப்போது குழந்தை 'என் தாய் எங்கே? என்று கேட்பதற்கு ப்ரஸக்தியுண்டோ? இது கவி தானுக வைத்தவொரு சமத்காரம். அப்படி ஏதேனும் இங்கு விசித்ர வாக்நின் அமைப்பு உள்ளதோ? ருஜுவான வரக்யேயுள்ளது. "ஸர்வத்ராபி பூர்ண ஏவ" என்று ஸாதித்த ஸ்வாமியின் திருவுள்ளத்தில் * "அந்யத்ர வித்யமாநஸ்ய அந்யத்ர பூர்ணத்வம் கதம் பவேத்?" என்று சங்கிப்பதற்கு உறுப்பான அர்த்தமே உறைந்து கிடந்ததென்பது அசைக்கமுடியாதபடி தேறிவிட்டது. அந்த பூர்ணத்வந்தான் வஸ்துதோறும் ஸ்வரூப ஸமாப்தி யென்பது. கடைசியாக இவ்விஷயத்தை முடிக்குமளவிலும் வேறொரு சப்தத்தை யிட்டு முடிக்காமல் *யதாகமம் ஸர்வத்ர பூர்ண ஏவ பகவாந்* என்று முதல் முதலிலெடுத்த பூர்ண சப்தத்தையேயிட்டு முடித்தார். இவ்விடத்தில் *க்ருத்ஸ்நப்ரஸக்திரித்யாதி பூர்வ பக்ஷஸூத்ரத்தையும் *ச்ருதேஸ்து சப்தமூலத்வாத்* என்கிற ஸித்தாந்த ஸூத்ரத்தையும் தஞ்சமாகக் கொண்டன்றோ விவாத விஷயம் உபஸம்ஹரிக்கப்பட்டது. பிறர் சொல்லுகிறபடி

ஸ்வாமிக்குத் திருவுள்ளமாயிருந்தால் இங்கு இந்த ஸூத்ரத்தை உதாஹரித்தது ஸர்வாத்மனா அப்ரஸக்தமாகுமே. லோக விஸஜாதீயமான அத்புத சக்திவாய்ந்த பரமபுருஷனிடத்திலே 'இது எப்படி ஸம்பவிக்கும்? அது எப்படி ஸம்பவிக்கும்? என்று வாயைத் திறவாதே என்றன்றோ ஸூத்ரகாரர் முடித்திட்டது. அதுதானே இங்கு ஸ்வாமியின் முடிவுக்குக் கைகொடுத்தது. அகடிதகடநாசக்தன் பக்கலிலே கூடாததொன்றில்லையென்று சொல்லித் தலைக்கட்டினாராயிற்று. ஆக *க்ருபாயாம் ப்ரபத்த்யாம் ரமாயாம் தயாயாம்* இத்யாதியாக முன்னம காட்டிய சுலோகத்தில் கண்ட பத்து விஷயங்களிலும் ஸ்வாமி தேசிகனுடைய திருவுள்ளத்தை அவர் தமது ஸ்ரீஸூக்திகளைக் கொண்டே நிருபித்துக் காட்டியதாயிற்று. ஐக்கியத்தில் உண்மையான நோக்குடையவர்கள் இந்த நிருபணங்களைக்கண்டு தெளிய ப்ராப்தம் ஆனால் ஒருவகையான பேதபுத்தி நெடுநாளாக ஊறிக்கிடப்பதனால் இந்த நிருபணங்கள் ஸ்ரீமதுபயவே. மதுராந்தகம் ஸ்வாமி போல்வார்க்குச் சிறிது உத்வேகஜநகங்களாயிருக்குமோவென்று எண்ணவேண்டியதாகிறது. ஏனென்றால், "க்ருபாநிர்ஹேதுகத்வவாதிகள்: ப்ரபத்த்யநுபாயத்வவாதிகள் தென்கலையார்; நாம் உபாயத்வவாதிகள்....என்று ஒவ்வொரு விஷயத்திலும் மதபேதம் பேசியே வழக்கப்பட்டவர்கள் மலிந்த இவ்வுலகில் இந்த நமது நிருபணங்களை லேசாக ஏற்றுக்கொள்பவர்கள் கிடைக்க மாட்டார்கள் என்றே நினைக்கிறேன். "ஸ்ரீதேசிக திவ்ய ஸூக்திகளை இவன் தன்னுடைய தார்ஷ்ட்யத்தாலே ஸ்வமதபரமாக ஆக்கிக் கொள்ளுகிறானேயொழிய உண்மையில் அவற்றுக்கு அப்படி அர்த்தமில்லை" என்று சொல்ல வருவர்கள். 'பின்னை எப்படி ஆத்தம்? அதைச் சொல்லுமையா? என்றாலோ வாய்திறவார். கிடக்கட்டும் அடியேன் ஐக்கியத்தில் நோக்குடையேனாதலால் அன்னவர்களும் பரமதருப்தியடையும்படி இதன்கீழே மற்றோர் வகையான நிருபணமும் காட்டுகின்றேன்.

1. [க்ருபாயாம்] பகவத் க்ருபை நிர்ஹேதுகமன்று, ஸஹேதுகந்தான் என்றுங் கொள்ளலாம். எங்ஙனேயென்னில்; **கிம் வா கரீச! க்ருபணே மயி ரக்ஷணீயே தர்மாதிபாஹ்ய ஸஹகாரிகவேஷணேந, நந்வஸ்தி விச்வபரிபாலநஜாகரூக: ஸங்கல்ப ஏவ பவதோ நிபுணஸ் ஸஹாய:** என்கிற தேசிக திவ்யஸூக்தியின்படி. பகவத்க்ருபை நிர்ஹேதுகமன்று, ஸ்வஸங்கல்ப மூலகமான் கடாலே ஸேஹ நுகந்தான் என்று கொண்டு தேறலாம்.

2. [ப்ரபத்த்யாம்] 'ப்ரபத்தி அநுபாயமன்று, உபாயந்தான்' என்றுங்கொள்ளலாம். எம்பெருமானார்க்குத் திருக்கச்சி நம்பி பணித்த ஆறுவார்த்தைகளில் **மோக்ஷோபாய: ப்ரபத்தில் ஸ்யாத்* என்மது மூன்றாவது வார்த்தையாகக் காண்கையாலே அதன்படி அதனை உபாயமென்றே கொண்டு மகிழலாம்.

3. [ரமாயாம்] பிராட்டிக்குப் புருஷகாரத்வத்தோடு மோக்ஷ ப்ரதத்வமுமுண்டென்று கொள்ளலாம். எங்ஙனேயென்னில், பட்டர் ஸ்ரீகுணரத்நகோசநத்தில் **ஐச்வர்ய மக்ஷரகதிம் பரமம் பதம் வா கஸ்மைசித் அஞ்ஜலிபரம் தஹதே விதீர்ய** என்றருளிச் செய்திருப்பது கொண்டும் *வேரி மாறாத பூமேலிருப்பாள் வினைதீர்க்குமே** என்று ஆழ்வாரருளிச் செய்திருப்பது கொண்டும் கொள்ளக் குறையில்லை.

4. [தயாயாம்] தயையாவது பரது:க்கது:க்கித்வரூபமென்பதையே அசக்த விஷயமாக்கி, பரமசக்தனான எம்பெருமான் பரகீய சோக நிவாரண சக்தனாகையாலே அவனளவில் பரது:க்க நிராசி கீர்ஷையையே தயையென்பதாகக் கொண்டு ஸந்தோஷிக்கலாம்.

5. [வத்ஸலத்வே] ச்ருதப்ரகாசிகையிலே—"ஸம்பந்த விசேஷாந்விதேஷு பரிதி: ஸ்நேஹ:; யஸ்ய விபாக:; அஸ்தாநபய சங்கித்வம் தோஷாநவபாஸ: தோஷேபி குணத்வ புத்தி:" என்பதில் ஸ்நேஹவிபாகத்வை 'தோஷாநவபாஸ:' என்ற பருவத்திலே நிறுத்திவிட்டு தோஷாதர்சித்வமே வாத்ஸல்யமென்று கொண்டு குதூஹலிக்கலாம். *உபாலம்போயம் போ: ச்ரயதி பத. ஸார்வஜ்ஞ்யமபி தே யதோ தோஷம் பக்ஷே இறை வரத. நைவா கலயஸி* என்ற கூரத்தாழ்வான் ஸ்ரீஸூக்தியையுங் கொண்டு துயர் தீரலாம்.

6. [அத்ருஷ்டார்த்தக்ருத்யாம்.] ஸ்ரீமந் நாதமுனிகளின் திருவடியான உய்யக்கொண்டாருடைய தனியனில் "நாத ஸ்ரீபதாபங்கஜே, ந்யஸ்தஸர்வபராய" என்று அவர் நாதமுனிகள் திருவடித் தாமரையிலே பரஸமர்ப்பணம் பண்ணினதாகச் சொல்லியிருப்பதை யெடுத்துக் காட்டிக் குணுலமாடலாம்.

7. [உபாயாந்தரேஷு] "பக்தி முதலான உபாயாந்தரங்கள் ஸ்வாதிகார விருத்த மென்ன ப்ராப்தம்" என்று தேசிகனருளிச் செய்திருக்கையாலும், நித்யமான ஆத்மஸ்வரூபத்துக்கு நாசம் ஸம்பாவிதமல்லாமையாலும் ஸ்வரூபநாசக மென்னுமல் ஸ்வாதிகாரவிருத்தமென்பது தான் பரமார்த்த மென்று கொண்டு உகக்கலாம்.

8. [ஆத்மலாபே.] உபநிஷத்தானது **ப்ரஹ்மவித் ஆப்நோதி பரம்** என்றும் **ரஸம் ஹ்யேவாயம் லப்த்வா ஆநந்தி பவதி** என்றும் ஓதியிருக்கையாலே இதற்கு விருத்தமான "அத்யர்த்தப்ரியம் ஜ்ஞாநிநம் லப்த்வா" என்றதை கௌண பக்ஷமாக்கி ஔபநிஷதபக்ஷத்தை முக்கியமாகக் கொள்ளலா மென்று கொண்டு உள்ளம் பூரிக்கலாம்.

9. [ஜாத்யாம்.] "திருஸாரபியானுலும் கோத்வம் கழியா திறே" என்கிற தேசிக திவ்ய ஸ்ரீஸூக்திக்குச் சேர அந்த பக்ஷத்தையும் ஆதரித்து அகங்குழையலாம்.

10. [அணுவ்யாப்திவாதே] ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் அகடிதகடநா சக்தி யோகத்தாலே கொண்டால் சாஸ்த்ரார்த்த வ்யாகோபமாகும்—என்று தெரிவித்திருக்கையாலே அது கொண்டு *ஏதுமல்லலிலனே* என்று அல்லல் தீரலாம்.

முக்கியமான வார்த்தை;—இப்போதைய ஐக்கிய வைணவ சங்கத்தின் கோட்பாட்டை நாம் முக்கியமாகப் பரிபாலிக்கவேணும். கீழே நாம் விரிவாகவும் சுருக்கமாகவும் நிரூபித்தபடியேகொண்டால், (அதாவது) இரண்டு வழிகளுக்கும் உபபத்திகண்டால் ஸாம்ப்ரதாயிக அர்த்தவிசேஷங்களிலே நாம் ஒத்துவாழக் குறையில்லையாகும். வேறு எந்தவிதத்தாலே நாம் ஒத்துவாழமுடியுமென்பதை விவேகிகள் உய்த்துணரவேணும். "ஸமோஹம் ஸர்வபூதேஷு" என்ற கீதாசார்யனுடைய உக்திக்கு நம் பாஷ்யகாரர் "ஆச்ரயணீயத்வே ஸம." என்று பணித்தது போலே, நாம் ஆச்ரயித்ருத்வே ஸமர்களாயிருப்பதுதான் ஐக்கியம்—என்னில், இதற்கு ஒரு ஐக்கிய ஸமாஜம் ஆவச்யகமோ? இக்கேள்வியை லேசாக விட்டுவிடாமல் பலருடைய உள்ளத்தில் உறைந்திருக்கும் ஆசங்கையை ப்ரவர்த்தகமஹாமதிகள் அருள் கூர்ந்து பரிஹரித்தேயாகவேணுமென்று ஸவிநயம் பிரார்த்திக்கிறேன்.

உண்மையான ஐக்கியத்தை அடியேன் இளமை தொடங்கி எவ்விதமாகப் பரிபாலித்து வருகிறேனென்பதை மிக்க உத்ஸாஹத்துடன் உலகமறிய விஜ்ஞாபிக்கிறேனிங்கு. என்னுடைய திருத்தகப்பனார் எனது பதினான்காவது பிராயத்தில் பரமபதித்தார். அதற்கு இரண்டு வருஷங்கள் முந்தியே தேவப்பெருமாள் ஸந்நிதிக்குள் வஸந்தோத்ஸவ மண்டபத்தில் நடந்து கொண்டிருந்த சடகோப நிலயமென்னும் ஸம்ஸ்க்ருதபாடசாலையில் வித்யார்த்தியாகச் சேர்ந்திருந்தேன். அடியேனுடைய மாதாமஹரும் ஷஷ்டிஜீயரென்று ப்ரஸித்தருமாயிருந்த ஸ்ரீமத் அழகிய மணவாள ராமாநுஜஜீயர் ஸ்வாமி அந்த பாடசாலையில் பூர்வாச்ரமத்தில் இருபத்தைந்து வருஷகாலம் தலைமை உபாத்யாயராக எழுந்தருளியிருந்தாரென்றும், அவரிடத்தில் தென்கலையும் வடகலையுமான நாற்பது பேர்கள் வித்யார்த்திகளாயிருந்து தேறினர் என்றும் பலரும் சொல்லிக் கொண்டிருந்தனர். அன்னவர்களில் நால்லர் உபாத்யாயர்களாயிருந்த காலத்தில் அடியேன் அப்பாடசாலையில் வித்யார்த்தியாகச் சேர்ந்திருக்கிறேன். அந்நால்வரும் வடகலை ஸ்வாமிகளே யாவர். கூட வாசித்தவர்களோ பத்து பதினைந்து பேர்களுண்டு. அவர்களில் ஒருவரிருவர் தவிர மற்றையோரெல்லாரும் வடகலை ஸம்பிரதாயஸ்தர்களே. "இவர் என்னுடைய ஸஹாத்யாயி"யென்று சொல்லிக் கொள்வதற்கு இப்போது இருகலையிலும் ஒருவர்கூட ஜீவித்திருக்கவில்லை உபாத்யாயர்களுமப்படியே.

பதினான்கு பிராயத்திற்கு மேல் (கீர்த்திமூர்த்தியான) ஸ்ரீஜகத்குரு காதி (அனந்தாசார்ய) ஸ்வாமி அண்ணஸந்நிதியில் வேதாந்த வைஜயந்தி யென்னும் பெயரால் ஸம்ஸ்க்ருத பாடசாலை ஸ்தாபித்தருளினர். அப்போது அது ஏழெட்டு வருஷ காலம் மிக்க

பெரும் புகழுடன் நடைபெற்று வந்தது. அப்போது கோவில் பாடசாலை தாழ்வுற்றது. பல வடகலையார்களும் இப்பாடசாலையில் உபாத்யாயர்களாகவும் மாணாக்கர்களாகவுமிருந்தனர். அக்காலத்திய வித்யாஸம்பிக்ஷத்தை இப்போது நினைக்கும் போது ஆகாயத்தை நோக்கி அழவேண்டியதேயாகிறது. (அது நிற்க.) அக்காலத்தில் தேவப்பெருமாள் ஸன்னிதியில் கலைச்சண்டை மிக மிக அருவருக்கும் படியாக அடிக்கடி நடந்து கொண்டிருந்தாலும் பரஸ்பர ஸௌஹார்தம் பெரு ஆச்சரியமகவேயிருந்தது. [ஒரு ஆச்சரியம் கேண்மின்.] அப்போது கிரிமினல் வியாஜ்ஜியங்கள் பல பல ஏற்படும். கலெக்டர் கச்சேரியில் வாய்தாக்கள் நடக்கும். சீவரம், வண்டலூர், கூடுவாஞ்சேரி, கருங்குழி—முதலிய இடங்களில் இருகலையாருஞ்சென்று ஆஜராக வேண்டியிருக்கும். வாதிகளாகவும் பிரதிவாதிகளாகவுமுள்ள இருகலையாரும் ஒன்று கூடியே பயணம் செய்வார்கள். 10பேர், 15பேர், 20பேர்கள் கூடப்போக வேண்டியிருக்கும். உபயரும் ஒரே சத்திரத்தில் தங்குவார்கள். இருவரும் சேர்ந்தே சமையல் செய்து ஸமபங்க்தி போஜனம் செய்வார்கள். கச்சேரிக்குப் போகும் போதும் வண்டிகளில் கலந்தே போவார்கள். கலெக்டர் ரூ. 100, 200 அபராதம் விதித்தால் ஒருவர்க் கொருவர் கடன் வாங்கிக் கொண்டு செலுத்துவர்கள். இதெல்லாம் கேள்வியினால் எழுதுபவையல்ல; நாலைந்து வருஷகாலம் கண்ணால் கண்டிருக்கிறேன். வெய்யில் காய்ந்து கொண்டே மழை பெய்வது முண்டன்றோ. அதே போல, வெல்பகையும் நட்பும் விடமும் அமுதமும் கலந்து பரிமாறின அழகு காஞ்சீபுரந் தவிர வேறெங்கும் காணமுடியாதது அக்காலத்தில் இந்த ஐக்கிய ஸமாஜம் ஏற்பட்டிருந்தால் பெரிதும் பயன் பெற்றதாகும். 12-12-76ல் நடந்த ஐக்ய ஸபைக் கூட்டத்தில் ஸ்ரீமதுபயவே. வாகமுதவர்ஷி. வேளுக்குடி வரதாசார்ய ஸ்வாமி ஸாதித்ததொரு சிறந்த வார்த்தையைப் பலரும் கொண்டாடுகிறார்கள். (அதாவது) "என்னுடைய திருத்தாயார் வடகலை ஸம்பிரதாயத்திலிருந்து வாழ்க்கைப் பட்டவள்; எனது திருத்தகப்பனார் 'தென்கலை ஸம்ப்ரதாயஸ்தர். என்னுடன் பிறந்த தமையனார் வடகலை ஸம்பிரதாயத்தில் ஸ்விகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறார். எங்கள் குடும்பத்தில் ஐக்கியத்திற்கு ஒருகுறையும் கண்டிலோம்' என்று. இங்ஙனே சொல்லக்கூடியவர்கள் உபயகலையிலும் இற்றைக்கும் பலருளர். இனி என் கதையைச் சொல்லிமுடிக்கிறேன்.

அடியேன் பதினைந்து வருஷங்களுக்கு முன்பு "வைதிகலௌகிக மஹநீயமண்டலி" என்னும் பெயரால் ஒரு பெரிய புத்தகம் வெளியிட்டிருக்கிறேன். அது பெரும்பாலும் எல்லாருடைய க்ருஹங்களிலும் விளங்கிவருகின்றது. அதில், வடகலையார்களிலும் தென்கலையார்களிலும் ப்ரதிஷ்டிதர்களாக எழுந்தருளியிருந்தவர்களின் திருவுருவப்படங்களை சிரமப்பட்டு ஸம்பாதித்து ப்ளாக்கெடுத்து Art Paperல் பிரசுரம் செய்திருக்கிறேன். சென்ற நூற்றாண்டின் முடிவிலும் இந்த நூற்றாண்டின் ஆதிமத்யங்களிலும் ஸேவைஸாதித்த வடகலை ஸம்ப்ரதாயஸ்தர்களான வித்வான்கள் பலரை அதில் ஸேவிக்கலாம். காருக்குரிச்சியழகிய சிங்கர் முதலாக வர்த்தமாந அழகிய சிங்கர்வரையிலும், ஸ்ரீமத் தேரழுந்தூராண்டவன் முதலாக வர்த்தமாந ஸ்ரீமதாண்டவன்வரையிலும் திருவுருவப்படங்களை ஒருகாலன்று, பலகால் உலகம் ஸேவிக்க வெளியிட்டிருக்கிறேன். அடியேனுடைய ஜன்மநக்ஷத்ரமான பங்குனி விசாகந்தோறும் வெளியிட்டுவரும் மலர்களிலும் தென்கலை ஸ்வாமிகளைச் சிறுபான்மையாகவும் வடகலை ஸ்வாமிகளைப் பெரும்பான்மையாகவும் ஸேவிக்கலாம். அடியேனுடைய மாதாந்தப்பத்ரிகையான ஸ்ரீராமாநுஜனையும் வைதிக மநோஹராவையும் ஆதியிலிருந்து சேமித்து வைத்திருப்பவர்கள் பலருளரே; அப்பத்திரிகைகளை யெடுத்துப் பார்த்தால் குறைந்த பக்ஷம் நூறு வடகலை ஸ்வாமிகளை ஸேவிக்கப்பெறலாம். இந்த ப்ரஸ்தாவத்தை நிகமிக்கிறேன். எனக்கு இருபதாவது பிராயத்திற்கு முன்னமே நாற்றிசையிலும் ஆப்தர்களும் ஸ்நிக்தர்களும் ஏற்படத் தொடங்கினார்கள். அந்த ஆப்தர்கள் தென்கலையாரில் பரிமிதர்களாயும், வடகலையாரில் அபரிமிதர்களாயும் ஏற்பட்டார்கள்; இற்றைக்கும் நாளைக்கும் ஏற்பட்டு வருகிறார்கள். இதைப்பற்றி விரிவுக்கஞ்சாமல் எழுதவே ஆவல் கிளர்கின்றது. இருகலையிலும் எனது தௌர்பாக்யத்தினால் மறைந்து போனவர்கள் (ஸத்யமாக எழுதுகிறேன்) ஆயிரவர் இருப்பார்கள். ஜீவித்திருப்பவர்களும் ஆயிரவர் இருப்பாரென்பதில் ஸந்தேஹமில்லை,

ப்ரக்ருதம் சென்னையில் பத்து நாள் தொடர்ச்சியாக நடைபெற்ற விசேஷங்களில் இரண்டு மூன்று நாட்கள் தவிர மற்றுள்ள நாட்களில் இப்பெரிய கோஷ்டிகளில் அந்வயிக்க ப்ராப்தமாயிற்று. ஜீயர் ஸ்வாமி நடத்திய ஸ்வாத்யாய ஜ்ஞாநயஜ்ஞம் மிகவும் பிரபலமாக நடைபெற்றபடியால் அதையுத்தேசித்தும், அகில இந்திய ஐக்யவைஷ்ணவ ஸபையின் நிகழ்ச்சிகளை யுத்தேசித்தும், சென்னை மாநகரைச் சேர்ந்த பல பேட்டைகளிலிருந்தும், சுற்றிலுமுள்ள அக்ரஹாரங்களிலிருந்தும் ஸ்ரீவைஷ்ணவர்களின் திரள் அபரிமிதமாகக் குவிந்து கொண்டிருந்தது; [ஆத்மப்ரசம்ஸையாக எழுதுகிறேனென்று கொண்டாலும் கொண்மின்.] ஸ்ரீவைஷ்ணவர்களாக வந்தவர்களில் பெரும்பான்மையர் என்னருகே வந்து, 'அடியேன் தெரிகிறதா? நான் ஞாபகமிருக்கிறேனா? நான் தொண்டமண்டலம் ஸ்கூல் காலக்ஷேபத்தில் பதினேழு வருஷம் விடாமல் வந்திருக்கிறேன்; நான் 23 வருஷம் விடாமல் வந்திருக்கிறேன்; நான் எந்த இடத்தில் தேவருடைய காலக்ஷேபம் நடந்தாலும் தவறாமல் வந்திருக்கிறேன்........ இப்படியிப்படியாகச் சொன்னவர் ஐந்நூறு பேர்களுக்குமேலிருக்கும். அன்னவர்களில் தென்கலையார்களின்னார், வடகலையார்களின்னார் என்று நான் தெரிந்து கொள்ள முடியாதிருந்தாலும் பெரும்பான்மையர் வடகலையார்களே யென்னத்தட்டில்லை. அந்த ஸமயத்தில் நானடைந்த மகிழ்ச்சிக்கு அளவேயில்லை. எவரெவர்களைக் கீர்த்திசேஷர்களாய்விட்டதாக நான் நினைத்திருந்தேனோ அவர்களையுங் கண்டு உள்ளமுடலும் பூரித்தேன். இதற்கு மேல் கேண்மின்.

நெடுநாள் சென்னையில் வாழ்ந்திருந்து டில்லி, பம்பாய், கல்கத்தா, கான்பூர் முதலான விடங்களுக்குச் சென்று சேர்ந்தவர்கள் பலரில் தம் தம் உத்யோக நிமித்தமாகப் போனவர்கள் பலர். ஆங்காங்கு உத்யோகத்திலமர்ந்திருக்கிற தங்கள் தங்கள் புத்ரபௌத்ராதிகளிடம் சென்று சேர வேணுமென்னுமாசையால் புறப்பட்டுப் போயிருப்பவர்கள் பலபலர். அப்படிப்பட்ட அன்பர்கள் ஐந்நூறு பேர்களுக்குக் குறைய மாட்டார்கள். அன்னவர்களும் பெரும்பாலும் வடகலையார்களே. அவர்கள், ஒரு ஐக்கிய சபை ஏற்பட்டு அதனால் அன்பு பூண்டவர்களல்லர். முராரி கவியின் சுலோகமொன்று; பவபூதி மஹாகவியின் சுலோகமொன்று.

(முராரி)
"யதிந்தோரந்வேதி வ்யஸநமுதயம் வா நிதிரபாம் உபாதிஸ் தத்ராயம் ஜயதி ஜநிகர்த்து: ப்ரக்ருதிதா |
அயம் கஸ் ஸம்பந்தோ யதநுஹரதே தஸ்ய குமுதம்? விசுத்தாச் சுத்தாநாம் த்ருவம் அநபிஸந்திப்ரணயிந:"||
(பவபூதி)

'வ்யதிஷஜதி பதார்த்தாந் ஆந்தர: கோபி ஹேது: ந கலு பஹிருபாதீந் ப்ரீதயஸ் ஸம்ச்ரயந்தே |
விகஸதி ஹி பதங்கஸ்யோதயே புண்டரீகம் த்ரவதி ச ஹிமரச்மாவுத்கதே சந்த்ரகாந்த:" ||

காளிதாஸ மஹாகவியின் துணுக்கை வாக்கு—(சாகுந்தல நாடகத்தில)—

"கஸ்யசித் க்வசிதேவ நாராமைத்ரீ."

இத்தகைய ப்ரேம ப்ரவாஹ புஞ்ஜங்கள் ஐக்கிய ஸபையினால் விளைவிக்கக் கூடியவையல்லவே; 'தானே கனியாதது தடியடியினாலா கனியும்?' என்பது ஒரு பழமொழி.

மதுரேண ஸமாபயே. ஸ்ரீ மதுராந்தகம் கலாசாலையிலுள்ள வித்வான்களும், திருவெவ்வுளூர் எவ்வுட்கிடந்தான் ஸந்நிதியில் வாழும் ஸகல கைங்கர்யபரர்களும் தேஹபேதமொழிய ஆத்மபேதலவலேசமுமற்றவர்களென்பதை எழுதாதுவிட முடியவில்லையே! முதன்முதலாக அதி பால்யத்திலே (ப்ரதமாச்ரமத்திலே) ஸ்ரீரங்க யாத்திரை செய்தேன். ஸ்ரீரங்கத்தில் பலர் அன்பரானார்களென்பதிருக்கட்டும். "கங்கா கூலத்திலும் பம்பாதீரத்திலும் ஸாகரதடத்திலும்" என்னுமாபோலே மூன்று தலங்களில் அடியேன் பெற்ற பாக்கியம் வாசாமகோசரம் என்னத்தகுமத்தனை.

(விவரிக்கிறேன்.) 1 திருக்குடந்தை; 2. திருவிண்ணகர் (ஒப்பிலியப்பன் ஸந்நிதி); 3. திருநறையூர் (நாச்சியார் கோயில்). திருக்குடந்தையானது செழுமாமணிகள் சேருந் திருக்குடந்தையாகையாலே அங்குப் பலபல ஸ்வாமிகள் ச்வேதத்விபவாஸிகளைப்போலே ஸேவை ஸாதித்து அன்பராகவில்லை, அன்பேயானார்கள். அங்கு ஸந்நிதி வீதியில் 5 நெ. திருமாளிகையில் (கீர்த்திமூர்த்தியான) ஸ்ரீமத். பத்மநாப ஐயங்கார்ஸ்வாமி திருமாளிகையில் முந்துற

முன்னம் படுகாடு கிடந்தேன். அவர் யார் தெரியுமோ? நமது கண்ணன்ஸ்வாமியின் திருத் தகப்பனுர். கண்ணன் ஸ்வாமியென்பவர் யார் தெரியுமோ? இப்போதைய ஸ்ரீமதாண்டவன். உத்தரராம சரிதத்தில் பவபூதி மஹாகவி ஒரு சுலோகம் சொல்லுகிறுர்—*அத்வைதம் ஸுகது:க்கயோரநுகதம்* என்று. சரமசரணத்தில் "பத்ரம் தஸ்ய ஸுமாநுஷஸ்ய" என்கிறுர். ஸுமாநுஷமென்பதன் பொருளைப் பலர் அறியார். தாம்பத்யமென்று பொருள். கண்ணன் ஸ்வாமிக்கும் அடியேனுக்கும் நாற்பதுவருஷகாலமிருந்த நிலையை ஸுமாநுஷமென்றே சொல்ல வேணும். அடுத்தபடி திருவிண்ணகரில் (கீர்த்தி மூர்த்தியான) நவநீதம் ஸ்ரீமத் க்ருஷ்ணமா சார்ய ஸ்வாமியின் திருவருளுக்கிலக்கானேன். இந்த ஸ்வாமியை ஸாக்ஷாத் வஸிஷ்டரென்ன வேணும். அந்த ஸ்வாமியின் (வர்த்தமாந) திருக்குமாரர் ஸ்ரீராமதேசிகாசாரியர். இன்றைக்கும் சீராமனென்றே சொல்வேன். "ஏண்டா பையா! ஸௌக்கியமாயிருக்கிறுயா? என்று என்னை விசாரிப்பதற்கு காஞ்சீபுரத்தில் ஒருவர்தானிருக்கிறுர்" என்று அவர் திசைதொறும் சொல்லி வருகிறுர். ஆப்தர்கள் பலர்க்கும் எழுதிவருகிறுர். இவரும், முன்னம் ப்ரஸ்தாவித்த கண்ணன் ஸ்வாமியும் எனது திருத்தாயார் ஜீவித்திருக்குமளவும் காஞ்சிக்குப்பலகால் வருவர்கள். வந்தால் *எங்கும் பக்க நோக்கறியான்* என்றேயிருப்பர்கள். இந்த பரிமாற்றங்களை அவர்கள் திருவாக்கிலிருந்தே கேட்டறியவேணுமத்தனை. நவநீதம் சீராமனுக்கு *விவேகி வித்வத் ஸார்வ பௌம:* என்று விருது சூட்டியிருக்கிறேனென்பதைப் பலருமறிவர். கண்ணன் ஸ்வாமியைப்பற்றி இப்போது அதிகமெழுதுவது அபசாரமாகும். பஹுவசனத்திற்கு மேலும் ஒரு பஹுவசநம் வேண்டியிருக்கிறது. தமிழில் விகுதி மேல் விகுதியென்றுண்டு.



பாண்டிச்சேரி ஸ்ரீமதுபயவே
R. ஜகந்நாதய்யங்கார் தம்பதிகள்
கைங்கரியம்

(3) திருநறையூரில் (கீர்த்தி மூர்த்தியான) நடாதூர் ஸ்ரீக்ருஷ்ணமாசாரியர் ஸ்வாமியும் அத்விதியவ்யக்தி. அவருடைய மூத்த திருக்குமாரர் ரஸிகவித்வன்மணி N. K. ராகவாசாரியருடைய ப்ரஸ்தாவத்தோடு நிகமிக்கிறேன். இவர் தற்போது ஜீயபுரத்தில் வாழ்கிறுர். நினைவுக்கு வருவதையெல்லாம் எழுதித் தீரவேணுமென்றுதான் எனக்கு ஆசை. *மெய்ம்மாலாயொழிந்தேன் எம்பிரானுமென்மேலானே* என்ற ஆழ்வாரருளிச் செயலின்படி என்னுடையமையலுக்கிலக்கானுர் எத்தனைவர் எங்கெங்கு வாழ்கின்றுர்களோ, அவர்களெல்லாருடையவும் திருவுருவப்படங்களை சேகரித்துப் பெரியதொரு புத்தகமாக வெளியிட்டு க்ருதக்ருத்யனுவேன் விரைவில். ப்ரக்ருத ஐக்ய ஸமாஜத்தின் மனோரதங்களுக்கு நெடுந்தூரத்திலிருப்பவை என் மனோரதங்கள்; இவை சிறிதும் பழுதுபடாமல் நிறைவேறியே தீரும்.



ஸ்ரீராமாநுஜன்-344

ஆசிரியர்:— P. B. அண்ணங்கராசாரியர்.

# ஸ்ரீபார்த்தஸாரதியின் திவ்யாநுக்ரஹம்

என்பாலன்புடையீர்!

நேற்று மார்கழி மாதம் முழுவதும் ஆண்டாளருளிச்செயலநுபவத்திற்காக சென்னைமாநகரில் இருந்து வருகையில் மாத முடிவில் நான்குநாள் உடல்நல மற்றிருக்க நேர்ந்தது. திருப்பாவை சாத்துமுறை நடைபெறவேண்டிய நன்னாளி லுங்கூட எழுந்திருக்கமுடியாத நிலைமையாயிருந்தது. அன்று பின்மாலை நான்கு அல்லது ஐந்து மணியளவில் [கனவோ நனவோ அறுதியிட்டுச் சொல்லமுடிய வில்லை; ஒரு மஹாபுருஷர் ஸேவைஸாதித்து "ஸ்ரீபார்த்தஸாரதியெம்பெருமான் விஷயமாகத் திருப்பாவைப் பாசுரஸங்கியையில் ஒரு ஸ்துதிநூல் விண்ணப்பம் செய்யலாமே!" என்று நியமித்து மறைந்தார். இது நிறைவேற்ற வேண்டிய நியமனமேயென்று தோன்றி உடனேயெழுந்து மந்த்ரஸ்நானம் செய்து கொண்டு குருபரம்பராதிகளை யநுஸந்தித்து விஜ்ஞாபிக்கத் தொடங்கினேன். திருப்பாவைப் பாசுரங்களின் முதலெழுத்தை முற்கொண்ட சுலோகங்களாக விண்ணப்பிக்கத் தொடங்கி அரைமணியளவில் முப்பது சுலோகங்களைத் தலைக்கட்டினேன். மேலும் ப்ரபாத மேஷமிருந்த படியால், திருப்பள்ளியெழுச்சிப் பாசுரங்களின் முதலெழுத் தடைவில் (திருவல்லிக் கேணித்) தெள்ளியசிங்கப் பெருமாள் விஷயமான ஸுப்ர பாதஸ்துதி யொன்றும் விஜ்ஞாபித்து முடித்தேன். உடனே ப்ராதரநுஷ்டானங் களை முடித்துக்கொண்டு உபந்யாஸ ஸபாமண்டபத்திலமர்ந்து திருப்பாவை சாத்து முறையும் ஆண்டாள் திருக்கல்யாணமும் ஒருவாறு நடத்திமுடிக்கத்திருவருள் பெற்றேன். அவ்விரண்டுதுதிகளும் பொழிப்புரையுடன் இதோ பிரசுரமாகக் காணீர்.

## ஸ்ரீபார்த்தஸாரதி ஸ்துதி—முன்னுரை

ஸ்ரீமத்கைரவிணீதட கல்பத்ரும பார்த்தஸாரதே: கருணாம் ।
ப்ரேப்ஸங் காஞ்சிதாஸஸ் தமிமம் ஸ்தோதும் ப்ரவர்த்ததே குதுகாத் ॥

திருவல்லிக்கேணியின் கரைமீது கற்பகந்தருபோல் விளங்குகின்ற ஸ்ரீபார்த்தஸாரதி ஸ்வாமியின் திருவருளைப்பெற விருப்பிய காஞ்சி ஸ்ரீவைஷ்ணவதாஸன் அப்பெருமானைத் துதிக்க விருப்பி யெழுகின்றான். ....

கோதாவ்ரதக்ருதிவர்ணாநுக்ரமதோ ரச்யதே க்ருதிஸ் ஸேயம் ।
நளவர்ஷதநுஷி கோதாதேவீகல்யாண ஸுதிவஸே ப்ராத: ॥

நளஆ மார்கழித் திங்களின் முடிவில் ஆண்டாள் திருக்கல்யாண நன்னாளன்று சிறுகாலையில் திருப்பாவைப் பாசுரங்களின் முதலெழுத்தடைவில் இந்த ஸ்துதிநூல் விஜ்ஞாபிக்கப்படுகிறது. .... ...

A

## ஸ்தோத்ராரம்பம்

1 மார்க்கம் ஸமுசிதமவிதந் அபதேஷு சிராத் பரிப்ரமந்நேஷ: ।
தாஸஸ் ஸம்ப்ரதி தைவாத் தேவ! த்வதபிஷ்டவே ப்ரவ்ருத்தோபூத் ॥

ஸ்ரீபார்த்தஸாரதிப் பெருமாளே! நெடுநாளாக நல்வழியுணரப் பெறுமல் தீயவழிகளில் அலைந்து கொண்டிருந்தவடியேன் இன்று அசிந்திதமாக தேவரீரைத் துதிக்கப் புகுந்தேன். ... ... ... (1)

2 வைதிகபுத்ராந் சதுர: ஸாந்தீபநிபுத்ரமபி ஸமாஹ்ருத்ய ।
தத்தவதஸ் தவ பகவந்! கியதஸ்ய மமாபிரக்ஷணம் ஹம்ஹோ! ॥

பிரானே!. பிறப்பகத்தே மாண்டொழிந்த பிள்ளைகளை நால்வரையும், மறிகடல்வாய் மாண்ட மாதவத்தோன் புத்திரனையும் உருவுருவே கொணர்ந்துகொடுத்த உனக்கு இவ்வெளியேனைக்காத்தருள்வது எவ்வளவிது!

3 ஓமிதி நேதி ச வக்தும் ந ப்ரபவாமி ப்ரபோ! ஜடாத்மாஹம் ।
லகுதண்டமாத்ரதோ மயி தர்ஶய பாத்ரப்ரதீக்ஷிணீம் க்ஷாந்திம் ॥

எம்பிரானே! வைதமான காரியங்களைச் செய்யென்றால் அதற்கு இசைகிறேனென்றும், அகாரியங்களைச் செய்யாதே யென்றால் தவிர்கிறேனென்றும் சொல்லவறியாத இந்த ஜடாத்மாவை 'லகுர் தண்ட: ப்ரபந்நஸ்ய ராஜபுத்ராபராதவத்' என்ற கணக்கிலே லகுவாக தண்டித்துவிட்டு, கொள்வார் தேட்டமான க்ஷமாகுணத்தை என்பால் காட்டியருளவேணும். ... (3)

4 ஆஶாலேஶேநாலம் பகவந்! பவதீதி தத்ர தத்ராஹம் ।
ப்ரவசநமாரசயாமி ஸ்ரீமந்! ஸம்ப்ரதி தயஸ்வ தத்த்ருஷ்ட்யா ॥

திருமாலே! உன்பக்கல் பரிபூர்ணபக்தி யுண்டாகவேணுமென்கிற நிர்ப்பந்தமில்லை; ஆஶாலேஶமுண்டானாலும் போதுமென்று அடியேன் ஆங்காங்கு ப்ரவசனம் செய்து நின்கண்வேட்கை யெழுவித்து வருகிறேன்; இச்சிறுநன்மையைக் கணிசித்தாகிலும் இப்போதெனக்கருள் செய்யவேணும். ... (4)

5 மாதவ! முகுந்த! கோகுலநாத! ரமேஶேதி திவ்யநாமாநி ।
அஸக்ருத் ப்ரலபாமி விபோ! கிமிதம் மாம் ரக்ஷிதும் ந பர்யாப்தம்? ॥

எம்பிரானே! உனது மாதவ முகுந்தாதிகளான திருநாமங்களை அடிக்கடி வாய்பிதற்றி வருகின்றேனே! என்னைக் காத்தருள இது போதாதா?

6 புருஹூதவிதிஶிவாதீந் அவலிப்தாநபி விபத்ஸு மஹதீஷு ।
ரக்ஷஸி ரக்ஷக! பகவந்! த்வதேகரக்ஷ்யோஹமிதி து மாம் ரக்ஷ ॥

ஸர்வரக்ஷகனே! இந்திரன் பிரமனீசனென்றிவர்கள் வீந்தர்களன்றிக்கே செருக்கர்களாயிருக்கச் செய்தேயும் அவர்களையும் பெரிய ஆபத்துக்களில் காத்தருளியிருக்கிறாய், 'நின்னலாலிலேன்காண்' என்றிருப்பானிவனென்று அடியேனைக் காத்தருளவேணும். ... ... ... (6)

7 கீர்த்திச்சடாம் த்வதீயாம் அச்யுத! பரிஷத்ஸு தத்ர தத்ராஹம் ।
ப்ரதயாம்யாபால்யாதிதி ஜாநாஸி த்வம் தயஸ்வ தத்வ்யாஜாத் ॥

அச்சுதனே! அடியேன் இளமை தொடங்கியே ஆங்காங்கு ஸபைகளில் உனது புகழ்மாலைகளைப் பரப்பி வருகின்றேனென்னுமிடம் அறிவாயன்றோ? அதையிட்டாவது அருள்செய்யலாமே. ... ... ... (7)

8 கீசாதீசோ தாஸ: குப்ஜா மால்யக்ருதிதீர்யமாணநாம் I
ச்ரேணிஷு மாபூத் கணநா மம தாமோதர! தயஸ்வ ஸாமாந்யாத் II

ஸுக்ரீவமஹாராஜர் குஹப்பெருமாள் கூனி மாலாகாரர் என்னப்படுமவர்களின் திரளில் அடியேனைச் சேர்க்காவிடினும் ரக்ஷ்யஸாமாந்யத்திலொருவனென்றுமிலும் அருள்புரியவேணும். ... ... (8)

9 தூர்ணமிஹ தாஸமேநம் ரக்ஷ்யாபேக்ஷிந்! முகுந்த! ரக்ஷேதி I
க்ரந்திதுமபத்ரபேஹம் தீநதயாலுத்வ கீர்த்தி ஹாநிஸ்ஸ்யாத் II

ரக்ஷ்யர்களைத் தேடித்திரிகிறவனே! விரைவில் அடியேனை ரக்ஷித்தருள வேணுமென்று கதறவும் வெள்கின்றேன்; 'இப்படி கதறவைப்பவனா தீனதயாளு!' என்று உனக்கு வசையாகுமேயென்று. ... ... (9)

10 நோ சேந் மாமிஹ ரக்ஷே: ரக்ஷகபிருதம் கதம் நு ஜீவேத் தே? I
ரக்ஷ்யேஷ்வக்ரே கணயிதுமர்ஹம் கிம் மாம் ந வேத்ஸி மதுமதந! II

மதுசூதனனே! அடியேனை ரக்ஷித்தருளாதொழியில் ரக்ஷகனென்கிற உனது விருது எங்ஙனே ஜீவிக்கும்? ரக்ஷணீயர்களில் இவனே முதல்வனென்று என்னை நீ அறியாமையென்னே? ... ... (10)

11 கலிரிபுசடரிபுமுக்யாந் ஸூரீந் நாதாதிவரமுநீந்த்ராந்தாந். I
ஹ்ருதி மம ஸததம் வஸதோ வீக்ஷ்ய தயஸ்வ க்ஷமாநிதே! ஸ்வாமிந்! II

எம்பிரானே! என்னுள்ளத்துள் எஞ்ஞான்று முறைபவர்களான திருமங்கையாழ்வார் நம்மாழ்வார் முதலான ஆழ்வார்களையும், ஸ்ரீமந்நாதமுனிகள் தொடங்கி மணவாளமாமுனிகளீறாகவுள்ள ஆசாரியர்களையும் நோக்கியருள்புரியவேணும். ... ... ... ... ... (11)

12 கருணா தவ மதுஸூதந! கருணாஸிந்தோ! பஹுஷ்வநாயாஸம் I
ப்ரஸ்ருதேதி ஸர்வவிதிதம் கிம் தந்மத்வர்ஜமிதி மநீஷா தே? II

எம்பிரானே! கருணைக்கடலே! உன்னுடைய திருவருள் பலரிடத்தில் எளிதாகப் பெருகியதென்னுமிடம் ப்ரஸித்தமானது; அஃது என்னொருவனைத் தவிர்த்தோ? ... ... ... ... ... (12)

13 புண்யம் பாபமிதி த்வயமாஸ்தே, தநிதம் த்வயஞ்ச நநு வர்ஜ்யம் I
ஸ்ரீபார்த்தஸூத! பகவந்! தத் த்விதயஞ்சாநவேக்ஷ்ய மாம் பாஹி II

பார்த்தன் தன் தேர்முன்னின்றபெருமானே! புண்ணியம் பாவமென்று இரண்டு உண்டே; அவையிரண்டும் 'ததா வித்வாந் புண்யபாபே விதூய' என்ற உபநிஷத்தின்படியே வர்ஜ்யமேயாதலால் அவையிரண்டையும் என்னிடம் பாராமல் காத்தருள்க. புண்யத்தை எதிர்பாராதே; பாபங்களிருப்பதைப் பாராதே யென்றபடி. ... ... ... ... (13)

14 உடஜேஷு ரசிதவஸதீந் முநீந் ஸ்வயம் தத்ர தத்ர கத்வா த்வம் I
பகவந்! ஸ்வகீயமநகம் வ்ரதமவபோத்யாபயம் ததாதிஸ்ம II

எம்பிரானே! (விபவாவதாரங்களில்) ஆங்காங்கு பர்ணசாலைகளில் வாழ்ந்த மஹர்ஷிகளிடம் தானாகவே சென்று உன்னுடைய விரதத்தை அவர்களுக்கு உணர்த்தி அபயமளித்தவனல்லையோ நீ? ... ... (14)

15 ஏஹ்யேஹ்யுபேஹி ஸத்வரமிஹ ஹரிகைங்கர்யவிதய இதி நித்யம் ।
ஆஹூய தாஸவர்க்கான் க்ருதகைங்கர்யே பயீஸ! நோ தயஸே ॥

எம்பிரானே! திவ்ய தேசங்களில் உனக்குக் கைங்கரியம் செய்வதற்காகத் தொண்டர்களை 'வம்மின்! வம்மின்! விரைந்து வம்மின்!' என்று நாடோறு மழைத்துத் தொண்டுபூண்ட அடியேன்பால் அருளாதொழிவதே!

16 நாத! நநு பார்த்தஸூத! த்வயி ஸதி நாதேபி யத்யஹம் க்லேஸாந் ।
விந்தேய, தர்ஹி ஸந்த: கிம் வக்ஷ்யந்தீதி சிந்தய ஸ்வாந்தே ॥

பார்த்தன் தன்தேர்முன் நின்றபிரானே! உன்னை நான் நாதனாகப்பெற்று வைத்தும் இப்படி வருந்திநின்றால் உன்னைப்பற்றி அவரவர்கள் என்னசொல்லுவர்களென்று சிந்தையில் சிந்தித்துப் பார்க்க. ... ... (16)

17 அம்புஜலோசந! பகவந்! கைரவிணீதீரபாரிஜாத! ஹரே! ।
அகைருத் தவ பதபங்கஜ ஸேவாபாக்யம் து துர்லபம் மாபூத் ॥

செந்தாமரைக் கண்ணனே! திருவல்லிக்கேணிக்கரையில் விளங்கும் கற்பகமே! தேவரீருடைய திருவடித் தாமரைகளை அடிக்கடி ஸேவிக்கும் பாக்கியம் அடியேனுக்கு அருமைப்படக் கூடாது. ... ... (17)

18 உத்தமஸூக்திததிஷ்விஹ ஸததம் ஶ்ரத்தாஞ்ச பக்திமுத்பாத்ய ।
ஹாவ்ஹாவ்ஹாவிதி ஸாமநோ காநே கிமு மாம் சிகீர்ஷஸி ப்ரவணம்? ॥

எம்பிரானே! இந்நிலத்தில் மிகச்சிறந்த திவ்யஸூக்திகளில் அடியேனுக்கு ஶ்ரத்தா பக்திகளைப் பிறப்பித்துவைத்து *ஏதத் ஸாம காயந்நாஸ்தே* என்னும்படி (அங்குக் கொண்டுபோய்) ஸாமகானத்தில் நிரதனாக்கப் பார்க்கிறாயோ? ... ... ... ... (18)

19 குமதிஜநகுத்ஸிதோக்தீஸ் ஸமூலமுந்மூல்ய ஸாத்விகாந் அர்த்தாந் ।
ஸந்தர்ஶ்ய மோதமாநே தாஸே மயி நாத! கலய திவ்யக்ருபாம் ॥

எம்பிரானே! துர்ப்புத்திவாய்ந்தவர்களின் துருக்திகளை வேரறக்களைந்து நற்பொருள்களை யுணர்த்தி மகிழ்ந்து வருமடியேன்பால் விசேஷித்தருள் புரியவேணும். ... ... ... ... (19)

20 முக்தா இதி திவி தீவ்யந்த்யேதே கிம்பாக்ய மநுபவந்த்யஹஹ! ।
ஸ்ரீஸூக்திஸததசிந்தந பாக்யஜுஷம் மாம் ஹரே! நிதேஹீஹ ॥

எம்பிரானே! திருநாட்டில் முக்தர்களென்று விளங்குகின்றார்களே, அவர்கள் என்ன பாக்ய மநுபவிக்கிறார்களப்பா! இங்கு நிச்சலும் திவ்ய ஸூக்திகளையநுபவிக்கும்பாக்கியம்பெற்றவடியேனை இங்கேகிடக்கவருள்செய்.

21 ஏதந்நிசமய கோகுலநாத! ஸ்வாமிந்! விசித்ரவசநம் மே ।
அக்ரஜ இஹ தவ ஸந்நபி புஜங்கரூபீ புஜங்கபங்கமதாத். ॥

ஆயர்குலக்கொழுந்தே! எனது இந்த விசித்திரவார்த்தையைக் கேட்டருளாய்; உனது நம்பி மூத்தபிரான் தான் புஜங்கரூபியாயிருந்துவைத்தும் புஜங்கபங்கத்தைச் செய்தருளினன். [புஜங்கரூபீ = ஆதிசேஷரூபி; புஜங்க பங்கம் = தீயவர்களை யழித்தல்.] விரோதாபாஸாலங்காரம் ... ... (21)

22 அங்கஸௌஷமாம் த்வதீயாம் அவலோகிதவதி ஜநே ப்ரகாரௌ த்வௌ ।
கேசிதமுஷ்ணந் தாவகஹ்ருதயம் கேசித்து நிஜமநோ வ்யதரந் ॥

கண்ணா! உனது திருமேனியழகைக்கண்டு ஈடுபட்டவர்களில் இரண்டு வகைகளுண்டு; சிலர் உனது உள்ளத்தைக் கொள்ளை கொண்டனர்; சிலர் தம் உள்ளத்தை உனக்கு அர்ப்பணம் செய்தனர். (ரஸிகர்கள் மருமம் கண்டு களிக்க.) ... ... ... ... (22)

23 மாரிததைத்யஸமூஹம் தாரிதகோவர்த்தநாசலம் க்ருஷ்ணம் ।
வாரிதஸம்ச்ரிதவிபதம் தாரிதபவஸிந்து மநிசமஹமீடே ॥

அசுரர் குழாங்களைத் துணித்தவனும் கோவர்த்தனக்குன்றையேந்தி நின்றவனும், தன்னடியார் துயரங்களைத் தீர்த்தவனும் பிறவிக்கடல் கடத்துபவனுமான கண்ணபிரானை என்றுன்றும் துதிக்கின்றேன். ... (23)

24 அங்யக்ருஹகவ்யநிலஹஸ்தேய ஸமர்த்தஞ்ச பந்தநௌத்ஸுக்யாத் ।
பக்தஜநபந்தமோக்ஷண சதுரஞ்ச ஹரிம் விபாவயே ஸததம் ॥

கட்டுண்டுகிடப்பதில் ஆசையினாலே பிறர் மனை புகுந்து வெண்ணெய் களவு காண்பவனும், கட்டுண்டுகிடப்பவர்களின் கட்டை அவிழ்க்கவல்லவனுமான கண்ணபிரானை என்றுன்றும் சிந்திக்கின்றேன். ... ... (24)

25 ஓஜஸி தவ மதுஸூதந! சலபந்யாயேந நச்யதாம் ஸங்க்யாம் ।
ஸர்வஜ்ஞோபி ஹி ந பவாந் ஜாநாதி ஹரே! கிமேதத்ருதம் போ:! ॥

கண்ணபிரானே! விளக்கில் விட்டில்கள் விழுந்து மடியுமாபோலே உனது தேஜஸ்ஸில் தாமாக மாண்டொழிபவர்களின் எண்ணிக்கையை ஸர்வஜ்ஞனை நீயுமறியாய்காண்! இது பொய்யோ? ... ... (25)

26 மாலாகாரமுகாநாம் பாக்யம் சாணூரமுஷ்டிகாதீநாம் ।
தௌர்ப்பாக்யஞ்ச விசிந்த்ய ஸ்வாமிந! விஸ்மிதமநாஸ் ஸதா வர்த்தே ॥

எம்பிரானே! மாலாகாரர் முதலானோருடைய பாக்யத்தையும், சாணூர முஷ்டிகாதிகளான மல்லர்களின் தௌர்ப்பாக்யத்தையும் சிந்தித்து வியப்படைகின்றேன். ... ... ... ... (26)

27 கூலே களிந்தஜாயா: துகூலலாபஸ் தவாபவச் சௌர்யாத் ।
தீரே து கைரவிண்யாஸ் தல்லாபோ பவதி க்ருஷ்ண! பக்தகணாத் ॥

கண்ணா! பண்டு யமுனைக்கரையில் பூம்பட்டுக்களைக் கள்ளத்தனத்தினால் கைக்கொண்டாய்; இப்போது திருவல்லிக்கேணிக் கரையில் அவற்றை அன்பர்கள் ஸமர்ப்பிக்கத் திருவுள்ளம் பற்றுகிறாய். ... ... ... (27)

28 கரவை முரவைரிஹரே! ஸததம் த்வத்பாதபத்மயோஸ் ஸேவாய ।
ஸக்ருதேவ கலய மாமகமூர்த்தநி நிஜபாதபங்கஜந்யாஸம் ॥

கண்ணா! உனது திருவடித் தாமரைகளில் நான் நித்யஸேவை பண்ணுவதற்குப்பலனாக உன் திருவடித்தாமரைகளை என் சென்னியில் ஒரு கால் வைத்திடாய். ... ... ... ... (28)

29 சித்தம் மாமகமேதத் தரலமபி ஸ்ரீஶ! பார்த்தஸூத! ஹரே! ।
த்வந்நித்ய கைங்கரீதபாகவதாங்க்ரிஷு தருடவ்ரதம பூயாத் ॥

பார்த்தன் தன்தேர் முன்னின்றபிரானே! என் மனம் நின்றவா நில்லாததாயினும் தேவரீருக்கு நித்யகைங்கரியம் செய்யும் பாக்யமுடைய (அத்யாபக) ஸ்வாமிகளின் திருவடிகளில் திடமான அன்பு பூண்டிருக்க அருளவேணும்.

30 வந்தே கைரவிணீதடகல்பதரோஸ் தே பதாம்புருஹயுகலம் ।
ஹேயகலேபரமேதத் கைங்கர்யே ஶக்திபுஷ்கலம் பூயாத் ॥

கைரவிணீதீர கற்பகத்தருவின் திருவடியிணைகளை இறைஞ்சுகின்றேன் இந்தப்பாழுமுடம்பு செல்லுந்தனையும் வாசிககைங்கரியத்தில் பூர்ணஶக்தியுடையதாயிருக்கவேணுமென்று. ... ... ... (30)

ஸ்ரீவைஷ்ணவாங்க்ரிதாஸ: ஸ்தோத்ரமிதம் பார்த்தஸூதஹரிபதயோ: ।
ஸதநுரவஸாநதிநே ப்ராதர் விஜ்ஞாப்ய சித்தஶாந்திமகாத் ॥

காஞ்சி ஸ்ரீவைஷ்ணவதாஸன் இந்தத் துதியை சென்னைமாநகரில் நளவருஷ தநுர்மாஸ முடிவு நன்னாளில் சிற்றஞ்சிறுகாலையில் ஸ்ரீபார்த்தஸாரதியெம்பெருமானை நோக்கி விஜ்ஞாபித்துச் சிந்தை தெளியப்பெற்றான். ...

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீமதே ராமாநுஜாய நம: ஸ்ரீமத் வரவரமுநயே நம:

# ஸ்ரீமத் ந்ருஸிம்ஹபகவத் ஸுப்ரபாதஸ்துதி

(திருப்பள்ளியெழுச்சிப் பாசுரங்களின் முதலெழுத்தடைவே விஜ்ஞாபித்தது)

1 கல்யாணஸத்குணகணாகர! கைரவிண்யாஸ்
தீரே நிஷண்ண! கருணாகர! தீநபந்தோ! ।
பக்தப்ரிய! ப்ரணதஸஜ்ஜநகாமதேநோ!
ஸ்ரீமந் ந்ருஸிம்ஹ பகவந்! தவ ஸுப்ரபாதம். ॥

திருக்கல்யாண குணங்களுக்குப் பிறப்பிடமானவனே! திருவல்லிக்கேணியின் கரையில் வீற்றிருப்பவனே!, கருணாகரனே! இளையவர்கட்கருளுடையாய்! அன்பர்கட்கு அன்பனே! திருவடிதொழுவார்க்குக் காமதேநுவானவனே! ஸ்ரீநரஸிம்ஹமூர்த்தியே! நல்விடிவாகுக. ... ... (1)

2 கோபாக்நிலக்ஷ்யதிதிஜந்மகடோரவக்ஷ:
நிர்ப்பேதநத்வரித! ஸைத்யகுலைக ம்ருத்யோ! ।
ப்ரஹ்லாதபக்தநுத! பாகவதாநுகம்பிந்!
ஸ்ரீமந் ந்ருஸிம்ஹ பகவந்! தவ ஸுப்ரபாதம். ॥

சீற்றத்தீக் கதுவநின்ற இரணியனதகல்மார்பப் கிழித்தெறிய விரைந்தவனே! அசுரர்குலத்திற்குக் காலனானவனே! ப்ரஹ்லாதாழ்வான் துதிக்க நின்றவனே! அடியார்க்கு அருள்செய்பவனே! ஸ்ரீநரஸிம்ஹமூர்த்தியே! நல்விடிவாகுக. ... ... ... ... (2)

3 சுத்தாம்பராச் சுசிஹ்ருத: ஶ்ருதிபாடஶீலா:
பௌராணிகா: புருஷஸூக்த விஶாரதாஶ் ச ।
ஸங்கீதகாநசதுராஶ் ச ஸமீயுராராத்
ஸ்ரீமந் ந்ருஸிம்ஹ பகவந்! தவ ஸுப்ரபாதம். ॥

தூயவாடையணிந்தவர்களும் தூயமனத்தவர்களும் மறையோதவல்லவர்களும் புராணபுருஷஸூக்தாதி படன சீலர்களும் இசைகாரர்களும் அருகே வந்துள்ளார்கள்; ஸ்ரீநரஸிம்ஹமூர்த்தியே! நல்விடிவாகுக. ... ... (3)

4 மேதிந்யதீஶநிவஹா: பரிவாரயுக்தா:
திக்பாலகாஶ் ச ஸகலாஸ் ஸகளத்ரவர்க்கா: ।
ஸப்தர்ஷயஶ் ச ஸஹ யோகிகணைஸ் ஸமேதா:
ஸ்ரீமந் ந்ருஸிம்ஹ பகவந்! தவ ஸுப்ரபாதம். ॥

பரிவாரங்களோடு கூடின அரசர்களின் திரள்களும், மனைவியரோடு கூடிய திக்பாலகர்களனைவரும், பல மஹர்ஷிகளோடு கூடின ஸப்தர்ஷிகளும் ஈண்டுவந்து திரண்டுள்ளனர். ஸ்ரீமந் நரஸிம்ஹமூர்த்தியே! நல்விடிவாகுக. ... (4)

5 புல்லாநி பத்மகுஸுமாநி ஸரோவரேஷு
ப்ராசீ திஶா ப்ரசுரதீப்தியுதா ஸமிந்தே ।
சந்த்ரோ மலீமஸகபஸ்திருடூநி லுப்தாநி
ஆஸந் ந்ருஸிம்ஹ பகவந்! தவ ஸுப்ரபாதம். ॥

தடாகங்களிலே தாமரைகள் மலர்ந்தன; கீழ்வானம் வெள்ளென்றது; பனிமதி பசுத்தனன்; நக்ஷத்திரங்கள் மறைந்தன! அழகியசிங்கரே! நல்விடிவாகுக. (5)

6 இந்த்ரோ விதி: பசுபதிர் திஷணோ தநேஶ:
இத்யாதயஸ் ஸுரவரா: குஸுமாட்யஹஸ்தா: ।
ஸ்ரீமச்சடாரிபரகாலமுகாஶ் ச ஸஜ்ஜா:
ஸ்ரீமந் ந்ருஸிம்ஹ பகவந்! தவ ஸுப்ரபாதம். ॥

இந்திரன் பிரமனீசனென்றிவர்களும் ப்ருஹஸ்பதி குபேரர்கள்முதலானோரும் ஆழ்வார்களும் பூந்தொடைய லேந்திய கையினராய்ப் போந்திருக்கின்றனர்; அழகியசிங்கரே! நல்விடிவாகுக! ... ... ... ... (6)

7 அந்தர் பஹிஶ் ச ஸகலாஸு ச வீதிகாஸு
ப்ராபாதிகீஸ் ஸ்துதிததீர் பஹவ: படந்தி ।
பக்தௌகவத்ஸல! பவார்த்திஹராமரேஶ!
ஸ்ரீமந் ந்ருஸிம்ஹ பகவந்! தவ ஸுப்ரபாதம். ॥

உட்புறங்களிலும் வெளிப்புறங்களிலும் திருவீதிகள் தோறும் பலர்கூடி ப்ராத: காலஸ்துதிகளை ஓதுகின்றனர்; பக்தவத்ஸலனே! ப்ரணதார்த்திஹரனே! ஸ்ரீநரஸிம்ஹமூர்த்தியே! நல்விடிவாகுக! ... ... ... (7)

8 வந்தாருநிர்ஜரஸமாஹ்ருத கல்பபுஷ்ப
ஸௌகந்த்யவாஹிபவந: பரித: ப்ரவாதி ।
பக்தாங்க்ரிரேணுபணிதீர் மதுரம் படந்தி
ஸ்ரீமந் ந்ருஸிம்ஹ பகவந்! தவ ஸுப்ரபாதம். ॥

பணிபவந்த தேவர்கள் கொணர்ந்த கற்பகப்பூக்களின் நறுமணங்கமழும் மாருதம் எங்கும் வீசாநின்றது; திருப்பள்ளியெழுச்சி பாடாநின்றூர்கள்; ஸ்ரீ நரஸிம்ஹமூர்த்தியே! நல்விடிவாகுக. ... ... ... (8)

9 ஏலாலவங்ககநஸார ஸுகந்திதீர்த்த
கும்பைஸ் ஸமேத்ய பரிசாரகவர்கக ஏஷ: ।
கர்ணம்ருதாநி நநு! காயதி கீதகாநி
ஸ்ரீமந் ந்ருஸிம்ஹ பகவந்! தவ ஸுப்ரபாதம். ॥

பரிசாரகர்கள் ஏலாலவங்க குங்கும கேஸரங்களாலே நறுமணம் கமழ்கின்ற தீர்த்த கும்பங்களுடன்வந்து செவிக்கினிய பாடல்களைப் பாடுகின்றனர்; அழகிய சிங்கப்பிரானே! நல்விடிவாகுக. ... ... ... ... ... (9)

10 கல்ஹாரபுஷ்பவிததிர் விகசா ஸமந்தாத்
பாஸ்வாநுதைத் அபகதம் திமிரம், விஹங்கா: ।
நாநாதிஸாஸு விஹரந்தி கருத்மதாத்யா:
ஸ்ரீமந் ந்ருஸிம்ஹ பகவந்! தவ ஸுப்ரபாதம். ॥

செங்கழுநீர் மலர்கள்வாய் நெகிழ்ந்தன வெங்கும்; இரவி தோன்றினன். இருள் அகன்றது; கருளன் முதலிய பறவைகள் திசைதொறும் பரந்தன; ஸ்ரீ நரஸிம்ஹ மூர்த்தியே! நல்விடிவாகுக. ... ... ... (10)

ஸ்ரீமந் ந்ருஸிம்ஹமூர்த்தி ஸுப்ரபாத ஸ்துதி

முற்றிற்று.

---

ஸ்ரீ:

ஸ்ரீமதே நிகமாந்த மஹா தேசிகாய நம:

ஆண்டாள் திருவடிகளே சரணம்

# கோதையின் குறிப்பு

—ஸ்ரீமதுபயவே. D. ராமஸ்வாமி ஐயங்கார், B.A.B.L.

## பாகவத திருப்பள்ளி யெழுச்சி

எம்பெருமானைத் திருப்பள்ளி யுணர்த்த (நித்திரையினின் றெழுப்ப)ப் பல அன்பர்கள் பாசுரம் பாடியிருக்கிறூர்கள். எம்பெருமானடியார்களைத் துயிலெழுப்பப் பாடலமைத்தவர்கள் சிலரே. அவர்களுள் முக்கிய ஸ்தானம் ஆண்டாளுடையது. திருப்பாவையின் 6 முதல் 15 வரையுள்ள பாசுரங்களின் தனி அழகையும் சிறப்பையும் அறியாதாரிலர்.

அப்பத்துப் பாசுரங்களாலே ஆண்டாள் தனது தோழிமார்களுள் பதின்மரை தனித்தனி எழுப்புவதாகப் பாடல்கள் அமைந்திருக்கின்றன. திருப்பாவைக்கு வியாக்யானமிட்டருளியோரும்—ஏன் றளவும் பொருள் கூறி வருவோரும் கூட ஒவ்வோர் பாசுரத்தால் ஒவ்வோர் ஆழ்வாரைக் குறிக்கும்படி அப்பாசுரங்கள் அமைந்திருக்கின்றன என்று அபிப்பிராயங் கொண்டிருக்கிறார்கள். அது ஆண்டாள் கருத்தே தானா? சில ஆழ்வார்கள் அப்பொழுது அவதரியாமலிருக்க அவர்களையும் குறித்துப் பாடியிருப்பதாகச் சொல்வது ஸம்பாவிதமா? என்று சிலர் ஸந்தேஹிக்கக் கேட்டிருக்கிறேன். அவையெல்லாம் வீண் ஆராய்ச்சி யென்றே சொல்லவேண்டும். ஏனெனில், ஆக்கியோன் கருத்தும் குறிப்பும் இவ் வண்ணம் இருந்திராவிடினும் நூலில் அமைந்துள்ள சொற்கள் எவ்வளவு பொருள்களைத் தரவல்லன என்பதை ஆராய்ந்து பொருள் கொள்வதும் இலக்கிய முறை. ஒரு நிஷாதவேடனை நிஷேதிக்கப் பேசிய ''மா நிஷாத'' என்ற வால்மீகி மஹரிஷியின் சொல் ''திருமாலே'' என்று பொருள் தரக் கண்டு கவியும் நாமும் களிக்கிறோம். அதுபோலவே ஆண்டாளுடைய இப்பாசுரங்கள் பல இனிமையான பொருள்களைத் தந்து பல அழகான காட்சிகளை நம் மனக்கண்முன் சித்திரிப்பன உள்ளுறை பொருளை ஆழ்ந்தனுபவிக்க புதிய அர்த்தங்களைக் கொடுப்பது தானே உயர்ந்த காவியத்திற்கு அறிகுறி. யாதொரு முரண்பாடில்லாமல் சொல்லும் பொருளுமொக்க நின்று அர்த்தங்கள். அமையும்போது அவைகளைப் பார்க்கவும் கொள்ளவும் மறுப்பது ரஸிகர்கள் செய்வதொன்றன்று.

எந்தப் பாசுரம் எந்த ஆழ்வாரைக் குறிக்கிறது என்ற விஷயத்தில் வெகுவாக அபிப்பிராய பேதம் காண்கிறது. அவரவர்கள் அனுபவத்துக்கும் ஆராய்ச்சிக்கு மிணங்கப் பலவாக நிர்த்தேசம் ஏற்படுவது ஸஹஜமே. இம்மாதிரி விஷயங்களில் எவரும் துணிந்து இந்த யோசனை தான் சரி, இது தவறு என்று உறுதியாகக் கூற முடியாது. எந்த நிர்வாஹம் வெகு ஸங்கதமாயும் வெகு அனுபவ ஹேதுவாயுமிருக்கிறதோ அதையே அவரவர் ஏற்றுக்கொள்வது இயல்பு.

சென்ற சில வருஷங்களாக அடியேன் கற்றதையும் கேட்டதையுங் கொண்டும் இந்தப் பாசுரங்களை அடியேன் சிற்றறிவுக்கு எட்டியவாறு அனுபவித்த ரீதியைக் கொண்டும் இது விஷயத்தில் ஒரு முடிவுக்கு வந்திருக்கிறேன். அதாவது முறையே பொய்கையாழ்வார், பேயாழ்வார், பூதத்தாழ்வார், திருமழிசையாழ்வார் தொண்டரடிப்பொடிகள், பெரியாழ்வார், குலசேகரப் பெருமாள், திருப்பாவையின் 6 முதல் 15 பாசுரங்கள் குறிக்கின்றன என்பதே. எவ்வகையில் யோசித்து இவ்வண்ணம் வகுத்திருக்கிறேன் என்பதைக் காட்ட ஒரு பாசுரத்தை எடுத்துக் கொண்டு இங்கே சுருக்கமாக விளம்ப விரும்புகிறேன்.

''உங்கள் புழைக்கடைத் தோட்டத்து வாவியுள்
செங்கழுநீர் வாய் நெகிழ்ந்து ஆம்பல் வாய் கூம்பினகாண்
செங்கல் பொடிக்கூறை வெண்பல் தவத்தவர்
தங்கள் திருக்கோயில் சங்கிடுவான் போதந்தார்
எங்களை முன்னமெழுப்புவான் வாய் பேசும்
நங்காய்! எழுந்திராய் நாணாதாய்! நாவுடையாய்!
சங்கொடு சக்கரமேந்தும் தடக்கையன்
பங்கயக் கண்ணானைப் பாடு. ஏல் ஓர் எம்பாவாய்,,

C

இது 14-ம் பாட்டு. நம்மாழ்வார் விஷயம் என்று மேலே சொன்னேன். எங்ஙனே யென்னில்:



ஒவ்வொரு பாசுரத்திலும் தோழியை விளிக்கும் சொல்லோ சொற்களோ அமைந்திருக்கின்றனவாதலால் அவைகளைக்கொண்டு யோசிப்பது முறை. இப்பாசுரத்தில் மூன்று விளிச் சொற்கள் அமைந்திருக்கின்றன, நங்காய், நாணாதாய், நாவுடையாய் என்று. பாசுரத்தின் முற்பாதியால் பொழுது புலர்ந்தது என்பதற்கான ஏதுக்களைக் கூறிப் பிற்பாதியால் அந்தத்தோழியின் குணங்களைக் காட்டவல்ல சொற்கள் கொண்டு அவளை வருணிக்கிறாள் ஆண்டாள்.

நங்காய் என்றால் பூர்ணையே. சிறந்தவளே யென்று பொருள். ஏனைய ஆழ்வார்கள் அங்கங்களாயும் நம்மாழ்வார் அங்கியாயுமிருப்பவர் என்னுமளவில் இவர் சிரேஷ்டர் என்றல்லவோ வைஷ்ணவர்கள் இவரது நிலையை அறிந்திருக்கும்படி! அதைத்தான் "எங்களை முன்னமெழுப்புவான் வாய் பேசும்" என்று குறிப்பாகக் காட்டப்பட்டிருக்கிறது. எங்களுக்கு சரீரி (ஆத்ம) ஸ்தானத்தில் உள்ள நீ எழுந்த பின்னரே யன்றோ நாங்கள் எழுந்திருக்க வல்லோம்? அப்படியிருக்க நாங்கள் உணரவும் நீ உணராதிருப்பதே என்று இடித்துக் காட்டுகிறார்களாகவுமாம் இப்பாசுரத்திற்கு "இவையெல்லாவற்றுக்கும் தானேகடவளாய் எல்லாரையும் தானே எழுப்புவதாகச் சொல்லி வைத்து அது செய்யாதே உறங்குகிறாளொருத்தியை எழுப்புகிறார்கள்" என்று ஸ்ரீ பெரியவாச்சான் பிள்ளையின் அழகிய அவதாரிகை. ஆழ்வார்களுக்குள் தலைமை வஹிக்க சடகோபனுக்கல்லது யாருக்கு உரிமை? ஆகவே 'நங்காய்' என்ற சொல்லைக்கொண்டு நம்மாழ்வாரைக்கொள்வதுயுக்தமே.

நாணாதாய்—ஆழ்வார்களுள் நாயிகா பாவமடையாதுபோனவர்கள் சிலர். பிரேமம் முதிர்ந்து பெண்ணுடை யுடுத்துப் பெண் பேச்சில் ஒழிந்தவர்களுள்ளும நாணைத் துறக்கத் துணிந்தவர் நம்மாழ்வாரொருவரே. ("நாணியினியோர் கருமமில்லை" என்றுபேசிய ஆண்டாள் பெண்ணாகவே பிறந்தவளாகையால் அவளை விட்டுப் பிறரையே இங்கே பேசுவது.) நாண் மடமச்சம் நமக்கிங்கில்லை யென்று மட்டும் பேசக் கற்று மடலெடுக்க முன்வந்த மங்கை மன்னனையும் பிற்படுத்தி நம்மாழ்வார் பலவிடங்களில் நாண் துறந்தமைக்கும் பாசுரமிட்டிருப்பதை நோக்கின் "நாணாதாய்" என்ற சொல் நம்மாழ்வாருக்கே பொருந்தும் என்று திடமாய்ச் சொல்லலாம். "மாசறு சோதி" யென்னும் திருவாய்மொழி (5. 3) முழுதும் ஆழ்வாரது நாண் துறந்த செயல்களையும் எண்ணங்களையும் காட்டுகின்றன. தென் திருப்பேரை எம்பெருமானிடத்துக் காதல் மிகுத்து "நாணும் நிறையுமிழந்தும்" "நகரமும் நாடும் பிறவும் தேர்வேன் நாணெனக்கில்லை" யெனப் பேசியும், கொடி மதிள் தென்குளந்தை வண்குடபால் நின்ற மாயக்கூத்தன் பக்கல் "ஞாலமறியப் பழி சுமந்தேன் இனி நாணித்தானென்" என்றும் அத் "தேவபிராற்கு என் நிறைவினோடு நாண்கொடுத்தேன் இனி யென் கொடுக்கேன்" என்று அலமந்தும் பலபடியாகத் தாம் லஜ்ஜையை விடுத்து நின்றதைப் பாடுகிறார். தானான தன்மையிலேயே "நாணமில்லாச் சிறு தகையேன் நானிங்கலற்றுவதென் பேணி வானோர் காண மாட்டாப் பீடுடை அப்பனையே" என்று பாடியவராதலால் இவரையன்றி நாணாதாய் என்ற சொல் எந்த ஆழ்வாரைக் குறிக்க வல்லது?

நாவுடையாய்— நம்மாழ்வாருடைய நாவின் பெருமை தமிழ் உலகம் முற்றும் பரவியுள்ளது. "என் நாவிலின்கவி யான் ஒருவர்க்கும் கொடுக்கிலேன்" என்று ஆழ்வார் தாமே பாராட்டுமளவில் பெருமை வாய்ந்தது அந்நா. கோச்சோழனுக்கும் பல்லவர்கோனுக்கும் பாடலைப் பகிர்ந்து கொடுத்த திருமங்கை யாழ்வாரும் கூட நம்மாழ்வாரைப் போலத் தம் நா காக்கவில்லை யென்று தோன்றுகிறதன்றோ? ஆகவே தான் பின்புள்ளார்களெல்லாம் நம்மாழ்வாரின் நாவின் ஏற்றத்தை மறவாது பாடியிருக்கிறார்கள். பிள்ளைப் பெருமாளையங்கார், "மறைப் பாற்கடலைத் திருநாவின் மந்தரத்தால் கடைந்து" என்று ஆழ்வார் செய்த உபகாரத்தைப் புகழுங்கால் பாடுகிறார். நிகமாந்த மஹா தேசிகன் பெருமாள் திருவடிகளுக்குப் பல பெருமைகள் நிற்க, "அணிகுருகை நகர் முனிவர் நாவுக்கனமந்தன" (நம்மாழ்வார் திருநாவால் பாசுரம் பாடப் பெற்றிமை யுடையன) என்பதைத் தனிப்படப் பாடுகிறார். ஆழ்வார் "என்னுடை நாவினுளானே" (1.9.9.) என்றும் "என் நா முதல் வந்து புகுந்து" (7.9.3) என்றும் பாடி, தம் நாவில் அமைந்தான் எம்பெருமான் என்று பாட, அதை மாற்றி பெரிய பெருமாள் மெய்ம் மலர்ப்பதங்கள் இவ்வாழ்வார் நாவுக்கு விஷயமாய் அமைந்தனவென்பது அவ் வடிகளுக்கோரேற்றம் என்று ஆசார்ய வள்ளல் காட்டுமழகு ஆழ்வார் பெருமையை ஒருபடி உயர்த்தி வைக்கின்றதன்றோ! ஆகவேதான் நம்மாழ்வாருக்கு, நாவீறுடைய பிரான்" என்று திருநாமம். இன்றளவும் அந்நாமத்தைச் சொல்லித்தான் அரங்க நகரப்பன் இவருக்கு அருளிப் பாடிடுவது. அரங்கனுக்கே மாலையிட்ட ஆண்டாளும் அந்நாமத்தை உள்ளத்துக்கொண்டு நாவுடையாய் என்று நம் சடகோபனையே கூப்பிடுகிறாள் என்றால் இதில் என்ன தவறு?

பாசுரத்தின் ஆறாவது வரியில் அமைந்த விளிச் சொற்கள் மூன்றும் நம்மாழ்வார் விஷயமாகப் பொருள்கொள்ளப் பொருத்தமுடையனவென்பதை 7, 8-வது அடிகளில் செய்யப்பட்ட வேண்டுகோள் உறுதிப் படுத்துகிறது. இந்தத் தோழியை நோக்கி, "சங்கொடு சக்கரமேந்தும் தடக்கையன், பங்கயக் கண்ணனைப் பாடு என்று கேட்டுக் கொள்ளுகிறாள் ஆண்டாள். இதை மட்டும் இவளிடத்துக் கேட்ட' படியால் இதில் ஒரு தனிப்பட்ட இன்பம் இவளிடத்தில் இருக்க வேண்டும். இது ஒரு அடையாளம். இதையிட்டு அருளிச் செயலை முற்றும் ஒரு முறை பார்த்தோமானால் "சங்கு, சக்கரம், தாமரைக்கண்" என்ற இந்த வரிசையை வேறு ஆழ்வார் நியமேன அனுபவித்ததாகக் காணோம். நம்மாழ்வாரோ பன்முறை இப்படியே வரிசையிட்டுப் பாடியிருக்கிறார். "சங்கினோடும் நேமியோடும் தாமரைத் கண்களோடும்" (5.5.1) "தவளவொண் சங்கு சக்கர மென்றும் தாமரைத் தடங்கண் என்றும்" (6.5 1.) "சங்கு சக்கரங்களென்று கை கூப்பும் தாமரைக் கண்ணென்றே தளரும்" (7.2 1.) "வெள்ளைச் சுரி சங்கொடாழியேந்தி தாமரைக் கண்ணனென்னெஞ்சினூடே புள்ளைக் கடாகின்ற வாற்றைக் காணீர் (7.3.1.) "சங்கொடு சக்கரம் கண்டுகந்தும் தாமரைக் கண்களுக் கற்றுத் தீர்ந்தும்" (7.3.3.) பராங்குச நாயகியான தசையில் பாடப் பெற்றவை இவையனைத்தும். அந்நாயகியையே இப் பதினாலாம் பாசுரத்தால் காட்டியருளுகிறாள் ஆண்டாள்.

இத்தனை குறிப்புகளும் நம்மாழ்வாரைக் காட்டுகிறபடியால், திருப்பாவையின் 14-ம் பாசுரம் அவ்வாழ்வார் விஷயமென விண்ணப்பிக்கத் துணிந்தபடி.

---

ஸ்ரீ:

# ஆண்டவன் பத்ரிகையிலுமா ஆசார்ய நிந்தை! P. B. A.

## (இது யார் செய்த வேலை?)

நிகழும் நளஹு தைமாதத்தில் (1977 ஜனவரியில்) வெளிவந்த ஸ்ரீரங்க நாத பாதுகா பத்ரிகையில்—ஆங்கிலவுரை பொன்று இருபதாவது பகுதத்தில் முடிந்தபின் ஒரு 8 பக்கங்கள்கொண்ட வியாஸம் "திருப்பாவை உபந்யாஸம்" என்பது. அதன் தலைமேல் "டில்லி தலைநகரில் நம் திருக்குடந்தை யாண்டவன் நள வருஷம் மார்கழி மாதத்தில்" என்றுள்ளது. கீழ்வரி "ஆண்டவன் திருவடிகளின் ஸமர்ப்பணே" என்றுள்ளது. ஆண்டவன் திருவடிகள் யார்க்கு ஸமர்ப்பித்தனவென்பதை விமர்சித்துத்தெரிந்துகொள்ளவேணும். அது நிற்க. இக்கட்டுரை அச்சிடுவதற்கு முன்னரோ பின்னரோ ஸ்ரீமதாண்டவன் கடாக்ஷித்தருளினதாகத் தெரியவில்லை. ஜரத்கவாதி வாக்யார்த்தமென்று ஒன்று சொல்லுவதுண்டு; அதற்கு மிகப் பொருத்தமான த்ருஷ்டாந்தம் இக் கட்டுரையே யென்பதில் ஐயமில்லை. இதைப்பற்றி இப்போது விரிவுவேண்டா. இதில் பக்கம் 4ல் அப்ரஸக்தமாக ஒரு பாட்டை யெழுதி— "இதனையே ஸ்வாமி பிள்ளை லோகாச்சாரியர் என்னும் ஸ்ரீ தேசிகனின் மித்ரராயும் ப்ருத்யராயுமிருந்த மஹான் ஸ்ரீதேசிகன்பற்றிய தனியன் பாசுரத்தில் *ஏரொன்று தூப்புல் திருவேங்கடமுடையான், பாரொன்றச் சொன்ன பழமொழியில்— ஓரொன்றுதானே யமையாதோ தாரணியில் வாழ்வார்க்கு, வானேறப் போமளவும் வாழ்வு* என்று கூறி சிறப்பித்துள்ளார்" என்றெழுதப்பட்டுள்ளது.

இத்தகைய அதிகப்ரஸங்கமான வார்த்தைகள் சிலவாண்டுகட்கு முன்பு கீழச்சேரி பரவஸ்து ஸ்ரீநிவாஸாசார்ய ரென்பவரால் ஒரு பத்ரிகையில் தொடங்கப்பட்டு, அவர் காலத்திற்குப் பின்பு (காலஞ்சென்ற) D T. தாதாசாரியரால் தொடரப்பட்டு "காஞ்சி திசாயை நம:" என்று திக்கு நோக்கித் தெண்டன் ஸமர்ப்பித்தொழிந்தது உலகத்தில் இன்னும் மறையவில்லை, மறந்தாருமில்லை. உத்தரராம சரித நாடகத்தில் "ஏதத்தத் புநரபி தைவதுர்விபாகாத் ஆலர்க்கம் விஷமிவ ஸர்வத: ப்ரஸ்ருப்தம்" என்று சக்ரவர்த்தி திருமகன் திருவாக்காக பவபூதி மஹா கவி ஒரு சுலோகம் பணித்துள்ளார். நன்றே வருவதெல்லாம். நாம் எது எழுதினாலும் ப்ரமாண புஷ்கலமாக எழுதுவோமேயன்றி அப்ராமாணிகமாக ஓரெழுத்தும் எழுதமாட்டோமென்பதை உலகமுழுது முணரும். இங்குத் தெரிவிக்குமவற்றை அமைதியுடன் ஆழ்ந்து வாசிக்கவேணு மறிவுடையார். சென்ற 1969ம் ஆண்டில் (ஸௌமிய ஹுத்தில்) ஸ்ரீதேசிகனுக்கு எழுநூறாமாண்டு கொண்டாட்டம் நாடெங்கும் நகரமெங்கும் வெகு சிறப்பாகப் பல லக்ஷக்கணக்கான பணச் செலவில் நிகழ்த்தப்பட்டதென்பதை ஒருவரும் மறந்திரார். அப்போது ஸ்ரீதேசிக திவ்ய சரித்திரம் தமிழ் ஸம்ஸ்கிருதம் ஆங்கிலம் ஆகிய மூன்று பாஷைகளில் அச்சிடப்பட்டுள்ளது. தெலுங்கு, கன்னடம முதலிய பாஷைகளிலும் பெங்களூர், மைஸூர் பிராந்தங்களில் அச்சிடப்பட்டதாகக் கேள்விப்பட்டிருந்தோமேயன்றி அப்பதிப்புகளை யாம் கண்டதில்லை. மேலே குறித்த மூன்று பாஷைப் பதிப்புகளைக் கண்டிருக்கிறோம். இப்போது தமிழ்ப் பதிப்பைக் கையில் வைத்துக்கொண்டு எழுது

கிறோம். இது நாற்பத்நாறு பக்கங்கள் கொண்டது. 'ஸ்ரீமத் வேதாந்த தேசிகன் வைபவம்—த்விதீய ப்ரம்மதந்த்ரஸ்வாமி யருளியது. சென்னை அஸ்மத்தேசிக ஸம்ப்ரதாய நிர்வாஹ ஸபையாரால் அச்சிடப்பட்டது. ஸௌம்ய வருஷ புரட்டாசித் திருவோணம் 22-9-69' என்பது முகப்பு. அடுத்தபடியுள்ள முகவுரையாவது—

## "முகவுரை

அஸ்மத் தேசிகனடி பணியும் பெரியீர்!

ஸ்வாமி வேதாந்த தேசிகனுடைய திவ்ய சரித்ரம் பல பாஷைகளில் பல பதிப்புகள் வெளிவந்திருந்தாலும், மைஸூர் ஸ்ரீபரகால மடத்தின் மூலமாக 1907-வது ஆண்டில் தெலுங்கு லிபியில் வெளிவந்திருக்கின்ற தேசிகவைபவ மொன்றே ப்ராமாணிகமென்று தெரியவருகிறது. ஆத்யப்ரம்மதந்த்ர ஸ்வாமி ச்லோக ரூபமாக எழுதியிருந்த வைபவத்தை த்விதீய ப்ரம்மதந்த்ர ஸ்வாமி மணிப்ரவாள நடையில் ஸாதித்தார். அது தமிழ் நாடுகளில் பிரசாரமடையாமல் மைஸூர் சீமையிலேயே பிரசாரமடைந்து காபிகளும் கிடைக்க வழியில்லாமல் போய்விட்டது கீர்த்திமூர்த்தியான திருவஹிந்திரபுரம்சேட்லூர் ஸ்வாமிக்கும் அது கிடைக்காமையினால் அது லுப்தம் என்று எழுதிவிட்டார். உப்பிலியப்பன் ஸந்நிதியில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீமதுபயவே நவநீதம் ஸ்வாமிக்கும் அது கிடைக்காததனால் தாம் எழுதி [1959ல் வெளியிட்ட தேசிக சரித்திரத்தில் "ஸ்ரீதேசிக சரித்ரம் பலபதிப்புகள் ஏறியிருந்தாலும் நிகழ்ச்சி முறையே சரியில்லையென்றும், கதைகள் நடந்த இடமும் காலமும் வேறுபட்டிருக்கின்றன வென்றும்" முகப்பிலேயே எழுதிவிட்டார். இதையெல்லாம் நாம் பார்த்தபோது, ஒரு விதமான குறைக்கும் இடமில்லாத தான ஸ்வாமி வைபவத்தை ஸம்பாதித்து வெளியிடவேணுமென்று ஆசை கொண்டு மைஸூருக்குச் சென்று பழைய தெலுங்குப் பிரதியை மஹதா ப்ரயாஸேந ஸம்பாதித்து ஸேவித்ததில் பல அபூர்வமான சரித்திரங்களைக் காண நேர்ந்தது. அதைத் தமிழில் பதிப்பிக்கவேணுமென்று ருசியுண்டாயிற்று. மைஸூரிலும் பெங்களூரிலும் உள்ள ஸ்ரீதேசிக பக்தர்கள் விசாலமான மனதுடன் பொருளுதவி புரிந்தபடியால் இதைப் பல பாஷைகளிலும் மொழி பெயர்ப்பித்து வெளியிட ஸௌகரியம் ஏற்பட்டது."

"ஆத்ய ப்ரம்மதந்த்ர ஸ்வாமியானவர் ஸகல ஆழ்வார்களுடையவும் ஸகல ஆசார்யர்களுடையவும் சரித்திரங்களை ச்லோக ரூபேண எழுதியிருக்கிறாரென்பது த்விதீயப்ரம்மதந்த்ர ஸ்வாமி இந்த வைபவ நூலில் ஆங்காங்கு உதஹரிக்கும் ச்லோகங்களினால் தெரியவருகிறது. அந்த மூல க்ரந்தத்தையும் ஸம்பாதிக்க முயற்சி செய்துகொண்டிருக்கிறேன். ஸ்ரீ உ. வே. கடமங்கலம் வீராச்சி ஸ்வாமியெனகிற வீரராகவாசாரியர் ஸ்வாமி இயற்றி 1893வது ஆண்டில் வெளியிட்ட குருபரம்பராப்ரபாவமே தற்காலம் எங்கும் பிரசாரமடைந்து வருகிறது. இந்த வைபவ நூலை அழகான முறையில் பதிப்பிக்க முன்வந்த சென்னை அஸ்மத் தேசிக ஸம்ப்ரதாய நிர்வாஹ ஸபையாருக்கு நம்முடைய மனமார்ந்த வந்தனத்துடன் நன்றியை ஸமர்ப்பிக்கிறோம்."

D

முகவுரைக்கடுத்தபடி இந்தக் குறிப்புரையுங் காண்மின்.

"அஸ்மத் தேசிக ஸம்ப்ரதாய நிர்வாஹஸபைத் தலைவர்களின்
விண்ணப்பம்.

இந்த வைபவக்ரந்தம் மைஸூர் பரகாலமடத்தின் பதிப்பான தெலுங்கு லிபி நூலைக்கொண்டு மட்டும் அச்சிடவில்லை. ஓரியண்டல் லைப்ரெரியிலிருந்து இரண்டு ஓலை ஸ்ரீ கோசங்கள் ஸ்ரீமத்பரமபரி ஆண்டவன் திருவடிகளின் திவ்யக்ருபையினாலும் ப்ரபல முயற்சியினாலும் கிடைத்தபடியால் அவற்றையும் ஒத்திட்டுப் பார்த்து சுத்த பாடமாகவே அச்சிடப்பட்டிருக்கிறது. ப்ரூப் பார்ப்பதில் பரிபூர்ண பரிசயமுள்ளவர்கள் கிடைக்கவில்லை. ஆனாலும், விட்டில் விளக்கு கம்பெனிப் பண்டிதரான ஸ்ரீ உவே. மேலாத்தூர். வியாகரண சிரோமணி ஸ்ரீநிவாஸ கோபால தேசிகாசாரியர் ஸ்வாமி அச்சுத்தாள் எழுதிக் கொடுத்தும் இரண்டு மூன்று தடவை ஊன்றி ப்ரூப் பார்த்துக் கொடுத்தும் செய்த உதவிகளுக்கு அஸ்மத் தேசிகஸம்பிரதாயஸ்தர்கள் அனைவரும் ஒன்று கூடி தம் தம் தலையை அரிந்து கொடுத்தாலும் ஏற்ற கைம்மாறாக ஆகமாட்டாது. அச்சுப்பிழைகள் நேர்ந்திருந்தால் அவைகளை கிருபையாய் திருத்திக் கொள்ளவேணுமென்றும் எங்களுக்கும் தெரிவிக்க வேணுமென்றும் வேண்டிக் கொள்ளுகிறோம். ஸ்ரீமதுபயவே நவநீதம் ஸ்வாமி தேசிக வைபவப்பதிப்புகளெல்லாவற்றிலுமே நிகழ்ச்சி முறை மாறுபட்டிருப்பதாகத் திருவுள்ளம் நொந்து எழுதியிருந்தபடியால் முக்கியமாக அப்பெரியாருடைய ஸந்துஷ்டியை உத்தேசித்தே இது மிகவும் சுத்தமான முறையில் பதிப்பிக்கப்பட்டிருக்கிறது. அவரும் திருவுள்ள முகந்தபடி, ஆனாலும், காலதேசங்களின் மாறுபாடு மட்டும் திருத்தப்படவேணுமென்றும் சிலபெரியார்கள் அபிப்பிராயப்படுகிறார்கள். தகுந்த ஆதாரமில்லாமல் சுதந்திரமாக மாற்றுவதற்கு எமக்குத் துணிவு பிறக்கவில்லை. த்விதீயப்ரம்ம தந்த்ரஸ்வாமி அருளிச் செய்ததான இதில் மாறுபாடுகளைச் செய்ய நியாயமில்லை யென்றும் விஜ்ஞாபித்துக் கொண்டு நிற்கிறோம்."

இனி இந்த வைபவ நூலிலிருந்து சிற்சிலவிடங்களை யெடுத்துக்காட்டுகிறேன். பிராமாணிகர்களின் உள்ளமும் ஸ்ரீமதாண்டவன் திருவுள்ளமும் தெளிய.

"தேசிகன் திருவரங்கம் சென்று சேரப் புறப்படுதல்

பின்பு தென்னாடும் வடநாடுந்தொழ நின்ற திருவரங்கத் திருப்பதியை மங்களாசாஸனம் செய்யவிருப்பினார் தேசிகன். ஸகல ஆழ்வார்களும் ஸகல பூர்வாசார்யர்களும் எழுந்தருளியிருந்த ஸ்தலம் அது வாகையாலே அங்கே நித்யவாஸம் பண்ணவேணுமென்றும், அங்கே நித்யகாலக்ஷேப நிரதர்களான பிள்ளை லோகாசாரியர் ஸுதர்சனபட்டர் முதலானோருடைய திருவடிநிழலிலேயொதுங்கி நெடுங்காலம் வர்த்திக்கவேணுமென்றும் ஆசை கொண்டு புறப்பட்டருளியாச்சுது. "லோகாசார்யபதாம்போஜஸேவாஹேவாகதோ த்ருதம், ப்ரதஸ்தே ரங்க நகரீம் வேதாந்தார்யோ மஹாமநா:" என்று அஸ்மதாசார்யர் பணித்த தேசிக திவ்ய சரிதத்திலும் சொல்லிற்று. பேரருளாளன் நியமனங் கொண்டு புறப்பட்டருளின தேசிகன் தேவியாரோடுங்கூட வழியடைவிலே அப்பக்குடத்தான் ஸன்னிதியென்

கிற திருப்பேர் நகரிலே சென்று சேர்ந்து அங்குள்ள ஸ்ரீவைஷ்ணவர்களை நோக்கி கோயில் வ்ருத்தாந்தம் விசாரிக்குமளவிலே, அவர்கள் துருஷ்கய்வ்நோபப்லவங்களைச் சொல்லி ஸ்வாமி பிள்ளை லோகாசாரியர், அவருடைய திருத்தம்பியாரான அழகிய மணவாளப் பெருமாள் நாயனுர், ச்ருதப்ரகாசிகா பட்டர் முதலான பரிகணிதர்களான ஆசார்ய ச்ரேஷ்டர்கள் நம்பெருமாளை யெழுந்தருளப் பண்ணிக்கொண்டு வெளியேறியிருக்குஞ் செய்திகளையும் விசதமாகச் சொல்ல, அதுகேட்ட தேசிகன் வேரற்ற மரம்போலே விழுந்து துடித்து, "ஸம்ஸார ஸர்ப்பஸந்தஷ்ட மர்த்ய ஸந்த்ராண தீக்ஷிதம், லோகாசார்யம் விநா ரங்கே கதம் வர்த்திது முத்ஸஹே!" [முமுக்ஷுஜநரக்ஷகரான பிள்ளைலோகாசார்யரில்லாத திருவரங்கத்தில் நான் எப்படி வர்த்திப்பேன்] என்று சொல்லிச் சொல்லிப் புலம்பி, இப்போது நான் திருவரங்கம் செல்லக் கடவேனல்லேன்; கொங்கு மண்டலத்தில் பாங்கான வோரிடத்தில் சிலகாலம் வாழ்ந்திருந்து ஸ்ரீரங்கஸ்ரீ நிருபத்ரவமாகி நம்பெருமாளும் கூடச் சென்ற ஸ்ரீமல்லோகாசார்ய ப்ரப்ருதிகளான பரமஸாத்விகஸதாசார்ய ஸார்வபௌமர்களும் ஸ்வஸ்தானம் வந்து சேர்ந்தபிறகு செய்தியறிந்து கொண்டு திருவரங்கத்தேற விடை கொள்ளக்கடவேன்" என்று அதி நிர்வேதத்துடனே அருளிச்செய்து ஸ்ரீரங்கம் செல்லாமே அப்பக்குடத்தான் ஸந்நிதியிலிருந்து நேராகப் பலவிடங்களுக்கெழுந்தருளி வானியாற்றங்கரையில் சில மாதங்கள் தங்கியிருந்து அங்கும் இருப்புக் கொள்ளாமல் திருநாராயணபுரத்தில் சிலகாலமும் பச்சிமவாஹினிக் கரையான ஸ்ரீரங்கபட்டணத்தில் சில காலமுமாக ஸத்தியமங்கலத்தில் சில காலமும் எழுந்தருளியிருந்தாச்சுது."

"அபீதஸ்தவ மநுக்ரஹித்தது

அப்போது ஸ்ரீரங்கஸ்ரீ விரைவில் நிருபத்ரவமாக வேணுமென்பதற்காக ஸ்வாமி தேசிகன் அபீதிஸ்தவமருளிச் செய்து அங்குள்ளாரெல்லாரையும் அந்த ஸ்தவத்தை நித்யமும் நூற்றெட்டாவ்ருத்தி பாராயணம் செய்ய நியமித்தருளி, தாம் அந்த ஸ்தவத்திலிருந்து "நிரஸ்தரிபுஸம்ப்லவே க்வசந ரங்கமுக்யே விபோ! பரஸ்பர ஹிதைஷிணம் பரிஸரேஷு மாம் வர்த்தய" என்கிற பாகத்தை அநவரதமும் அநுஸந்தித்துக் கொண்டு "லோகாசார்ய ததீயஸோதரமுகாந் ஆசார்யவர்யாந் கதா ஸேவேயேதி ஸதா விஷண்ணஹ்ருதய: ஸ்ரீவேங்கடேசோ குரு:" என்று அஸ்மதாசார்யர் பணித்தபடியே அதுவே புலம்பலாய் மிருந்த ஆர்த்தியோடே பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்திகளைக்கேட்டுக்கொண்டு காலம்கழித்துவந்தார்"

"தேசிகன் கோயில் வ்ருத்தாந்த மறிதல்

இப்படி கங்குலும் பகலும் கண்துயிலறியாள் கண்ண நீர்கைகளாலிறைக்கும் என்னும்படியாக ஸ்வாமி தேசிகன் அலமாப்போடே எழுந்தருளியிருந்த காலத்திலே வருவார் செல்வார் முகமாக ஸ்ரீரங்க வ்ருத்தாந்தத்தை ஒருநாள் அறியலாச்சுது. அதாவது, பல மஹான்களின் ப்ரபல ப்ரயத்னங்களாலே ஸ்ரீரங்கநாதன் அபாயமொன்றுமின்றிக்கே திருவரங்கம் பெரிய கோயில் ஸந்நிதி சேர்ந்தருளினதாகவும், ஸ்ரீமல்லோகாசார்ய ஸ்ரீ ஸுதர்சந பட்டாரக ப்ரப்ருதிகளான ஆசார்யவர்யர்கள் மீண்டெழுந்தருளாமலே அங்கங்கே திருநாட்டுக் கெழுந்தரு

ளினதாகவும் கேட்டு "அம்ருதம் விஷஸம்மிச்ரம்" என்று போர நொந்து நெடும்போது இதிகர்த்தவ்யதாமுக்தராயிருந்து, அந்த மட்டில் பெருமாளாகிலும் பாங்காக ஸ்வஸ்தானம் வந்து சேரப்பெற்றதே! என்று தேறி, பிள்ளைலோகாசார்யாதிகளுக்கு ஸ்ரீசூர்ண பரிபாலனம் நடத்தியருளி நிலையிட வொண்ணாத நிர்வேதத்துடனே மூன்றுநாள் உபவாஸமாக எழுந்தருளியிருந்து ஒருவாறு திருவுள்ளத்தை ஸமாஹிதமாக்கி 'ஸ்ரீமதி லோகாசார்யே திவம் கதே பிரஸித்த தச்சிஷ்யா:, ஸந்தி கலு ரங்கநகரே தச்சரணச்சாய மாச்ரிதோ ஸாநி.'' [லோகாசார்யர் திருநாடலங்கரித்தாலும் அவருடைய திருவடி ஸம்பந்திகள் கோயிலிலே வாழ்ந்திருப்பர்களே; அவர்களின் திருவடி நிழலிலே யொதுங்கி வர்த்திக்கக்கடவேன்] என்று பாரித்துக்கொண்டு "ஸ காம மநவாப்யைவ'; என்னச் செய்தேயும் 'ஆருரோஹ ரதம் ஹ்ருஷ்ட:'என்றுப்போலே ஹர்ஷத்துடனே கோயிலேறப் புறப்பட்டருளியாச்சுது"

"தேசிகன் கோயில் சேர்ந்து அருளிச்செயலோதுதல். ஸ்வாமி தேசிகன் பட்டரருளிச்செய்த ஸ்ரீரங்கராஜஸ்தவத்தை அநுஸந்தித்துக்கொண்டே கோயிலேற வெழுந்தருளி 'காவேரீமவகாஹிஷீய' இத்யாதி ச்லோகங்களைச் சொல்லி திருக்காவேரியில் நீராடி அநுஷ்டானங்களை முடித்துக்கொண்டு உள்ளே புகுந்து சந்த்ரபுஷ்கரிணீ ப்ரதக்ஷிணமாகப் பலிபீடத்தருகே தண்டன் ஸமர்ப்பித்து நிற்கையில் ஸ்தானீகர்களில் ஒருவரான சிங்கு ஸ்வாமியென்பவர் வந்து ஸகலமரியாதைகளோடும் உள்ளே யெழுந்தருளப்பண்ணி ஸகல சிறப்புகளும் செய்வித்தார். பிறகு அங்கு நின்றும் புறப்பட்டருளி அஞ்சுகுழி மூணு வாசலுக்கருகே எழுந்தருளுகையில், கோயிலாத்தான் என்கிறவொரு பெரியவர் வந்து நமஸ்கரித்து 'ஸ்வாமியின் வைபவங்களையெல்லாம் பலர்சொல்லக் கேட்டிருக்கிறேன்; வேதாந்தாசார்ய பிருதும் ஸர்வதந்திர ஸ்வதந்த்ர பிருதும் கவிதார்க்கிக ஸிம்ஹ பிருதும் மற்றும் அனேகபிருதுகளும் நீர் பெற்றிருப்பதாகக்கேள்விப்பட்டேன்; உம்மைப்போன்ற ஆசாரியர் நீரேதான் என்று சொல்லுகிறார்கள்; உம்முடைய முகச்சோதியும் ஆச்சரியமாயிருக்கிறது. இருபது பிராயத்தினுள்ளே நீர் நாலுவித வித்தைகளையும் அதிகரித்ததாகச் சொல்லுகிறார்கள்; த்ராவிடவேதமாகிய திவ்யப்ரபந்தங்களை அதிகரித்ததுண்டோ?' என்று கேட்க, ஸ்வாமியும் 'அந்த பாக்யம் இன்னும் பெறவில்லை: அதற்காகவே இங்கு விடைகொண்டேன்; இங்கே அதை அத்யாபனம் செய்யவல்லாருண்டோ? தேவரீர் தாமே அருள் செய்வதானாலும் க்ருதார்த்தனாவேன். தேவரீருடைய தேஜஸ்ஸைப் பார்த்தால் ச்வேதத்வீபவாஸியோவென்று நினைக்கலாயிருக்கிறது. அருள்புரியத் திருவுள்ளமானால் இன்றே ஆரம்பமாகலாம்' என்று கூற, அதற்கு அந்த கோயிலாத்தான் ஸ்வாமி 'அடியேன் வயது சென்றவனாகையால் அசக்தனாய்விட்டேன்; என்னுடைய மகன் 'யுவா ஸ்யாத் ஸாது யுவாத்யாயக:' என்கிற உபநிஷத்தின்படியே எல்லாம் வாய்ந்து உத்தமசீலனாயு மிருக்கின்றான்; அவனிடத்திலே அதிகரிக்கலாமானால் இன்று நாளையில் ஆரம்பமாகலாம்' என்று ஸாதிக்க, ஸ்வாமி உள்ளமும் உடலும் பூரித்து அவர் திருமாளிகையேறச்சென்று அவரை ஸாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டு அவரிடத்தே ஆசார்யப்ரதிபத்திபண்ணி திருப்பல்லாண்டு தொடங்கி முதலில் இயற்பா ஆயிரத்தையும், பிறகு அடைவே மற்ற ஆயிரங்களையும் இரண்டொரு ஸம்வத்ஸரத்திலேயே அதிகரித்துத் தலைக்கட்டியாச்சுது.

**(பக்கம் 23ல்) "தேசிகன் திவ்யப்ரபந்த வியாக்கியானங்களுமதிகரித்தல்**

ஸ்ரீமத் ராமாயணத்திலே (அகஸ்த்யப்ராதரம் ததா) என்று ஒரு ரிஷிக்கு அகஸ்த்ய ப்ராதாவென்றே ப்ரஸித்தியானாப்போலே இந்த ஸ்வாமிக்கும் கோயிலாத்தான் மகன் என்றே ப்ரஸித்தியாயிருந்தது. ஆகவேதான் "கோயிலாத்தான் மகனைக் கொண்டாடிக்கொண்டிருப்போம்" என்று பின்னானார் அநுஸந்திச்கும்படியாச்சுது. அதன் பிறகு திவ்யப்ரபந்த வியாக்கியானங்களையும் ஸேவிக்கத்திருவுள்ளமுண்டாகி அதுக்கு ஆவார் ஆரென்று தேடுமளவிலே ஈயுண்ணியாழ்வான் திருக்குமாரரான அய்யாதுரைஸ்வாமி போர விரகர் என்று கேள்விப்பட்டு அவரைச் சில நாள் அநுவர்த்தித்து சுச்ரூஷைகளாலே ப்ரஸன்னராக்கி இருபத்து நாலாயிரப்படி மற்றுமுள்ள வியாக்கியானங்களையும் அதிகரித்து த்ராவிடவேதாந்தமல்லது வேறொன்றறியார்என்னும்படியாக பதினாறு மாஸங்களில் மஹாவ்யாபகராகியாச்சுது".

**"தேசிகனிடத்தில் ஸ்ரீரங்கவாஸிகளின் ஸர்வப்ரகாரமான அபிநந்தனம்**

(பக்கம் 25ல்) கஜத்ராதேதி வ்ருத்தாபி: ஸ்ரீகாந்த இதி யௌவதை:, யதாஸ்திதச்ச பாலாபி: த்ருஷ்டச் சௌரிஸ் ஸகௌதுகம்" என்று ஸ்ரீக்ருஷ்ண பகவானை ஓரொருவர் ஓரொருவிதத்தாலே கொண்டாடினாப்போலே ஸ்வாமி தேசிகனை ஸ்ரீரங்கவாஸிகள் ஒவ்வொருவர் ஒவ்வொரு வகைக்காகக் கொண்டாடி உள்ளம் பூரித்து ஸ்வாமியை க்ஷணகாலமும் பிரிந்திருக்க மாட்டாமே அளவு கடந்த ப்ராவண்யத்தோடே அல்லும் பகலும் அகலகில்லாதேயிருந்தார்கள். சிலர் ஸ்வாமியினுடைய வித்யாவைபவத்திலும், சிலர் ஸ்வாமியினுடைய ஆத்மகுணகணபூர்த்தியிலும், சிலர் ஸ்வாமியினுடைய அநுஷ்டான ஸம்பத்திலும், சிலர் ஸ்வாமியினுடைய வைராக்ய ஸம்பத்திலும், சிலர் ஸ்வாமியினுடைய திருமேனியழகிலும், சிலர் பாகவத அபசார பீருத்வமாகிற மஹா குணத்திலும் ஈடுபட்டிருந்தார்கள்; எல்லாரும் ஏகமுகமாக ஈடுபட்டிருந்தது எந்த மஹா குணத்திலென்னில்; ஸ்வாமி சிற்றஞ்சிறுகாலைபெழுந்திருந்து கூரத்தாழ்வான் எங்களாழ்வான் நம்பிள்ளை பெரியவாச்சான்பிள்ளை பிள்ளைலோகாசாரியர் ஆகிய இவ்வாசார்ய ஸார்வபௌமர்களின் திருமாளிகைகளுக் கெழுந்தருளித் திருவீதிப்புழுதியிலே தெண்டன் ஸமர்ப்பித்து அவரவர்களின் உபகாரசிந்தனையிலே ஊன்றியிருந்ததை அதிசயித்துப்பாராட்டினர்.

**(பக்கம 26ல்) "தேசிகன் கூரகுலோத்தம தாஸரைப் பேணுதல்**

அக்காலத்தில் ஸ்ரீ கூரகுலோத்தம தாஸரென்பாரொரு ஸ்வாமி பரம விலக்ஷணராயெழுந்தருளியிருந்தது கண்டு அடிக்கடி அவரை அநுவர்த்தித்து நல் வார்த்தைகள் கேட்பதும் சொல்லுவதுமாய் "மச்சித்தா மத்கதப்ராணா போதயந்த: பரஸ்பரம்: கதயந்தச் ச மாம் பக்த்யா துஷ்யந்தி ச ரமந்தி ச" என்று கீதையில் சொன்ன கட்டளையிலே அளவளாவி வந்தார்கள். அந்த மஹான் பிள்ளைலோகாசாரியர் திருவடிகளிலே பல வாண்டுகள் பழுக்க ஸேவித்து ஸகல சாஸ்த்ரார்த்தங்களையும் கையிலங்கு நெல்லிக்கனியாகக் கண்டவராகையாலே அவர் எடுத்துரைக்கும் அர்த்த விசேஷங்களைக் கேட்குந்தோறும் உள்ளுந்தோறும் உருகியிருப்பார் தேசிகன். அப்படியுண்டான ஆனந்தத்தின் பரீவாஹ ரூபமாகவே ஸ்வாமீ தேசி

கன் பகவத்த்யான ஸோபான அவஸாநத்திலே "ரங்கா ஸ்தாநே ரஸிகமஹிதே ரஞ்ஜிதாசேஷசித்தே வித்வத் ஸேவாவிமல மநஸா வேங்கடேஶேந" என்று உலக மெல்லாமறியப் பொறித்து வைத்தருளியாச்சுது திருவரங்கத்திருப்பதியை ரஸிகர்களான மஹான்கள் அலங்கரித்திருந்தபடியாலே அனைவருடையவும் சித்தத்தை உகப்பித்ததென்றும், ஸ்வாமி தேசிகன் தாம் அவ்விடத்தே வாழும் வித்வான்களை ஸேவித்து [அடிபணிந்து] அவர்கள் பக்கலிலே கேட்டருளின அர்த்த விசேஷங்களாலே நிஷ்கல்மஷ சித்தரானுரென்றும் தம்முடைய திருவாக்காலே அருளிச் செய்கையாலே கோயிலின் சிறப்பும் கோயிலில் வாழும் ஆசார்யர்களின் பெருமையும் தெரிவிக்கப்பட்டதாயிற்று."

(பக்கம் 27ல்) "தேசிகனுடைய கோயில் வாஸத்து அதிசயங்கள்—அக்காலத்தில் ஸ்வாமி தேசிகன் சந்த்ரபுஷ்கரிணிக் கரையில் விளங்குகின்ற திருப்புன்னையை பட்டர்ஸ்ரீரங்கராஜஸ்தவத்திலே 'புந்நாக தல்லஜம் அஜஸ்ர ஸஹஸ்ரகீதி ஸேகோத்த திவ்ய நிஜ ஸௌரபம் ஆமநாம:" என்று கொண்டாடியிருந்ததையறிந்து. நித்யமும் சந்த்ரபுஷ்கரிணியில் ஸாயம் ஸந்த்யாநுஷ்டானத்தை முடித்துக்கொண்டு அந்தத் திருப்புன்னையடியிலே ஸஹஸ்ரகீதி பஹார்த்தங்களையும் அஷ்டாதசரஹஸ்யார்த்தங்களையும் போதயந்த: பரஸ்பரம் பண்ணிக் கொண்டிருப்பார் திரளிலே தாமும் அந்வயித்து, அங்குச் சிந்திப்போன பொருள்களையெல்லாம் ச்லோகபத்தமாக்கித் தம்முடைய க்ரந்தங்களிலே சேர்த்து, அவற்றைத் தாம் வாசித்துக் காட்டுவதும் அவர்களுடைய புகழ்ச்சிகளைப் பெறுவதுமாயிருந்து வந்தாச்சுது. அந்த ச்லோக ரத்னங்களைச் செவிசாத்துமவர்கள் ஸ்வாமியினுடைய கவிதாசாதுர்யத்திலே அளவு கடந்த ஈடுபாடுகொண்டு நாடோறும் ஸ்வாமியே அங்கு ஸ்வஸூக்திகளை விவரித்து உபந்யஸித்தருள வேண்டியதென்று நிர்ப்பந்தனை செய்தருளினர்கள்."

"திருப்புன்னையடியில் ஸ்வாமி தேசிகன் அருளிய அர்த்தவிசேஷங்கள்.

'த்ரமிட நிகமத்ரஷ்ட்ரா நாதேந யாமுநயோகிநா
யதிந்ருபதிநா கூரேசார்யைஸ் ததா குருகேச்வரை:]
புவநகுருபி: க்ருஷ்ணத்வந்த்வேந லம்பிதரக்ஷண:
மம ஹ்ருதி ஸதா ஜீயாத் ஸத்ஸம்ப்ரதாய ஸுசேவதி;—என்றும்

ஜகத்தேசிகாக்யாந் ஸதாசார்யவர்யாந்
ததீயாச்ச ஸூக்தீர் முஹுச்ச சிந்தயித்வா,
ஸதாம் ஸந்நிதாநாத் க்ருஹீதாந் ஸதர்த்தாந்
ஸதாம் சாஸநேநேஹ விஜ்ஞாபயாமி' என்றும்,

ஸ்ரீமல்லோககுருத்தமாந் குணநிதீந் வித்யாநிதீந் ஸாத்விகாந்
ஆசார்யாந் அஸக்ருத் விசிந்த்ய, பணிதீஸ் தேஷாம் ஸதா சிந்தயந்,
தாஸோ வேங்கடநாதநாமககவி: ஸ்ரீரங்கதாபநி ஸ்திதாந்
ஏதாந் ஸாத்விக ஸஜ்ஜநாந் மம கிரா ஸம்மோதயே ஸாம்ப்ரதம்.

என்றும் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு ச்லோக ரத்னத்தை முகப்பில் விண்ணப்பஞ் செய்து ஸ்வாமி தேசிகன் ஸ்ரீஸூக்திகளை அமோகமாக அருளிச் செய்யும்படியாயிருந்தது. அலையாருங் கடல் போல் முழங்கியும், கங்கை நீர்ப்பெருக்கோ காவி

ரிப் பெருக்கோ என்னலாம்படி பெருகியும் விம்மி வெளி வந்த அந்த திவ்ய ஸ்ரீஸூக்திகளின் காம்பீர்ய ஔதார்யங்களை என்ன வென்பது? நம்பிள்ளையின் புநரவதாரமே ஸ்வாமியென்று ஒருமிடறாக அனைவரும் அறுதியிட்டார்கள். ஸ்வாமி மட்டும் பிள்ளைலோகாசார்யரையும் அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரையும் ச்ருதப்ரகாசிகாபட்டரையும் ஸாக்ஷாத்தாக ஸேவிக்கப் பெறாத துயரத்தை அடிக்கடி விஜ்ஞாபித்துக் கொண்டிருந்தபடி. அந்தத் துயரத்திற்கு ஒருபரிஹாரமாகவே ஸ்ரீ ஸுதர்சநார்யவிம்சதியும் ஸ்ரீலோகார்யபஞ்சாசத்துமருளிச் செய்து ஒருவாறு ஸமாஹிதரானபடி.''

தடஸ்த மஹானுகளே! இங்ஙனே எவ்வளவெடுத்துக்காட்டலாம்? மேலே குறித்த வைபவநூல் சென்னை ஸ்ரீரங்கம் மதுரை திருநெல்வேலி முதலிய எல்லா நகரங்களிலுமுள்ள புத்தகக் கடைகள்தோறும் அருமையின்றி எளிதாகக் கிடைப்பதாதலால் ஒவ்வொருவரும் வாங்கியநுபவிக்கலாமே. பெங்களூர் துளஸி தோட்டத்தில் தூப்பல் வெங்கடாசாரியார் என்கிற வடகலை வித்வான் 1904 ஸூத்தில் தெலுங்கு லிபியில் தாம் அச்சிட்ட ஸ்தோத்ராவளியில் 'ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய:' என்கிறதனியனுடன் ஸ்ரீலோகாசார்ய பஞ்சாசத்என்கிற ஸ்தோத்ரத்தைச் சேர்த்திருக்கிறார். திருப்புட்குழியில் தாதாசாரியர்கள் மரியாதைகள் அநுபவித்துவந்த வரையில் ஐப்பசித்திருவோணந்தோறும் இந்தஸ்துதியைக் கண்டபாடமாக அநுஸந்தித்து வந்தார்களென்பது ப்ரஸித்தம். திருநாராயணபுரம் முதலான திவ்ய தேசங்களில் இற்றைக்கும் அநுஸந்திக்கப்படுகிறது. பிள்ளைலோகாசாரியரை தேசிகன் ஸேவிக்கப் பெற்றதில்லையாயினும் யதிராஜஸப்ததி பணித்தது போலவே லோகாசார்யபஞ்சாசத்தும் பணித்தருளினர் இதுபற்றி இப்போதாக அதிகம் எழுதவேண்டியதொன்றுமில்லை. பெங்களூர் ப்ராந்தத்தில் நெடுநாள் வாழ்ந்தருளின ஸ்ரீமதாண்டவன் திருவுள்ளம் நன்கறியுமே.

அமரகோசத்தில் ஜால்ம: என்றொரு பதம் கூறப்பட்டுள்ளது [ஜால்மோஸமீக்ஷ்யகாரீ ஸ்யாத்] விளைவதறியாமல் மனம் போன போக்கில் ஏதோ செய்துதிண்டாடிநிற்பவனுக்கு ஜால்மனென்றுபெயர். சிலவாண்டுகட்கு முன்பு திருவயிந்திரபுரத்தாரொருவன் ''தென்கலையார்கள் கலிபுருஷாவதாரபூதர்கள்'' என்று பாதுகையில் வெளியிட்டபோது, அதை ஸ்ரீமதாண்டவன் சிலநாள்கழித்து அறிந்து அநுதபித்து ''இனி இப்படிப்பட்ட அஸந்தர்ப்பப்ரேலாபங்கள் பாதுகையில் வெளிவராதபடி ஜாகரூகர்களாயிருப்போம்'' என்று ப்ரதிஜ்ஞை செய்தருளலாயிற்று. மீண்டுமீண்டும் பாசி படருவது ப்ரக்ருதிவாஸனை. ஒரு தத்துவம் கேளீர். ஸ்ரீவைஷ்ணவஸம்பிரதாயத்தில் ஆழ்வார்களென்று இருந்தார்கள், பகவத்ராமாநுஜரென்று இருந்தார்; நிகமாந்த மஹாகுரு வென்றிருந்தார்—என்று இவர்கள் தெரிந்து கொண்டது பதினெழாவது நூற்றாண்டின் முடிவில் என்பதை நாம் வைதிகலௌகிக ப்ரமாணங்கள் பலவுங்கொண்டு பற்பலகால் நிரூபித்திருக்கிறோம். ஆங்காங்கு திவ்யதேசங்களில் வேதாந்த தேசிகன் எழுந்தருளியிருந்து உத்ஸவாதிகள் குறையற நடந்துவரச் செய்ததையும் ஸ்வாமிக்கு வெளிநிலங்களில் கோவில் கட்டிக் கூத்தாடத் தொடங்கின நாள் 'இன்னவூரில் இன்ன வருஷம், இன்னமாதம் இன்னதேதி—என்பது எங்கும் ப்ரஸித்தமாயிருக்கையாலே தத்வநிர்த்தாரணம் பண்ண. அது ஒன்றே போதுமே.

தேசிகாஷ்டோத்தரஶதநாமஸ்தோத்ரம் :—மேலே குறித்த தேசிக வைபவத்தில் (பக்கம் 30ல்) ஒரு மஹாகவி மிக்க செருக்குடன் தேசிகனிடம் வந்து வாதாடிப் பராஜிதனாய் ஸ்ரீ வைஷ்ணவனாகி தேசிகன் திருவடிகளிலே நித்யஸேவா நிரதனாயிருந்து ஒரு அஷ்டோத்தரஶதநாமஸ்துதியை விண்ணப்பம் செய்ததாகவெழுதி அதுபூர்த்தியாக இரண்டுபக்கம் அச்சிடப்பட்டுள்ளது. "காஞ்சீ ஹிமவநோத்பந்ந: விச்வாமித்ராந்வயோதித:" என்று ஆரம்பம். இடையில் 'கோயிலாத்தான் ஸுதச்சாத்ர: த்ராவிடாம்நாய கோவித: ஈயுண்ணி ஸ்வாமி ஸத்பக்த: விசுத்தஜ்ஞாந சேவதி: வித்வத்ஸேவா விசுத்தாத்மா முநிவாஹநபூஜக: வீதகல்மஷ ஸத்புத்தி: ஸாதுஸேவீ ஸுசிக்ஷித:...லோகாசார்ய பதாஸக்தோ லோகதேசிக ஸூக்திபுக் II ஸ்ரீ வாக்பூஷணதத்வஜ்ஞ: ஸம்ஶோதிதமதிஸ் ஸுதீ: இத்யாதி திவ்யநாமங்கள் உண்மைப்பொருள் காட்டுமவை இந்த நாமாவளி ஸ்துதியை ஸ்ரீ ரங்கநாதன் திருமுன்பே தேசிகன் தாமே அரங்கேற்றம் செய்வித்து அந்த மஹாகவிக்கு ஸத்காரங்கள் பெறுவித்துத் தாமும் பஹுமானிக்கப்பட்டதாக எழுதப்பட்டுள்ளது.

இநா க்ரந்தங்கள் வேண்டா; ஸுப்ரஸித்த தேசிக திவ்யஸூக்திகளே போதுமே; "ரங்காஸ்தாநே ரஸிகமஹிதே ரஞ்ஜிதாஶேஷசித்தே வித்வத்ஸேவாவிமலமநஸா வேங்கடேஶேந" என்கிற பகவத்த்யாநஸோபாநச்லோகம் ஸ்ரீ வைஷ்ணவர்கள் யாவர்க்கும் நித்யாநுஸந்தானத்திலுள்ளது. இதற்கொரு வியாக்கியானம் வேணுமோ? ஸ்ரீரங்கத்தில் அஶேஷ சித்தரஞ்ஜகர்களாயும் ரஸிகர்களாயுமுள்ள வித்வான்களையடிபணிந்து தேசிகன் தாம் விமலமநஸ்கராகப் பெற்றதாக ஸ்பஷ்டமாய்க் கூறியுள்ளார். (வித்வத்ஸேவா மஹித மநஸா) என்றோ (ரஸிகமநஸா) என்றோ ஸாதியாமல் (விமல மநஸா) என்று ஸாதித்திருக்கிறபடியை நோக்குவாரில்லையே. ரெஞ்சிவிருந்த கல்மஷங்கள் கோயிலுக்கு வந்தபின்பு தொலையப்பெற்றதாக ஸாதித்திருப்பதை ப்ராமாணிகர்கள் அபலாபம் பண்ணலாமா? அமலனாதிபிரானுக்கு மட்டும் வியாக்கியான மிடவேண்டிய ஆவஶ்யகதை ஏதுமில்லாதிருக்க, அதற்கு வியாக்கியானமிட்டதும், அதற்கு முநிவாஹநபோகமென்று திருநாமமிட்டதும், அதன் முடிவில் "வேண்பெரிய விரிதிரைநீர் வையத்துள்ளே வேதாந்தவாரியனென்றியம்பநின்றோம், நாண் பெரியோமல்லோம் நாம் நன்றுந்தீதும் நமக்குரைப்பாருளரென்று நாடுவோமே" என்றொரு பாசுர மியற்றிவைத்ததும் நெஞ்சை நடுநிலையிலே வைத்து நோக்கப்பட்டால்...மேலே நாம் என்ன எழுதுவது! திருப்பாணாழ்வாருடைய முநிவாஹநத்வகதை "ஸ்த்ரீதர்மிண்யாம் ஆத்மஜநந்யாமிவ" என்கிற ஶததூஷணீ ஸூக்தியோடு முரண்படுகையாலே அதில் முன்னம் விப்ரதிபத்தியிருந்ததாகவும், கோயிலேறப்போந்து தமக்கு நன்றுந்தீது முரைப்பாரை நாடித் தெளிந்ததாகவும் ஸ்வபக்தமாக ஸ்வாமி தாமே காட்டிவைக்கவில்லையா? இவ்வர்த்தங்களெல்லாம் "விசுத்ததேசிகவதா ரங்கதாம்நி வ்யவலிக்யத" என்கிற ரஹஸ்யமாத்ருகா சுலோகத்தினால் ஸத்யாபிதமாகவில்லையா? 'ரங்கதாமாவுக்குவந்து விசுத்ததேசிகவானாக ஆனேனென்று எதற்காக அய்யா ஸாதிக்கவேணும். 'பாவி இப்படி மடிபிடித்துக் கேட்கிறானே!' என்று சீற்றமுண்டாகும். என்செய்வதந்தோ! இவ்வர்த்தவிஶேஷங்களெல்லாம் வெளிவருவதற்காகத்தானே தேசிகனுக்கு ஸ்வாமி பிள்ளைலோகாசாரியர் ப்ருத்யரா யிருந்தாரென்று பாதுகை வெளி

யிட்டது. ஒருவர் 'என் தாயார் ஆசாரியன் திருவடியடைந்தார்' என்றெழுதுவதற்கு 'என் ஆசார்யர் என் தாயார் திருவடியடைந்தார்' என்றெழுதி அச்சிட்டுப் பிரசுரம் செய்தாராம். அதுதான் நினைவுக்கு வருகிறது.

சீரொன்று தூப்புல் தனியன் சிறப்பு—'சீரொன்று தூப்புல் திருவேங்கடமுடையானென்கிற பாட்டைப் பிள்ளைலோகாசாரியர் ஸாதித்திருக்கவேணுமானால், "தன்னாசிரியன் தன்னொடு கற்றோன், தன்மாணக்கன் தகுமுரைகாரனென்று, இன்னோர் பாயிரமியம்புதல்கடனே" என்ற நன்னூலின்படி தனியனிடுவதற்கு ஆசாரியரே முதன்மைபெற்றவராதலால் பிள்ளைலோகாசாரியர் தேசிகனுக்கு ஆசாரியரான முறையில் ஸாதித்திருக்கலாம். 350 வருஷங்களுக்கு இப்பாலிருந்த அப்பய தீக்ஷிதர் தீபப்ரகாச ஸந்நிதி பரிஸரத்தில் தும்பைவன மென்கிற அக்ரஹாரத்தை ப்ரதிஷ்டிப்பித்தார். அது துப்பையென்றும் துப்பலென்றும் தூப்பலென்றும் கொச்சையாக வழங்கப்பட்டுவருகிறது. தூப்பலென்கிற சொல்லைக் கொண்ட பிரபந்தசாரம், பிள்ளையந்தாதி, வாழிதிருநாமம் இவை என்றைக்குத் தோன்றினவோ அன்றைக்குத் தோன்றியதே சீரொன்று தூப்புல் பாட்டும்—என்று சிலமத் தீர்ப்பாக முடிந்து போன விஷயம். மீண்டும் தலைக்காட்டி பங்கப்படவேண்டுமா ?

பாதுகாவில் திவ்யப்ரபந்தப்பாசுரக்கொலைகள்;—அப்பப்ப! திவ்யப்ரபந்தப் பாசுரங்கள் பாதுகாவில் இப்படியா கொலை யுண்ணவேணும். மைத்துனன் காமங்கள் மாற்றேலோரெம்பாவாய்' என்று சென்றவருஷத்தில் வெளிவந்த பாடம். இப்போது (மற்றினங்காமங்கள்) என வெளிவந்துள்ளது. எப்படி பதச்சேதமோ ? என்ன பொருளோ ? இதுதான் திருப்பாவை யுபந்யாஸம்போலும். ஸ்ரீ பாஷ்யகாரர் கலிப்பெருமானுடைய ஒலிமிக்க பாடலையுண்டாராம். அந்த கலிப்பெருமான் யாரோ ? அவர் என்ன பாடல் பாடினாரோ ? போதும் போதுமிந்த வீண் போதுபோக்கு.

ப்ராமாணிகபண்டித லக்ஷணம்;—கேட்டிருக்கிற கேள்விகளுக்கு ஆர்ஜவத்துடன் ஸமாதானங்களை வெளியிடுவது பண்டித லக்ஷணமேயொழிய, வர்ஷமாறாமானாலும் அதற்குச் சரக்கில்லாமையாலே வாளாவிருக்கில்லாதே பொய்க் கதைகளை எழுதி ஏட்டை நிரப்புவது பண்டிதக்ருத்யமாகாது. 'எதை எழுதி ஏட்டை நிரப்பலாம்!' என்று பார்ப்பவர்களால் உலகுக்கு என்ன உதவி ஏற்படும். வடமொழி தென் மொழிகளை நன்கு கற்றவர்களைக் கொண்டு லோகோபகாரம் செய்தருளவேணுமென்பது வேண்டுகோள். ஸ்ரீமதாண்டவன் திருவடிகளில் அன்பு குன்றாதவனடியேன். இங்ஙனம்;—நல்லார்க்கு நல்லன்.

"தழை நல்லவின்பம் தலைப்பெய்து எங்குந் தழைக்கவே."

# 51-ஆம் ஸ்ரீ வைணவ மாநாடு

திரு. நா. வேணுகோபால் நாயகர். B.A., B.L.,

51-ஆம் ஸ்ரீ வைணவ மாநாடு 1976ம் ஆண்டு டிசம்பர் 25ஆம் தேதி முதல் 28-ஆம் தேதி வரை சென்னை உப்புட்டூர் ஸ்ரீ ஆழ்வார் செட்டியார் இராமாநுச கூடத்தில் ஸ்ரீமான் A. V கன்னைய நாயுடு அவர்கள் தலைமையில் நடைபெற்றது.



தமிழ்நாடு உயர் நீதிமன்ற நடுவர்
மாண்புமிகு. திரு. G, இராமாநுஜம் அவர்கள்
மாநாட்டைத் தொடங்கிவைத்தார்.



மகாநாட்டின் தலைவர்
ஸ்ரீமான் A.V. கன்னைய நாயுடு அவர்கள்



ஸ்ரீ வைணவ மகாசங்கத்தின் நிரந்தர தலைவர் N. கிருஷ்ணசாமி ரெட்டியார் அனைவரையும் வரவேற்றார்.

ஸ்ரீமான் உ. வே. மகாமகிமோபாத்யாய பிரதிவாதி பயங்கரம் காஞ்சி அண்ணங்கராசாரிய சுவாமிகள் மகாநாட்டினை மங்களா ஸாசனம் செய்தருளினர்.

(மற்றது பின்வரும்)

# அத்வைதிகளுக்கு விஷ்ணுத்வேஷம் தகுமா?

(ராமக்ருஷ்ண விஹுவிடை) P. B. A.

அத்வைத ஸம்ப்ரதாயஸ்தர்கள் சிவபக்தி கொள்வதும் விஷ்ணுத்வேஷங்கொண்டு கைபோனபடியெல்லாம் விஷ்ணு தூஷணைகளையெழுதுவதும் பகவத் பாதாளுடைய பக்தர்கள் நாம்-என்று சொல்லிக் கொள்வதும் தகுமா? என்று கண்ணனுடைய வினவுக்கு ராமன் விடையிறுக்கிறான்.

இதிஹாஸ புராணங்கள் வைதிகர்களால் வேதம் போலவே கொண்டாடப்பட்டு வருகின்றன. பகவச் சாஸ்த்ரமெனப்படுகிற ஸ்ரீபாஞ்சராத்ர ஸம்ஹிதைகளை அத்வைதிகள் பிரமாணமாக ஒப்புக்கொள்வதில்லையென்பது தெரிந்ததே. அதுநிற்க. ஸ்ரீராமாயணாதி இதிஹாஸபுராணங்களை ஒதுக்கியிருப்பதாகத் தெரியவில்லையே. "வேதவேத்யே பரே பும்ஸி ஜாதே தசரதாத்மஜே, வேத: ப்ராசேதஸாதாஸீத் ஸாக்ஷாத் ராமாயணாத்மநா" என்கிற சுலோகத்தை ஸ்ரீராமாயண ப்ரவசநகாரர்களான அத்வைதிகள் யாவரும் சொல்லி வருகிறார்கள். இத்தால் ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம் வேதப்ராதுர்ப்பாவவிசேஷமென்பது கையிலங்கு நெல்லிக்கனி.

## இதிஹாஸ புராணங்களும் தேவதைகளும்

இதிஹாஸ புராணங்கள் எதற்காக அவதரித்தனவென்றால், ஏதோ கதைகள் சொல்லுவதற்கு என்றே சிலர் நினைப்பர்கள். உண்மை அதுவல்ல *இதிஹாஸ புராணாப்யாம் வேதம் ஸமுபப்ரும்ஹயேத், பிபேத்யல்பச்ருதாத் வேத: மாமயம் ப்ரதரிஷ்யதி* * என்று மஹர்ஷிகள் சொல்லிவைத்தார்கள். ஸ்ரீவால்மீகி பகவான் ஸ்ரீராமாயணத்தைக் குசலவர்களுக்கு ப்ரவசனம் செய்வித்ததைச் சொல்லுமிடத்து *வேதோபப்ரும்ஹணார்த்தாய தௌ அக்ராஹயத ப்ரபு:* என்று சொல்லிற்று. இவற்றால் நாம் என்ன தெரிந்துகொள்ளுகிறோம்? வேதத்தினுட் பொருள்களை விசதீகரிப்பதற்காகவே இதிஹாஸ புராணங்கள் அவதரித்தனவென்று தெரிந்துகொள்ளுகிறோம். இதிஹாஸ புராணங்களில் வரும் கதைகள் வெறுங் கதைகளல்லவென்றும் வேதவிழுப்பொருள்களை விளக்குவனவென்றும் தெரிந்து கொள்வதே வைதிகர்களின் கடமையாகும். ஸ்ரீராமபிரானுடைய கதைகளை விளக்கும் ஸ்ரீராமாயணாதிகளும் கண்ணபிரானுடைய கதைகளை விளக்கும் மஹாபாரத ஸ்ரீபாகவதாதிகளும் தெரிவிக்கின்ற கதைகளானவை வேதத்திற்கு வியாக்யான ரூபங்கள் என்றதாகத் தேறிற்று. ஸ்ரீராமனும் ஸ்ரீக்ருஷ்ணனுமாகிற திவ்ய மூர்த்திகள் ஸாக்ஷாத் நாராயண மூர்த்திகளேயன்றி வேறு தேவதைகளின் மூர்த்திகளல்லவென்பது ஸ்பஷ்டம். இதர தேவதைகளின் வேண்டுகோளுக்கிணங்கியே நாராயணன் ஸ்ரீராமனாகவும் ஸ்ரீக்ருஷ்ணனாகவும் திருவவதாரங்கள் செய்தருளினது அபலபிக்கமுடியாதபடி மஹர்ஷிகளால் வெளியிடப்பட்டிருப்பதால் தேவதைகளுள் பேதமே கிடையாதென்கிற பேச்சு எள்ளளவும் பொருந்தாது. அப்படி வெவ்வேறுபட்டிருக்கின்ற தேவதைகளுக்குப் பலபல ஆபத்துக்கள் நேர்ந்ததும், அவற்றை அவர்கள் ஸ்ரீமஹாவிஷ்ணுவிடம் வந்து முறையிட்டு அவருடைய திவ்ய க்ருபையால் பரிஹாரம் பெற்றதும் இதிஹாஸ புராணங்களில் பலபல விடங்களில் பிரசுரமாகியுள்ளது. ஸ்ரீமஹாவிஷ்ணுவுக்கு இப்படியொரு விபத்து நேர்ந்து அதை அவர் இதர தேவதைகளிடம் முறையிட்டுப் பரிஹாரம் பெற்றதாக ஓரிடத்திலும் ஒரு கதைகூடக் கிடையாது வேதத்தில் "வரம் வ்ருணீ—வரம் வ்ருணுமஹை" என்று சொல்லி வரம்வேண்டுகின்ற தேவதைகளுக்கே ஆபத்து நேரக்கூடியதாதலாலும், அப்படி ஓரிடத்திலும் ஒரு வரமும் வேண்டாத தேவதாஸார்வபௌமனுக்கு ஆபத்து நேரிட ப்ரஸக்தியில்லாமையாலும், வேதங்களோடும் இதிஹாஸ புராணங்களோடும் வாசியற ஸகல ப்ரமாணங்களும் ஸ்ரீமஹாவிஷ்ணுவின் பாரம்யத்தையே நிலைநாட்டுகின்றனவென்பது தேறி நின்றது ஆனது பற்றியே ஆளவந்தார் "வேதாபஹார குருபாதக தைத்ய பீடாதி ஆபத்விமோசந மஹிஷ்ட பல ப்ரதானை:, கோங்ய: ப்ரஜாபசுபதீ பரிபாதி கஸ்ய பாதோதகேந ஸ சிவஸ் ஸ்வசிரோத்ருதேந?" என்று துணிந்து கேள்வி கேட்டுள்ளார். இதை யநுஸரித்துப் பிள்ளைப்பெருமாளையங்காரும்,

"மங்கைபாகன் சடையில் வைத்த கங்கையார் பதத்து நீர்?
வனச மேவு முனிவனுக்கு மைந்தனுனதில்லையோ ?
செங்கையாலிரந்தவன் கபாலமாரகற்றினுர்?
செய்யதாளின் மலரரன் சிரத்திலானதில்லையோ ?
வெங்கண் வேழம் மூலமென்ன வந்ததுங்கள் தேவனே?
வீறுவாணன மரிலன்று விறலழிந்த தில்லையோ ?
அங்கண் ஞாலமுண்டபோது வெள்ளி வெற்பகன்றதோ?
ஆதலாலரங்கனன்றி வேறு தெய்வமில்லையே.''

என்று சில கேள்விகள் கேட்டிருக்கின்ருர். பிறரால் ஆர்ஜவத்துடன் ஸமாதானம் சொல்ல வொண்ணுதபடி இங்ஙனே கேட்கத்தக்க கேள்விகள் கணக்கிலடங்கா. இதிஹாஸ புராணங்களில் கூறப்பட்டிருக்கின்ற கதைகளுக்கு அர்த்தமே கிடையாதென்றும், அவற்றைக் கொண்டு தத்வநிஷ்கர்ஷம் பண்ணலாகாதென்றும் சொல்லுவதனுல் "இதிஹாஸ புராணுப்யாம் வேதம் ஸமுப ப்ருமஹயேத்*'' என்றது அர்த்தமில்லாத வார்த்தையாய்விடும். இதிஹாஸ புராணங்கள் அவதரித்தது எதற்காக ?

## பகவத்கீதையும் ஸ்ரீ மஹாவிஷ்ணுவும்

வேதம் இதிஹாஸ புராணங்கள் முதலிய ஸகல ப்ரமாணங்களிற் காட்டிலும் பகவத் கீதை மிகச் சிறந்ததென்று சொல்லும்படியாக உலகமெங்கும் கொண்டாடப்பட்டு வருகின்றது. இது பகவான் தானே யருளிச்செய்ததென்னும் ஏற்றமுடையது. அந்த பகவான் ஸ்ரீமந் நாராயணனென்றும் ஸ்ரீமஹாவிஷ்ணுவென்றும் குலாவப்படுகிற பரமபுருஷனே யென்பது நிர்விவாதம். இப்படிப்பட்ட கீதாசாஸ்த்ரத்தில் ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் பரத்வமும் இதர தேவதைகளின் அவரத்வமும் அடுத்தடுத்துத் தெரிவிக்கப்படுகிறது. (10—8) *அஹம் ஸர்வஸ்ய ப்ரபவோ மத்தஸ் ஸர்வம் ப்ரவர்த்ததே* என்னுமிடத்தில் சங்கரபகவத் பாதாளுடைய பாஷ்யம் :—

"அஹம் பரம் ப்ரஹ்ம வாஸுதேவாக்யம் ஸர்வஸ்ய ஜகத: ப்ரபவ:— உத்பத்தி.— மத்த ஏவ ஸ்திதிநாசக்ரியா பலோபபோகலக்ஷணம் விக்ரியாருபம் ஸர்வம் ஜகத் ப்ரவர்த்ததே இத்யாதி. மூலத்தில் நாராயணபதமும் விஷ்ணுபதமும் ஸ்பஷ்டமாக இல்லாதவிடங்களில் சங்கரபகவத் பாதாள் விஷ்ணு நாராயண வாஸுதேவ பதங்களையிட்டே பாஷ்யம் செய்து போகிருர். (9-25) * அநந்யாச்சிந்தயந்தோ மாம் * என்ற விடத்தில் "பரம் தேவம் நாராயணம் யே பர்யுபாஸதே, தேஷாம் பரமார்த்த தர்சிநாம்'' என்று,பரதேவதை யான நாராயணனை உபாஸிப்பவர்களே பரமார்த்தம் கண்டவர்களென்கிருர். 'விஷ்ணுவுக்குப் போலவே சிவனுக்கும் பாரம்யமுண்டு' என்கிற வாதத்தை ஆதிசங்கர பகவத்பாதாள் ஸஹிப்பதில்லை. கீதையில் ஸ்ரீமந் நாராயணன் தவிர மற்றுள்ள தேவதைகளை பஜனஞ் செய்யுமவர்களைப் பற்றிச் சொல்லாமலில்லை (7-20) "காமைஸ் தைஸ் தைர் ஹ்ருதஜ்ஞாநா: ப்ரபத்யந்தே அந்யதேவதா: '' என்று தொடங்கிச் சொல்லுகையில் (ச்லோ 23) "அந்த வத் து பலம் தேஷாம் தத்பவத்யல்ப மேதஸாம்'' என்று முடிக்கப்பட்டது. இந்த ச்லோகத் தின் சங்கரபாஷ்யத்தின் முடிவு வாக்யம் பரமபக்தர்களை அவசமாகவே கண்ணீர்விடச் செய்கின்றது. "ஏவம் ஸமாநேபிஆயாஸே மாமேவ ந ப்ரபத்யந்தே — நந்தபலாய; அஹோகஷ்டம் கஷ்டதரம் வர்த்ததே; இத்யநுக்ரோசம் தர்சயதி பகவந்'' என்பது இங்கு சங்கரபாஷ்யபங்க்தி. நாராயணேபாஸகர்களுக்குத்தான் அனந்தமாய் அக்ஷயமான பலன் கிடைக்குமென்று தெரிந்திருக்கவும் அந்தோ ! சிலர் அற்ப பலனுக்காக இதர தேவதைகளைப் பற்றுகிருர்களேயென்று வாஸுதேவன் வருந்திக் கூறுவதாகக் கண்டறிந்து சங்கரபகவத் பாதாள் எழுதியிருப்பது குறிக்கொள்ளத் தக்கது.

பதினோராமத்யாயத்தில் விச்வரூபப்ரதர்சநம் அமைந்திருப்பது இதரதேவதைகளின் அவரத்வத்தைக் கையிலங்கு நெல்லிக்கனியாகக் காட்டுவதற்காகவே. அதில் அர்ஜுநன் மூன்றாவது ச்லோகத்தில் "நீயே பரமேச்வரனென்பது வாஸ்தவமே; ஆனாலும் அதை நான் ஸாக்ஷாத்கரிக்க விரும்புவதால் உன்னுடைய வைஷ்ணவ ரூபத்தைக் காட்டலாமோ?" என்று விரும்ப, *பச்யாதித்யாந் வஸூந் ருத்ராந் அச்விநௌ மருதஸ்ததா* என்று தன் திருமேனியினேகதேசத்திலே யொடுங்கிக் கிடக்கிற ஸகல தேவதைகளையும் காணுயென்று காட்டிக் கொடுத்தான் ஸ்ரீமந்நாராயணன்; திவ்யசக்ஷுஸ்ஸைப் பெற்று அதுகண்ட அர்ஜுனன் "பச்யாமி தேவாந் தவ தேவ! தேஹே" என்று தொடங்கி விதி சிவ பாவகாதி ஸகலதேவதைகளையும் வாஸுதேவனுடைய தேஹத்திலே தான் காண்பதாகக் கூறினான். இதை இந்திரஜாலமென்று கூறிற்றிலனாகையாலே அத்வைதவாதம் அடியற்றது. தேவதாந்தர பாரம்யவாதம் ஸூதராம் தொலைந்தது. வேறொரு தேவதை இப்படி விச்வரூபங்காட்டித் தன்னிடத்திலே நாராயணன் ஒடுங்கியிருப்பதாகக் காட்டவல்லதோ? *ருத்ராதித்யா வஸவோ யே ச ஸாத்யா: விச்வேச்விநௌ மருதச் சோஷ்மபாச்ச, கந்தர்வயக்ஷாஸுரஸித்த ஸங்கா: வீக்ஷந்தே த்வாம் விஸ்மிதாச்சைவ ஸர்வே* என்ற ச்லோகமானது *பின்னிட்ட சடையனும் பிரமனும் இந்திரனுமென்று ஆழ்வார்கள் அருளிச்செய்வதற்கு மூலமாக விளங்குகின்றது ..... *



## நேத்ரார்ப்பணீச்வர கதா விவேசனம்

ஸ்ரீமஹாவிஷ்ணு தினப்படியாகப் பரமசிவனை ஆயிரம் தாமரை மலர்களினால் அர்ச்சித்து வந்தாரென்றும், ஒருநாள் தாமரைப் பூ குறைந்துபோகத் தன் திருக்கண்களைப் பிடுங்கி அவை கொண்டு அர்ச்சித்தாரரென்றும் அதனாலேயே அப்பெருமானுக்குப் புண்டரீகாக்ஷனென்று பெயருண்டாயிற்றென்றும், நேத்ரார்ப்பணீச்வரரென்கிற பொருமூன்டென்றும் சொல்லுவது அபஹாஸ்யமான கட்டுக்கதை. இக்கதை உண்மையில் பௌராணிகமாக இருந்தால் புண்டரீகாக்ஷநாம பாஷ்யத்தில் பகவத்பாதாள் எழுதியிருப்பார்கள். பல பொருள்கள் எழுதுவதில் இதையும் ஒரு பொருளாக எழுதியிருப்பர். அஸத்கதையை மஹா ப்ராமாணிகர்களான அவர்கள் எழுத ப்ரஸக்திபுண்டோ? "புண்டரீகாகாரே உபே அக்ஷிணீ அஸ்ய"* என்று செந்தாமரை போன்ற கண்களையுடையவரென்கிற பொருளைச் செய்தாரேயல்லது, தன் கண்களைத் தாமரையாக உபயோகப்படுத்தினவர் என்கிற [அநுவாதத்திற்கும் அநர்ஹமான] பொருளைச் செய்திலர். *பத்மீ பத்மநிபேக்ஷண: *பத்மநாபோரவிந்தாக்ஷ:* என்றவிடங்களிலும் பாஷ்யம் காண்க.



சங்கர பகவத்பாதாள் தம்முடைய பாஷ்யத்தில் கதைகளைக் காட்டுகிற வழக்கமில்லாமையால் காட்டவில்லையெனில், இது சங்கரபாஷ்யத்தை அடியோடு பாராதவர்களின் பேச்சாகும். அதில் அபரிமிதமான கதைகள் எடுத்தாளப்பட்டிருப்பது காணலாம். அந்தக் கதைகளெல்லாம் ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் பாரம்யத்தை ப்ரதிஷ்டாபநம் செய்யுமவையேயல்லது, விஷ்ணுவுக்கு அபகர்ஷத்தையோ தேவதாந்தரங்களுக்கு உத்கர்ஷத்தையோ எள்ளளவும் காட்டுவனவல்ல. கேசவநாமத்தின் பாஷ்யத்தில் ஹரிவம்சத்திலிருந்து கதை காட்டியுள்ளார். ஸ்ரீ மஹாவிஷ்ணுவுக்குக் கேசவனென்று பெயர் கொடுத்தவன் பரமசிவனேயாவன். அந்தப் பெயரைக் கொடுக்கும்போது *கோ ப்ரஹ்மேதி ஸமாக்யாத: ஈசோஹம் ஸர்வதேஹிநாம், ஆவாம் தவாங்கே ஸம்பூதௌ தஸ்மாத் கேசவநாமவாந்*" என்று சொல்லிக்கொண்டே கொடுத்ததாக ஹரிவம்சத்திலுள்ளதை யெடுத்துக் காட்டுகிறார்கள் பகவத்பாதாள். நிர்வாஹகர் நிர்வாஹ்யரை அர்ச்சித்து வந்தாரென்கை ஏற்கத்தக்கதன்று.

(அர்க்க): என்னும் திருநாமத்திற்கு பாஷ்யம் செய்கிற பகவத்பாதாள் "ப்ரஹ்மாதிபி: பூஜ்யதமைரபி அர்ச்சநீயத்வாத் அர்க:" என்றார்கள். இங்கு ஆதி சப்தத்தால் முந்துற முன்னம் சிவபெருமானைத் தானே கொள்ள வேண்டும். *ஸ ப்ரஹ்மா ஸ சிவ:*" என்று வேதத்தில் தீர்த்தக்ரமம் இப்படித்தானேயுள்ளது. தன்னை அர்ச்சிக்கத் தோன்றியவர்களைத் தான்

அர்ச்சித்தானென்கை அஸங்கதம். *அமிதாசந:* என்கிற திருநாமத்திற்கு பாஷ்யமியற்றுகையில் "ஸம்ஹாரஸமயே விச்வம் அச்நாதீதி அமிதசத:" என்றார் பகவத்பாதர். விச்வசப்தார்த்தத்தில் ப்ரஹ்ம சிவாதிகளும் சேர்ந்தவர்களேயன்றோ.

விஷ்ணுவுக்கு வ்ருஷபாக்ஷ: என்றொரு திருநாமமுள்ளது; நேத்ரார்ப்பண கதை உண்மையாயிருந்தால் இந்தத் திருநாமத்தின் பாஷ்யத்திலே ஒருவாறு இக்கதையைப் புகுத்தியிருக்கலாம் வ்ருஷபபதத்திற்கு வ்ருஷ்பவாஹநனென்று பொருள் கூறி அவருக்கு அக்ஷியைக் கொடுத்தவர் என்று எளிதாக எழுதியிருக்கலாமே. இங்கு சங்கரபாஷ்யம்— * ஸகலாந் காமாந் வர்ஷுகே அக்ஷிணீ அஸ்யேதி வ்ருக்ஷபாக்ஷ: வ்ருஷபோ தர்ம:: ஸ ஏவ வா த்ருஷ்டி ரஸ்யேதி வ்ருஷபாக்ஷ:" என்பதாம். ஸ்வக்ஷ: என்று ஒரு திருநாமம்; சிவார்ச்சனைக்கு உபயோகிக்கப்பட்டவையாகையாலே நல்லவையான கண்களையுடையவர் என்று பாஷ்யம் செய்திருக்கலம்; * "சோபநே புண்டரீகாபே அக்ஷிணீ அஸ்யேதி—ஸ்வக்ஷ:" என்றே பாஷ்யம். *ஸர்வவாகீச்வரேச்வர:* என்றொரு திருநாமம். இங்கு ஸர்வேஷாம் வாகீச்வராணும் ப்ரஹ்மாதீநாம் அபி ஈச்வர:" என்பது பகவத்பாத பாஷ்யம். இங்ஙனே எவ்வளவெடுத்துக் காட்டலாம். ஸர்வேச்வரனை ஈசிதவ்யஸ்தானத்திலே நிறுத்தியும், ஈசிதவ்யர்களை ஈச்வரஸ்தானத்திலே நிறுத்தியும் பேசுவது பாலிசபாஷிதமாகும்.

இங்கே மிகவும் ரஸமானவொரு விஷயத்தை நிரூபணம் செய்து தலைக்கட்டுகிறோம். ஆதிசங்கர பகவத் பாதாள் நாராயணனையே பரதேவதையாகக் கொண்டு நாராயணோபாஸநத்தையே மோக்ஷஸாதநமாகக் கொண்டவர். இது அவருடைய ப்ரஹ்ம ஸூத்ரபாஷ்யத்தில் நன்கு விளங்குகின்றது. (2—2—42) *உத்பத்த்யஸம்பவாத்* என்கிற ஸூத்ரபாஷ்யத்தில் "தத்ர பாகவதா மந்யந்தே" என்று தொடங்கி பாஞ்சராத்ர ப்ரமேயமாக மூன்று விஷயங்களைத் தெரிவித்து இரண்டு விஷயங்களில் தம்முடைய ஸம்மதியைக் காட்டி ஒரு விஷயத்தில் மட்டும் அஸம்மதியைக் காட்டி முடிக்கிறார். ஸம்மதங்களாகத் தெரிவிக்கப்பட்டுள்ள இரண்டு விஷயங்கள் எவையென்னில்; அவருடைய பங்க்திகளையே காட்டுவோம். "தத்ர யத்தாவது ச்யதே யோஸௌ நாராயண: ப்ரஸித்த: பரமாத்மா ஸர்வாத்மா இதி; தத்ந நிராக்ரியதே; யதபி தஸ்ய பகவத் அபிகமநாதிலக்ஷணமாராதநம் அஜஸ்ரம் அநந்ய சித்ததயா அபிப்ரேயதே, ததபி ந ப்ரதிஷித்யதே; ச்ருதிஸ்ம்ருத்யோ: ஈச்வரப்ரணிதாநஸ்ய ப்ரஸித்தத்வாத்" என்பவை சங்கரபகவத் பாதாளுடைய பங்க்திகள் நாராயணனே பரதேவதையென்பதை இங்கு ஸித்தாந்தப்படுத்தியுள்ளார். ஈச்வராதி ஸாமாந்ய சப்தங்களை வாஸுதேவ நாராயணாதி விசேஷ சப்தங்களையிட்டுப் பரதத்வ நிஷ்கர்ஷம் செய்தவாள் ஆதிசங்கர பகவத் பாதாள். அவர்களுடைய பரம்பரையில் நாராயண, நாராயண என்கிற ஸங்கதோச்சாரணமும் *நாராயணஸ்ம்ருதி* என்கிற ஹஸ்த முத்ரையும் இன்றளவும் விபர்யயமடையாமலுள்ளது. இப்போது இவ்வளவோடு முடித்திட்டேன்.

---

## திருமங்கையாழ்வாருடைய ஆறு திவ்யப்ரபந்தங்களின் உரை வெளியீடு

திருமங்கையாழ்வாருடைய அவதார வருஷமான நள வருஷத்தின் நினைவுமலராக அவ்வாழ்வார் அருளிச்செய்த—பெரிய திருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருவெழு கூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல், திருநெடுந்தாண்டகம்—ஆகிய ஆறு திவ்யப் பிரபந்தங்களும் விளக்க உரையோடு அச்சிடப்பட்டு, சிறந்த பைண்டுடன் ஒரே சம்புடமாக 5-12-76ல் வெளிவந்து, பிரசாரமடைந்து வருகிறது. விருப்பமுடையவர்கள் காஞ்சீபுரம் கிரந்தமாலா ஆபீஸில் பெறலாம். விலை ரூ. 30. தபால் செலவு ரூ. 3.

வரசாத்தியமில்லாமல் போய்விட்டது. ஸ்வாமியை தரிசிக்கும் பாக்கியம் கிட்டும் என்று வந்தபலர் அவர் எள்ளாத குறையை வாய்விட்டுச் சொல்லி அவர் சீக்கிரம் குணமடையவேண்டுமென்று ஆண்டாளை பிரார்த்தித்தனர்.

கனபாடி ஸ்ரீமான் பார்த்தசாரதி அய்யங்காருடைய வேத கோஷத்துடன் ஸதஸ் ஆரம்பமாயிற்று. ஸ்ரீ R. V. சேஷாத்திரி அய்யங்காரை ஸதஸ்ஸுக்குத் தலைமை வகிக்கும்படி பிரார்த்தித்துப் பேசின ஸ்ரீகபிஸ்தலம் ஸ்ரீனிவாசய்யங்கார், அவருடைய பாண்டித்யத்தையும் ஸ்ரீகாஞ்சி ஸ்வாமியின் பரமகிருபைக்கும் மதிப்புக்கும் பாத்திரமானவர் என்றும் பேசினார். ஸ்ரீ சேஷாத்திரி அய்யங்கார் தமது பூர்வாங்கபாஷணத்தில் ஸ்ரீகபிஸ்தலம் ஸ்வாமியின் உத்ஸாகமும் ச்ரத்தையும் திருப்பாவையில் 'கோதுகலமுடைய பாவாய்!' என்ற விளியை ஞாபகமூட்டுகிற தென்றார். பிறகு அவர் ஸ்ரீ V. ராமஸ்வாமி அய்யங்கார் என்பவர் திருப்பாவையில் செய்திருக்கும் பல ஆராய்ச்சிகளின் ஸ்வாரஸ்யத்தை விளக்கினார். அடுத்தபடியாக ஸ்ரீமான்கள் உ. வே. பிள்ளை லோகம் பாஷ்யகார்ஸ்வாமி, எம்பார் விஜயராகவாச்சார் ஸ்வாமி, பிள்ளைலோகம் ஸ்தல சயனத்துறைவார் ஸ்வாமி, குமாரவாடி சே ராமாநுஜாசாரியார் ஸ்வாமி, பேராசிரியர் மணவாளய்யங்கார் ஸ்வாமி, புரிசை வரதாச்சாரியார் ஸ்வாமி, ஸ்ரீமதி ஸ்ரீரங்கம் ஸ்ரீரங்கநாச்சியாரம்மாள், ஸ்ரீகாழியூர் தேவராஜன், ஸ்ரீமான் வேளுக்குடி K. வரதாச்சார் ஸ்வாமியின் ஆயுஷ்மான் திருக்குமாரன் இவர்கள் ஒவ்வொருவரும் 2-3 பாசுரங்களைப்பற்றி உபந்யஸித்தனர். பிரசித்திபெற்ற நாவலாசிரியர் சாண்டில்யன் (பாஷ்யம் அய்யங்கார்) ஸ்வாமி ஸ்ரீராமாயணமும் திருப்பாவையும் தெவிட்டாத இன்பம்தரும் ஸ்ரீஸூக்திகள் என்றும் வருஷத்தில் 365 நாளும் உபந்யாஸங்கள் வைத்தாலும் ச்ரோதாக்கள் சோர்வின்றி உத்ஸாகத்துடன் கேட்கின்றனர் என்றார். கடைசியாக உபந்யஸித்த ஸ்ரீமான் உ. வே வேளுக்குடி வரதாச்சாரியார் ஸ்வாமி திருப்பாவைக்கு நம்து பூர்வாசார்யர்கள் தனிப்பட்ட ஸ்தானம் அளித்துள்ளனர் என்றும் வேதார்த்தங்கள் எல்லாம் இதில் அடங்கியிருக்கிறதென்றும் விளக்கிப்பேசினார். ஸபைத் தலைவரான ஸ்ரீ சேஷாத்திரி அய்யங்கார் எல்லா உபந்யாஸகர்களுக்கும் பொன்னாடை போர்த்தி ஸம்பாவனையும் ஸமர்ப்பித்து கௌரவித்தார், அவருடைய முடிவுரைக்குப்பின் ஸ்ரீகபிஸ்தலம் ஸ்வாமி வந்தனோபசாரம் கூற, ஸதஸ்ஸு இனிது முடிந்தது.

நித்யஸ்ரீர் நித்யமங்களம்!

P. B. அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளின் நூல் துறைகள்.

1. நாலாயிர திவ்யப்பிரபந்த வுரைகள்,
2. பூர்வாசார்ய தமிழ்ப்பிரபந்த ,,
3. ஸகல பூர்வாசார்ய ஸ்தோத்ர ,,
4. ஆழ்வாராசார்யப் பிரபாவ நூல்கள்,
5. இதிஹாஸ புராண சரித்திர ,,
6. ரஹஸ்யார்த்த விளக்க ,,
7. வேதாந்தப் பொருள் விளக்க ,,
8. ஸத்ஸம்ப்ரதாயார்த்த விளக்க ,,
9. வேதவிசாரலக்ஷண நூல்கள்.
10. லோகாபிராம உபந்யாஸ நூல்
11. பரபக்ஷப்ரதிக்ஷேப நூல்கள்
12. உபந்யாஸக ஸௌபாக்ய நூல்க
13. வடமொழி நூல் திரள்கள்,
14. ஹிந்தி பாஷையில் நூல்கள்
15. தெலுங்கு பாஷையில் ,,
16. பூர்வாசார்ய க்ரந்த வெளியீடு

விரிவான கியாடலாகுகள் தருவித்து விவரங்காண்க.

சந்தாப்பணம் M. O. செய்பவர்கள்

P. B. ANNANGARACHARYA,
*Editor*, GRANTHAMALA, Kancheepuram-631503

என்ற விலாசத்திற்கு அனுப்புக.

---

If un-delivered please return to:

P. B. ANNANGARACHARYA,
Kanchipuram. Pin Code-631503.

---

To

Sriman/Srimathi

---

Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Satgrantha Prakasana Sabha.

Printed by E. Devarajan at Sri Kamakshi Press,
44-c, Thirukatchinambi Street, Kancheepuram-631503.

P. B. அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளின் நூல் துறைகள்.

1. நாலாயிர திவ்யப்பிரபந்த வுரைகள்,
2. பூர்வாசார்ய தமிழ்ப்பிரபந்த ,,
3. ஸகல பூர்வாசார்ய ஸ்தோத்ர ,,
4. ஆழ்வாராசார்யப் பிரபாவ நூல்கள்,
5. இதிஹாஸ புராண சரித்திர ,,
6. ரஹஸ்யார்த்த விளக்க ,,
7. வேதாந்தப் பொருள் விளக்க ,,
8. ஸத்ஸம்ப்ரதாயார்த்த விளக்க ,,
9. வேதவிசாரலக்ஷண நூல்கள்.
10. லோகாபிராம உபந்யாஸ நூல்க
11. பரபக்ஷப்ரதிக்ஷேப நூல்கள்
12. உபந்யாஸக ஸௌபாக்ய நூல்க
13. வடமொழி நூல் திரள்கள்,
14. ஹிந்தீ பாஷையில் நூல்கள்
15. தெலுங்கு பாஷையில் ,,
16. பூர்வாசார்ய க்ரந்த வெளியீடுக

விரிவான கியாடலாகுகள் தருவித்து விவரங்காண்க.

சந்தாப்பணம் M. O. செய்பவர்கள்

P. B. ANNANGARACHARYA,

*Editor*, GRANTHAMALA, Kancheepuram-631503

என்ற விலாசத்திற்கு அனுப்புக.



If un-delivered please return to :

P. B. ANNANGARACHARYA,

Kanchipuram. Pin Code-631503.

To

Sriman/Srimathi



Edited and Published by P. B. Annangaracharya Swami for Madras Sathgrantha Prakasana Sabha.

Printed by E. Devarajan at Sri Kamakshi Press,
44-c, Thirukatchinambi Street, Kancheepuram-631503.